ஞானி



# கடவுள் ஏன் இன்னும் சாகவில்லை?

| | | |
|---|---|---|
| நூல் | : | கடவுள் ஏன் இன்னும் சாகவில்லை? |
| ஆசிரியர் | : | ஞானி (கி.பழனிச்சாமி) |
| உரிமை | : | பதிவு |
| முதற் பதிப்பு | : | டிசம்பர்,1996 |
| இரண்டாம் பதிப்பு | : | ஆகஸ்ட் 1997 |
| வெளியீடு | : | நிகழ்<br>123 காளீசுவரர் நகர்<br>கோயமுத்தூர் 641 009. |
| விற்பனை உரிமை | : | விஜயா பதிப்பகம்<br>20 இராஜ வீதி<br>கோயமுத்தூர் 641 001.<br>போன்: 394614 |
| அச்சகம் | : | அசோக் கம்ப்யூட்டர் சென்டர்,<br>23, முண்டக நாடார் தெரு,<br>சிவகாசி. போன் 72383 |
| பக்கங்கள் | : | 116+16 |
| விலை | : | ரூ.30/- |

## அணிந்துரை

ஞானி அவர்களின்கையெழுத்தில் இருந்த கட்டுரைகளைப் படித்துப் படியெடுக்கும் போது இளமைதொட்டு எனக்குள் பதிந்திருந்த மதம் தொடர்பான சில அனுபவங்களையும் உணர்வுகளையும் நினைவில் தொகுத்துக் கொள்ளலானேன். சமயம் என எனக்குள் தங்கியிருந்தவற்றை, சமூக உணர்வின் ஆக்கமென, ஞானி கூறுகிறபடி புரிந்து கொண்டேன். இந்த புரிதலை உங்களோடு பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். ஞானியின் கட்டுரைகள் என்னைப் போலவே உங்களுக்கும் உங்களிடம் தங்கியிருக்கும் சமய உணர்வைப் புரிந்துகொள்ளப் பயன்படும் என நம்புகிறேன்.

சின்ன வயதில் தோட்டத்திற்கு அருகில் **உள்ள மலை** அடிவாரத்தில் ரங்கப்பன் கோயிலுக்குச் சனிக்கிழமை தோறும் **செல்வோம்**. அந்தக் கோயிலில் உள்ள பண்டாரம் எங்கள் தோட்டத்து **அரளிச்** செடியிலிருந்த பூக்களையும் தென்னை மரத்திலிருந்து இளநீரையும்கிணற்றிலிருந்து தண்ணீரையும், வாழைமரத்திலிருந்து இலையையும் எடுத்துச் செல்வார். ஆனால் ஒரு பெரிய உருண்டு திரண்ட பாசிபடர்ந்த பாறையையும் அதன்கீழ் கடவுளர்களாகப் பாவிக்கப்பட்ட, நடப்பட்ட கற்களையும் அதற்குத் துணையாக வேலாயுதம் கொண்ட அந்த சிறிய மேடையின் மீது ஏறவோ, பொங்கலிடப்படும் தட்டுகளை தொடவோ கூடாது என்பார். மேகப்புகையைத் தன் தலையில் கவிழ்த்த, செடி கொடி, மரங்களில் பசுமைகோர்த்த நீண்டு உயர்ந்த மலையையும், விதவிதமான மலர்களும், விநோத ஒலிச்சேர்க்கையில் பறவைகளின் கூட்டிசையும், புளயம் பழமும், புளிச்சாம்பழமும் தண்ணிய நிழலும், விளையாட நண்பர்களும், பொங்கலும், அபிஷேகமும், வாரம் தவறாமல் எங்களை அங்கே ஈர்த்துச் செல்லும், பண்டிகைகளின்போது பலகாரம் கிடைக்கும் அமுதசுரபி நாட்கள்.

எங்கள் பாட்டியின் விருப்பப்படியே கிறித்துர்களின் கல்லறையில் அவரது உடலை அடக்கம் செய்தோம். எங்களுக்கு மேல்சாதிக்காரர் சுடுகாட்டில் இடம்கிடையாது எங்காவது புறம்போக்கு குட்டை ஆற்றுப்படுகையில்தான் எங்களது உடல்களைப் புதைக்க வேண்டும். இதன்காரணமாக விரியன்பாம்புக்குட்டிகளான நாங்கள் கிறித்துவத்தில் சேர்ந்தோம். உடலில் ஆங்காங்கே இரத்தக் காயங்களைக் கொண்ட, தலையில் முள்கம்பி சுற்றி, இடையில் ஒரு சிறிய துண்டுகட்டி, கைகால்கள் ஆணிகளின் உதவியோடு சிலுவையில் அறையப்பட்டுத் தொங்கி கொண்டிருந்த இயேசுவைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. மற்றபடி அழகிய பெரிய சர்ச்சும் அலங்காரமான அங்கியில்பாதிரியாரும் வித்தியாசமான வடிவங்களில் வைக்கப்பட்ட உண்டியல்களும் பாடல்களும் பேச்சும் எங்கம்மா மாதிரியேசேலைகட்டிய மாதாவும் எங்களுக்கு கவர்ச்சியாய்த்தான் இருந்தன. சிலுவை டாலர் அணிவது இரவில் செபம்

செய்வதுஉறவினர்களுக்கு முன்னிலையில் பெருமையாக இருந்தது. சில நாட்களுக்குப் பிறகு எங்கள் கிராமத்திலிருந்து நகரத்திற்கு ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் செல்வதுதடைபட்டு வழிதவறிய ஆட்டுக்குட்டி ஆனோம்.

ஆசிரியர்களின் அடியிலிருந்து என்னைக் காப்பாற்றுபவராகவும், தொலைந்த பொருட்கள் திரும்ப கிடைக்கவும், பள்ளிக் கட்டணம் அல்லது அவசரமாகவாங்கியாக வேண்டிய குறிப்பேடு, பாடநூல் வாங்க பணத்தை பெற்றோரிடம் பெற்றுத் தருபவராகவும் கடவுள் இருந்தார். பேய்கள் நாய்களிடமிருந்து காப்பவரும் அவரே. ‘காதுல மயிருமொழச்ச கந்தக்கொறவ பேரனா நீயி’ என இகழப்படும்போது துயரச் சூழலிலிருந்து மீட்கும் பற்றுக் கோடும் அவர்தான்.

எங்கள் தமிழாசிரியர் தமிழவேள் திரு.இராமசாமி அவர்கள் ஆலாந்துறையிலிருந்து கோவைக்கு தி.க. கூட்டங்களுக்கு அழைத்துச் சென்ற போது பெரியாரும் சமதர்மமும் அறிமுகமாயின. துன்பக்கடல் கடக்கும் தோணியாயிருந்த உருவக்கடவுள் என்னிடம் இருந்து முரட்டுத்தனமாக பிடுங்கி எறியப்பட்டார். முன்னைச்செய்தவை அனைத்தும் இகழுதற்கு உரியவையாக ஆயின.

ஆனால் பத்தாம் வகுப்புத் தேர்வில் தவறி ஒரு இரும்புக்கடைக்கு வேலைக்குச் சென்றபோது அந்தக் கடை முதலாளியின் முன்பு உட்காரக் கூடாது, யாரிடமும், பேசக்கூடாது, மாலையில் வரும் செய்தித் தாள்களோ மற்ற நூல்களோ படிக்கக்கூடாது இப்படி முதலாளி கட்டளையிட்டார். அதே சமயம் தொடர்ந்து மழையற்ற ஆண்டுகளின் பிரசவத்தில் கிணற்றின் வயிற்றில் நீர் சுருக்கம் கண்டது. எனவே வீட்டில்வறுமை என்னிடமிருந்த ஒரே ஒரு உடையைவேலைக்குச் சென்று திரும்பிய இரவுபத்து மணிக்குத் துவைத்து உலர்த்தியப்பின் உண்டு உறங்கி விடியலில் எழுந்து ஏழுமணி பேருந்தைப்பிடிக்க ஓடிய அந்த நரக நாட்கள்.

அப்பம் கேட்கும் மகனுக்கு தந்தை கல்லையோ, பாம்பையோ கொடுக்கமாட்டார். துன்பங்களும் ஒரு காலத்தில் நினைத்துப் பார்க்கும் போது இன்பமே. கடவுளுக்குத் தெரியும் எப்பொழுது நமக்கு என்ன தரவேண்டும் என்று மனித மதிப்பீட்டுடன் தூரத்திற்து செல்ல முடியாது.மனிதன் தன் எல்லையில் சோர்ந்து விழும்போது அவனுக்குகடவுள் துணைக்கு வருகிறார் என்ற இத்தகைய கருத்துக்ள்ளாக கடவுள் எனக்குள் துளித்தார்.

மேல்நிலைக்கல்வி முடித்து கல்லூரி சென்ற போது, கடவுள் பூச்சியத்தில் இராச்சியம் செய்பவர் ஆனார்.பாலில் நெய்யினன்; விறகில் தீயினன், உணர்வுகோல் நாட்ட என்னுள் தோன்றும் சோதி, நானே அது

என்ற பெரும்தத்துவமாக எனக்குள் வளர்ந்தார். உருவங்களை, தத்துவங்களின் குறியீடுகளாகக் கருதினேன்.

காந்தி செய்த கீதையின் மொழிபெயர்ப்பைப் படித்த பாதிப்பில் இருந்த போது கல்லூரியிலிருந்து நாட்டு நலப்பணி முகாமுக்காக ஒரு கிராமத்திற்குச் சென்று தங்கியிருந்த போது அன்பின் முழு ஆழத்தோடு பிறர்க்குப் பணி செய்வதில் உள்ள சலியாத உற்சாக ஊற்றைக் கண்டு கொண்டேன். இது எனக்கு பிரம்மம் என்ற அத்வைதத்தில் ஈடுபாட்டை ஏற்படுத்தியது.

இதன்பிறகு என் மாமா எனக்கு பிராணயாமம் கற்றுத்தந்தார். பெரும் தத்துவங்கள் நூல்கள் வேண்டாம் என்றார்.அவை அந்தகாலத்திய அவர்களுடைய அனுபவங்கள். அது உனக்கு உதவாது. அவைகளை நீ உதறிக்கொள் என்றார்.தொடர்ந்து பயிற்சி செய்யச் சொன்னார். அப்பயிற்சியில் சில அனுபவங்களைப் பெற்றேன். ஞானி அவர்களின் கையெழுத்துப் பிரதியைப் படியெடுத்த போது அது என்தேடலின் பாய்ச்சலாக முன்நகர்த்திச் சென்றிருக்கிறது. அதன் வெளிச்சத்தில் கீழ்காணுமாறு என் பார்வையைத் தொகுத்துக் கொள்கிறேன்.

மொத்த விடிவின் பாதையில் இடறும் மதம் / கடவுளை நாம் அதன் உண்மை வடிவில் அறிந்து கொள்வது இந்நிலையில் முக்கியத்துவம் பெறுகிறது. நாம் மதத்துடன் கைகோர்த்துக் கொள்ள இயலாது.ஆனால் அதனுள்ளிருக்கும் கவர்ச்சியான பகுதிகளை, உணர்வெழுச்சிகளை நாம் பறித்துக் கொள்ளவேண்டும். ஒருவகையில் பார்த்தால் இயற்கைக் காட்சியில் நம்மைக் கரைத்துக் கொள்வது, கவிதை போன்ற படைப்பாக்கத்தில் நாம் ஆழ்ந்து விடுவது, உடலுறவு கொள்வது, உறக்கம், இன்னும் வாழ்வின் பல்வேறு நிகழ்வுகளில் மனத்தை ஒன்று குவிப்பதும், ஒரு புள்ளியில் லயிக்க வைப்பதும் இச்செயல்கள் அனைத்துமே முழுமை என்ற பேருணர்வினைத்தொட்டு மறையும் ஒளிப்புள்ளிகள்தான். சமய அனுபவத்தில் நாம் பிரபஞ்ச வெளியில் பஞ்சுப் பொதியாய், எருக்கம் விதையாய் தூக்கி எறியப்படுகிறோம். அதன் மையத்தில் நாம் மிதக்கும் போது, நிதர்சனத்தில் நெகிழ்ந்து, காலாதீதத்தில் கரைந்து, பூரணத்தின் புளகாங்கிதத்தில் புதைந்து விடுகிற போது,நான் மறைந்து,பற்று அறுபட்டு, அனைத்தும் நாமாய் ஒத்த உணர்வாய் ஒன்றித்துப் போய் விடுவதே சமயத்தின் சாரம். வேறுபாட்டின் அடி ஆழத்தில் இணைப்புக்கோடாய் உருக்கொள்ளும் அடிச்சரடு,அது ஒருவரின் அகத்தின் அனுபவத்தில் தேங்கிவிடுவதே பரிதாபத்திற்கு உரிய ஒன்று. அது புறத்தில் தத்துவார்த்தத் தனித்தீவுத்திடல்களாக ஆக்கப்பட்டதே தவிர அனைவருக்குமான அனுபவநிலையாக்கப்படவில்லை. ஆக்கவும் முடியாது. ஏனெனில் மானுடத்தின் இறுதிமுடிச்சு அங்கே தான் அவிழ்க்கப்படவேண்டும்.அது இப்போதைய நிலையில் எட்டாததொலைவின் தொடுவானம் தான்.

ஆனாலும் இந்த அகன்ற ஆழமான அமுபவத்தெறிப்பு, மனித எல்லைக்குள் அடைபட்ட ஒன்றுதான். அது நம் புலன் உணர்வால் உய்த்துணர இயலாத,ஆழ்மனத்தின் ஒரு பகுதியின் விளைச்சலே. அது காமஉணர்வின் (உடலுறவு என்ற செயல்வகைப்பட்டது அல்ல) அடக்கப்பட்ட அல்லது மறக்கப்பட்ட நிலையில் காதலாக, பக்தியாக பரிணமிக்கிறது. இவை இரண்டுமே உளவியலில் உன்மத்த நிலை அல்லது பைத்தியகார நிலை என அழைக்கப்படுகிறது. இந்த உடலும் மனமும் ஒத்த அதிர்வுநிலை சாதாரண வாழ்க்கையிலும் வந்து செல்லும் ஒன்றுதான். ஆனால் சமயவாழ்வில் பயிற்சியாக்கப்பட்டு,நிரந்தரமாக்கப்படுகிறது. அந்நிலையில் கடவுளின்பால் சமயத்தின்பால் வசியப்பட்ட மனம்,உணர்வுச் செதில்களை ஒன்று சேர்த்து, ஒரு நிலையில் தீ பற்றி எரிந்து நம்மை பேரின்பப் பெருவெளிக்குள் தள்ளுகிறது.

இதயத்திரையில் கிழிந்து போன ஓவியமாய், ஒளிமங்கிய ஊனப்பட்ட ஆனால் தனது அழகுவார்ப்பில் அச்சுக்குலையாதபுராதன சிற்பமாய், காலச்சூழலில் விடுபட்டுப்போன கவிதை வரியாய், மலை முடிவில் எஞ்சிவிட்ட மேகத் துணுக்காய், ஊதிய தீக்கங்காய்,நம்முள் கசியும் மனித வரலாற்றின் தொடக்கப்புள்ளி அல்லது வரலாற்றில் சாதனை ஆக்கப்படவேண்டிய தொல் சமூகம் / சோசலிச சமூகத்தின் சிதறல்களாய், மதத்தின் சாரத்தைக் கண்டு கொள்ளவேண்டும்.

நம்மோடும், நம்மைச் சூழ்ந்த சமூகத்தோடும்,இயற்கையோடும் இறுதியில் பிரபஞ்சத்தோடும் கலந்துவிடுகிற சாதனையின் உச்சத்தில்தான் மதம் என்னும் பரத்தைத் தத்துவத்திலிருந்தும்,நம்மிலிருந்தும் உதிர்த்துக் கொள்ள முடியும். அந்த இறுதி இலக்கினை நோக்கிய பயணத்தில்தான் நம் இன்றைய இருத்தலுக்கான நியாயம் இருக்கவேண்டும். அந்த இறுதி விடுதலைக்கான விலையாக நாம் கொடுக்க வேண்டியது கொஞ்சமல்ல. நம் வாழ்வு முறையின் மாற்றம்தான் உலகமாற்றத்தின் முன்னுரை. ஏழ்மையல்ல எளிமைதான் நம் வழி, பொதுமைதான் நம்பார்வை வீச்சாக இருக்க வேண்டும். அன்புதான், காதலால் கசிந்துருகும் மெல்லுணர்வுதான், நம் நீண்ட பயணத்தில் இணைத்து, ஈர்த்துச் செல்லும் ஊடுசரடு / உற்சாகடானிக் நாம் அப்பயணத்தை எம்முனையிலுருந்தேனும் தொடங்கியாக வேண்டிய காலத்தின் கட்டாயத்தில் இருக்கிறோம். அதுவே பகுதிகளின் வழிச்செல்லும் போது, ஒளிப்பொழிவாய், முழுமைக்குள் மூழ்கிவிடுகிற பிரபஞ்சவெளியைத் தன்னுள் காணும் நினைவுக்கனியாம் பூரணத்தை நிகழ்வுக்கனியாய் பெற்றுத்தரும்.

10.11.1996

ஆலாந்துறை

**–உலகநாதன்**

# என்னுரை

கடவுள் இறந்துவிட்டார் என்று நூறாண்டுகளுக்கு முன்பு நீட்சே அறிவித்தார். தமிழ்நாட்டிலும் கடவுள் இல்லை, இல்லவே இல்லை என்ற குரல் பெரியார் மூலம் எழுந்து 60 ஆண்டுகளுக்க மேல் ஆகிறது. எனினும் கடவுள் நம்பிக்கை இங்கு அழிந்துவிடவில்லை. தொடர்ந்து, புதுப்புதுக் கடவுள்கள் தோன்றுகின்றன. இதன் காரணங்கள் ஆழமான ஆய்வுக்குரியவை.

கடவுள் என்று இங்கு நாம் குறிப்பிட்டாலும், கடவுளை உள்ளடக்கியதாகிய சமயம் பற்றித்தான் பேசுகிறோம். கடவுள் நம்பிக்கையை ஒதுக்கிவிட்ட சமயங்களையும் சேர்த்துத்தான் இங்கு குறிப்பிடுகிறோம். சமயம் என்பதை மறுத்து சமயத்தன்மை என்று குறிப்பிடுபவர்களையும் சேர்த்தே சொல்லுகிறோம். ஆழ்ந்து பார்த்தால் கோயில், உருவ வழிபாடு, சடங்குகள், சாத்திரங்கள், புரோகிதர்கள், மந்திரங்கள் முதலிய சமயம் சார்ந்தவை என்று சொல்லப்படுகின்ற செயல் மற்றும் கருத்து வடிவங்கள், சமயத்தின் எல்லைக்கு வெளியிலும் தொடர்ந்து நிலவுவதையும், மாற்ற வடிவங்களில் இவை தொடர்வதையும் நாம் காண்கிறோம். அப்படியானால் சமயம் பற்றிய ஆய்வு இன்னும் ஆழமாகச் செல்லவேண்டும் என்பதை நாம் புரிந்து கொள்கிறோம். இந்த நோக்கிலான ஒருசிறு முயற்சியே இந்த நூல்.

கடவுள் என்பது உயரளவில் ஒரு கருத்தாக்கமே அன்றி வேறில்லை. கடவுள் இருக்கிறார் என்பது என் நம்பிக்கையில்லை. 20ஆம் வயதில் சில தீவிரமான அனுபவங்கள் காரணமாக கடவுள் நம்பிக்கையை நான் கைவிட்டேன். பிறகு எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் கடவுள் நம்பிக்கை எனக்குள் எழவில்லை. துயரம் மிகுந்த சில சூழல்களில், கடவுள் நம்பிக்கை எனக்கு இருந்தால், அந்தத் துயரத்தைத் தாங்கிக் கொள்ள முடியுமே என்று கூடக்கருதினேன். என்னால் ஒதுக்கப்பட்ட கடவுள். என் உதவிக்கு வரவில்லை, வர முடியாது. கண்பார்வையை நான் இழந்தபொழுது, எனக்கு நெருக்கமான நண்பர்களில் ஒருவர், மேல்மருவத்தூருக்கு என்னை அழைத்தார். அவர் வற்புறுத்தலைத் தவிர்க்க இயலாத நிலையில் அவருடன் மேல்மருவத்தூருக்குச் செல்ல ஒப்புக்கொண்டேன். ‘அங்கு நான் யாரையும் வணங்க மாட்டேன்’. என்பாட்டுக்கு எங்காவது ஒரு இடத்தில் அமர்ந்து இருப்பேன். ரெட்டினா சிதைந்த நிலையில் இல்லையென்று நான் அறவே

ஒதுக்கிவிட்ட கடவுளை, நான் தேட வேண்டியிருக்கும். இல்லாதவர் எனக்கு எங்கிருந்து கிடைப்பார்?' இப்படி என் நண்பரிடம் விவாதித்தேன். 'உன்னைத் திருத்தவே முடியாது' என்று சொல்லிவிட்டு என் நண்பர் சென்றுவிட்டார். கடவுளை நான் மறுத்த காலத்திலிருந்து, கடவுள் என்ற கருத்தின் வன்மை மற்றும் மென்மை குறித்து, அநேகமாக இடைவிடாமல் எனக்குள் ஆராய்ந்து வருகிறேன். இதற்காகத் தொடர்ந்து படிக்கிறேன். நண்பர்கள் மற்றும் பெரியவர்களோடு பேசுகிறேன். கடவுள் இல்லை என்று ஒரேவரியில் மறுத்துவிட்டால், இந்த ஆய்வுக்குத் தேவையில்லை. கடவுள் என்ற கருத்தாக்கம் வரலாற்றுச் சூழலில், மனிதர்களின் சில தேவைகளை ஒட்டித் தொடர்ந்து நிலவுகிறது. இந்த உண்மைதான் கடவுள் என்பதன் ஆய்வை நமக்குள் தூண்டுகிறது. ஆழ்ந்து பார்க்கும்பொழுது, பிரபஞ்ச இயக்கத்தினுள்ளும், தனிமனித, மற்றும் வரலாறு சார்ந்த வாழ்வினுள்ளும், எத்தனையோ புதிர்களோடு புதிராகக் கடவள் இருக்கிறார். அதாவது அறிவு நெறியில் தீர்க்கவியலாத இந்தப் புதிர்களில் கடவுள் என்ற கருத்தாக்கம் தங்கியிருக்கிறது. அறிவு செல்லாத, தொடர இயலாத ஆழங்களில் கடவுள் இருக்கிறார். 'உண்மையுமாய் இன்மையுமாய்' என்ற மாணிக்கவாசகர் பாடலில் வெளிப்படும் முரண் வியக்கத்தக்கது.

தமிழக/இந்தியச் சூழலில் கடவுள் என்ற கருத்தாக்கம் நெடுங்காலமாகப் பல்வேறு பரிமாணங்களில் நிலவுகிறது. கடவுள்கள் மற்றும் மதங்கள் புதிது புதிதாகத் தோன்றி வந்துள்ளன. இன்றும் தோன்றுகின்றன. கடவுளர்க்கிடையில் முரணும், மோதலும், இணைப்பும், மாற்றங்களும் அழிவும் ஆக்கமும் நேர்ந்திருக்கின்றன. மதங்களும் இதே முறையில் மாறி வந்திருக்கின்றன. ஒரு ஆய்வாளனுக்கு இந்த வரலாறு கவர்ச்சி தருவதாய் அமையும். கடவுளை மறுத்த பிறகுதான் இத்தகைய ஆய்வுக்கான மனநிலை நமக்கு வாய்க்கும் என்பதும் உண்மை. இதைத்தான் இந்த நூலில் நான் செய்திருக்கிறேன்.

தமிழகச் சூழலில் பெரியாரின் கடவுள் மறுப்பு வாதத்தின் இன்றியமையாமை குறித்து எனக்கு எதிர்க்கருத்தில்லை. எனினும் பெரியாரின் கடவுள் மறுப்பு மட்டுமே நமக்கு போதுமானதாக இல்லை. கடவுள் என்ற கருத்து, பிரபஞ்ச இயக்கத்தினுள்ளும் வரலாற்றினுள்ளும், சமுதாயத்தினுள்ளும், தனிமனித வாழ்வினுள்ளும் ஆழமாக வேரோடியுள்ளது. இதன் ஆழத்தையும், விரிவையும் கண்டறிதலோடு

இவற்றைக் களைவதற்கான செயல்பாடுகளில் நாம் ஈடுபடவில்லையென்றால் கடவுள் சாகமாட்டார்/சாகடிக்க முடியாது. மார்க்சியத்தைப் பொறுத்தவரை, மதம் பற்றிய ஆய்வை பகுத்தறிவுவாத அல்லது இயந்திரவகைப் பொருள் முதல்வாத ஆய்வுக்குள் முடக்கிவிட முடியாது. மார்க்சிய ஆய்வின் பன்முகப் பரிமாணங்களை இந்திய சூழலில் மார்க்சியர் எனத் தம்மைக் கருதிக் கொள்பவர் கவனிக்கப் பெரிதும் தவறினார்கள். நம் சூழலில் மார்க்சியம் இதுவரை அழுத்தம் பெறாததற்கான காரணங்களுள் இதுவும் ஒரு முக்கியமான காரணம். மத ஆய்வைப் பொறுத்தவரை, பெரியாரியமும் மார்க்சியமும் வெவ்வேறு திசைகளில் செல்கின்றன. பெரியாரியத்திற்குத் தாம் சேவை செய்வதாக நம்பும் மார்க்சியர் மார்க்சியத்தின் தனித்தன்மைகளை, ஆற்றலை அறியாதவர்களாக இருக்கிறார்கள்.

சோவியத் யூனியனில் சோசலிசம் தகர்ந்ததை ஒட்டி, மார்க்சியத்திற்கான புதிய வாய்ப்புக்கள் அதிகரித்துள்ளன என்று நான் நம்புகிறேன். உலக அளவில் வரலாறு முதலியவை பற்றிப் புதியவகை ஆய்வுகள் எழுந்துள்ளன. இந்தச் சூழலில் குறிப்பாக இந்தியச் சூழலில் மதம் பற்றி விரிவாக ஆய்வது நமக்கப் பெரிதும் பயன்படும். இந்துமதமும் இந்துத்துவமும் ஒன்றல்ல. இந்துமதத்தைப் புரிந்து கொள்வதற்கும், அதேசமயம் இந்துத்துவத்தை முறியடிப்பதற்கும் மதம் பற்றிய மார்க்சிய ஆய்வுகள் பெரிதும் பயன்படும். இந்நோக்கில் என் ஆய்வுகள் செல்லுகின்றன.

கடவுள் அல்லது மதம் பற்றி விரிவாக எழுதவேண்டும் என்று சில பத்தாண்டுகளாகவே நான் கருதினேன். அவ்வப்பொழுது சில கட்டுரைகளை எழுதினேன். இப்படி எழுதியவற்றில் எனது சமய அனுபவம் குறித்த கட்டுரையொன்றை இந்தநூலில் சேர்த்திருக்கிறேன்.

1957-58 ஆம் ஆண்டுகளில் நான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பயின்றபொழுது எனக்குள் நிகழ்ந்த சில அனுபவங்களை இந்தக் கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறேன். இந்த அனுபவத்தின் ஒரு கட்டத்தில், ஒருநாள் மாலையில் இரத்த வாந்தி எடுத்தேன். சிலநாட்கள் குறைந்த அளவுக்கேனும் தொடர்ந்த இரத்த வாந்தி காரணமாக தியானப்பயிற்சியை நான் கைவிட நேர்ந்தது. இரண்டொரு மாதங்கள் கழித்துதக் காசநோயால் நான் பாதிக்கப்பட்டிருப்பதை

அறிந்தேன். பெருந்துறை மருத்துவமனையில் என்னைச் சேர்த்து எனக்கு மருத்துவம் செய்தனர் என்பெற்றோர். எனக்காக உழைத்த என் பெற்றோரை, என் சகோதரர்களை நான் என்றும் நினைத்துக் கொள்கிறேன். மருத்துவமனையில் இருந்த சமயத்தில் மட்டுமல்லாமல், அதன்பிறகு பல்லாண்டுகள் பலமுறை, திரும்பத்திரும்ப என் சமய அனுபவங்களை ஆய்வுக்குட்படுத்திப் புரிந்து கொள்ள முயன்றேன். என் அனுபவத்தின் ஆதாரத்திலிருந்து தான் சமயம் பற்றிய விமர்சனத்திற்கான தகுதியை நான் பெற்றிருக்கிறேன். குறுகிய கால அளவுக்கு மட்டுமே நான் பெரியாரியத்திற்குள் இருந்தேன். அதைக்கடந்த நிலையில் மார்க்சியத்திற்குள் சென்றேன். இறுதியில் மார்க்சியம்தான் என சமய அனுபவங்களைப் புரிந்து கொள்ளவும், என்னை நானே புரிந்து கொள்ளவும் வாய்ப்பாக அமைந்தது. 70 களின் தொடக்கத்தில் எழுதிய இந்தக் கட்டுரையை இன்று படித்துப் பார்க்கும் பொழுது, சில விவரங்கள் இந்தக் கட்டுரையில் அன்று நான்சேர்க்கவில்லை என்பதை அறிந்து இப்பொழுது சேர்த்திருக்கிறேன்.

96 தொடக்கத்தில் பிப்ரவரி, மார்ச் ஆகிய இரு மாதங்களில் என் அறையில் இருக்கிற, சமயம் பற்றிய சில நூல்களைத் தொடர்ந்து படித்தேன். (என் உதவியாளர் படிக்க, நான் கேட்டேன்). முன்னிரவிலும், பின் அதிகாலையிலும் எனக்குள் தொடர்ந்த சிந்தனைகளைக் காலையில் நானே எழுதினேன். சற்றுப் பெரிய எழுத்துக்களில், ஒருவரியோடு அடுத்த வரி கலந்து விடக்கூடாது என்ற கவனத்தோடு, வரிகளுக்கிடையே சற்றுகூடுதலாகவே இடைவெளிவிட்டு எழுதினேன். (அப்படியும் சில குழப்பங்கள் நேரத்தான் செய்தன). இரண்டு மாதங்களில் சுமார் 50 கட்டுரைகள் இவ்வாறு எழுதிமுடித்தேன்.

சுமார் 30 நூல்கள் (சில பெரிய நூல்களில் சில கட்டுரைகள் மட்டும்) நான் படித்திருப்பேன். (இந்த நூல்களின் பட்டியலை இறுதியில் தந்திருக்கிறேன்). வேறுவேலை குறுக்கிட்டதால் சமயம் பற்றி எழுதுவதை ஒரு கட்டத்தில் நிறுத்தினேன். என் கையெழுத்துப்படிகளைப் படித்து அங்கங்கே திருத்தம் செய்த என் அருமை நண்பர் அறிவன், இதுவரை எழுதியவை போதும், வெளியிடலாமென்று எனக்கு நம்பிக்கை தந்தார். எனக்கு உதவியாளராக சுமார் 8 மாதங்கள் என்னோடு இருந்தவரும், இப்பொழுது என் அரிய நண்பர்களில் ஒருவருமாகிய உலகநாதன், நுண்ணறிவோடு என் கையெழுத்தைப் புரிந்துகொண்டு அன்போடு

அவ்வளவு கட்டுரைகளையும் படிஎடுத்துத் தந்தார். (அவர் படி எடுத்துத் தரவில்லையென்றால் இந்த நூல் வெளி வருவதற்கான சாத்தியமேயில்லை). இப்படி உருவான கட்டுரைகளில் 29 கட்டுரைகளை இந்தத் தொகுப்பில் சேர்த்திருக்கிறேன்.

இன்றும் என மரியாதைக்கும் பேரன்புக்கும் உரியவராகிய எஸ்.வி.ஆர்.அரிய நூல் ஒன்றை எனக்கு 70 களின் இறுதியில் அறிமுகம் செய்தார். பெரிதும் விரும்பி ஆர்வத்தோடு அவர் கற்ற நூல் அது. நூலின் பெயர் GOD IS NOT YET DEAD. நூல் ஆசிரியர் போலந்தின் புகழ்பெற்ற மார்க்சியப் பேரறிஞர் கோடோவ்ஸ்கி (என்று நினைக்கிறேன்) என் கட்டுரைகளை ஒருமுறை வாசித்தபொழுது இந்த நூலின் பெயர் என் நினைவில் எழுந்தது. இதே பெயர் என் நூலுக்கும் பொருத்தமானது என்று தோன்றியது. ஆக, சற்று மாற்றிக் கடவுள் ஏன் இன்னும் சாகவில்லை? என்று பெயரிட்டேன். எனினும், எனக்குள் பல நாள் குழப்பம். என் மனைவி, என்மகன், உன் உதவியாளர் , என் நண்பர்கள் என்று பலரோடும் இந்தப் பெயர் குறித்துச் சற்றுக் கலவரத்தோடுதான் கேட்டேன். சமயப் பற்றுள்ளவர்களை நான் புண்படுத்தக்கூடாது. கடவுள் மறுப்பாளர்கள் முன்னிலையில் நான் கேள்விக்குறியாகிவிடவும் கூடாது. இது எப்படியாயினும் இந்தப்பெயரோடுதான் இந்த நூல் வெளிவருகிறது. கடவுள் நம்பிக்கையாளர்களைப் புண்படுத்துவது என் நோக்கம் அன்று. ஆய்வு நோக்கி அவர்களை ஈர்ப்பது மட்டுமே என் நோக்கம்.

இந்த நூலின் ஆக்கத்திற்காக நான் பலருக்கு நன்றிசொல்ல வேண்டும். இளம் வயதினர் என்றாலும் சமயம் பற்றிய கூர்மையான புரிதல் கொண்டவர் உலகநாதன்.

என் கட்டுரைகளைப் படி எடுத்த பொழுதே தன் சமய அனுபவத்தையும் புரிந்து கொள்ள என் கட்டுரைகள் தனக்குப் ப்யன்பட்டன என்றார் அவர். நான் வற்புறுத்திக் கேட்டுக்கொண்டதால் ஓர் அரிய அணிந்துரையைத் தந்தார். கட்டுரை ஆக்கத்திலும் அவற்றைச் செம்மைப் படுத்துவதிலும் எனக்குப் பேருதவியாக இருந்தவர்கள் என் மரியாதைக்குரிய மைத்துனர் திரு வே.கந்தசாமி அவர்கள் மற்றும், என் நண்பர்கள், அறிவன், மனோகரன், கவிதா, மஞ்சுளாதேவி, தமிழரசி, குமரவேல், மருதுபாண்டியன், அரங்ககோபால், என் உதவியாளர் செங்கல்வி முதலியோர் என் நன்றிக்கு உரியவர்கள்.

கோடேக் நிறுவனம் வெளியிட்ட நூல் ஒன்றிலிருந்து எனது நூலுக்குப் பொருத்தமான முறையில் ஓர் அழகிய நிழற்படத்தைத் தெரிவு செய்து தந்தவர் என்மகன் ப.மாதவன், அட்டையை அழகுற அமைப்பதில் ஓவியர் ஜீவா மற்றும் ஓவியர் விஜய் ஆனந்த் ஒத்துழைத்தனர். மெய்ப்புக்களைத் திருத்துவதில் அயராது உழைத்தவர் நண்பர் மதுசூதனன். கோடேக் நிறுவனத்திற்கும் என் நன்றி.

38 ஆண்டுகள் ஆசிரியையாகப் பணியாற்றி, அண்மையில் ஓய்வு பெற்ற என்துணைவி இந்திராணி, தான் ஓய்வு பெற்றதைக் கொண்டாடும் முறையில் இந்த நூலை வெளியிடுவதற்கான நிதியைத்தன் பணிக்கொடைத் தொகையிலிருந்து நல்கினார்.

நவீன அறிவியல், தொழில் நுட்பம் எனக்கு உவப்புத் தருவது அன்று என்ற போதிலும், தவிர்க்க இயலாத நிலையில் கணிணி முதலிய சாதனங்களை இம்முறை நான் நாட வேண்டியிருந்தது. என் நண்பர் திரு.வேனில் அச்சிடும் பொறுப்பை ஏற்றுக் கொண்டு குறித்த காலத்தில் அச்சுப்பணியை நிறைவேற்றித் தந்தார். அவருக்கும் அச்சகத் தோழர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

'இந்திய வாழ்க்கையும், மார்க்சியமும் (1975)' 'மணல்மேட்டில் ஓர் அழகிய வீடு-ஜே.கே.பற்றிய திறனாய்வுக் குறிப்புக்கள்' (1980) என்ற சமயம் பற்றிய எனது முன்னைய நூல்களைப் போலவே இந்தக் கட்டுரைத் தொகுப்பும் மார்க்சியர் மற்றும் பிற நண்பர்களுக்கிடையில் தீவிரமான எதிர்வினைகளைத் தோற்றுவிக்கும் என நம்புகின்றேன்.

இந்தநூல் நண்பர்களுக்குச் சற்று கூடுதலான அதிர்ச்சியையும், அதேசமயம், சமயம் பற்றி நமக்கு ஆழ்ந்த புரிதல் தேவை என்ற உணர்வையும் ஏற்படுத்தக்கூடும் எனவும் நம்புகின்றேன். இன்றைய சூழலில் மதம் பற்றிய வளமான பார்வையை முன் வைப்பதன் மூலமே சமூக நகர்வுக்கு நாம் உதவியாக இருக்க முடியும். நன்றி.

கோவை
12.11.1996

**ஞானி.**

# காணிக்கை

முறைமையில் அக்கையாய்

ஆதரவில் அன்னையாய்

எங்கள் நெஞ்சில் நிறைந்திருக்கும்

அமரா நஞ்சம்மாள் அவர்களின்

நினைவுக்கும்

எங்கள் குடும்பமென்னும்

ஆலமரத்தின் வேர்களாய்

இன்றும் எங்களுக்கு

உரமாய் ஊற்றாய் விளங்கும்

பெரியமாமா எஸ்.பி.வெங்கடாசலம் அவர்கள்

எங்கள் அன்புத்தாயார் மாரியம்மாள் அவர்கள்

எங்கள் சிறிய அத்தை பாப்பம்மாள் அவர்கள்

ஆகியவர்களுக்கும்

இந்த நூல் என் அன்புக் காணிக்கை.

# உள்ளடக்கம்


| எண். | தலைப்பு | பக்க எண். |
|---|---|---|
| 1. | ஆதியில் பிளவு இல்லை | 1 |
| 2. | ஜே.கே.வின் தரிசனம் | 3 |
| 3. | வேதாத்திரியின் அமைதி நிலை | 6 |
| 4. | காலத்திலும் இடத்திலும் கடவுள் | 10 |
| 5. | கடவுள்-கட்டுடைத்தல் | 13 |
| 6. | உயிரியக்கம் | 16 |
| 7. | விடுதலை இறையியல் | 19 |
| 8. | புதிர்களில் கடவுள் | 24 |
| 9. | சமயம்-அறிவுக்குவியம் | 29 |
| 10. | இந்துமதம் | 32 |
| 11. | பகவத்கீதை - பன்மைப்பொருள் | 36 |
| 12. | ஓசோவின் வெளிச்சம் | 41 |
| 13. | நீட்சேவின் அதிமானுடன் | 43 |
| 14. | இறப்புக்குப் பின்னர்... | 45 |
| 15. | மனோவசியம் | 48 |
| 16. | காந்தியின் இந்துமதம் | 50 |

| | | |
|---|---|---|
| 17. | கடவுளும், பிசாசும் | 52 |
| 18. | புரோகிதம் | 55 |
| 19. | பகவன் கீதை - சமதர்ம நோக்கு | 57 |
| 20. | மார்க்சிய மெய்யியல் | 59 |
| 21. | எது முதலில்? வாழ்வா? இறைவனா? | 63 |
| 22. | எது நம்பார்வைக் கோணம்? | 66 |
| 23. | சமயம் - இராகுலர் பார்வை | 70 |
| 24. | மதம் மக்களுக்கு அபின் | 76 |
| 25. | பெரியாரியம், சீக்கியம், இஸ்லாம் | 82 |
| 26. | மதவாத அரசியல் | 87 |
| 27. | மதத்தின் தர்க்கம் | 91 |
| 28. | இறைவன் - ஓர் அழகிய பின்னல் | 95 |
| 29. | வானம் நமக்கு வசப்படும் | 97 |
| 30. | சமயம் - என் அனுபவம் | 101 |
| | பார்வை நூல்கள் | 114 |

## 1. ஆதியில் பிளவு இல்லை

உலகம் பிளவுபட்டு இருந்தபோதிலும்
மனிதன் தனக்குள் பிளவு அற்றநிலை
பெறவேண்டும். இது கடவுள் நிலை.

Ode to immortality என்ற வேர்ட்ஸ் வொர்த் அவர்களின் கவிதை, புகழ் பெற்ற கவிதை. குழந்தை சிரிக்கிறது, தெய்வீகச் சிரிப்பு. சற்று முன்னர்தான், இறைவனை விட்டுப் பிரிந்து வந்த குழந்தை இன்னும் அந்த மேலுலகத்தின் மணம், கவர்ச்சி, தெய்வீகம் கமழ்கிறது. மாதங்கள் கழிய, வயது ஏற, உலகியல் பற்றிக்கொள்ள குழந்தைமை மாறிவிடுகிறது. கள்ளத்தன்மை புகுந்து விடுகிறது. இப்பொழுது மனிதனாகிவிடுகிறான். மனிதனைத் துயரங்கள் கவ்விக் கொள்கின்றன. மீண்டும் குழந்தைமைக்குத் திரும்பினால் மட்டுமே மனிதனுக்கு விடுதலை.

வேர்ட்ஸ்வொர்த் கிறித்துவர், மேற்கு உலகத்தவர், பிரெஞ்சுப்புரட்சி அவர் மனத்தைக் கலவரப்படுத்தியது. அவருக்கு அமைதி, மெய்யியல் தேவைப்பட்டது. அவர் சிந்தனை இப்படிச் சென்றது. அவரிடம் கிரேக்கச் சிந்தனையின் சாயல் தெரிகிறது. கிறித்துவம், ஆதிமனிதனின் ஈடன் தோட்டம் பற்றிப் பேசுகிறது. தொடக்கநிலை, தெய்வீகம், பிறகுதான் சாத்தான், பாம்பு, அறிவின் வருகை. அதைத் தொடர்ந்தே, மனிதப் பிளவுகள்-துயரங்கள் கிறித்துவம் மட்டும் அல்லாமல், எல்லா மதங்களிலுமே இந்தச் சிந்தனையை நாம் காண முடியும். உயிர்கள் மூலத்தில் இறைவனோடு இருந்தன. இறைவன் கருணைமிக்கவன். உயிர்களுக்கு உடல் வழங்கினான். உலகத்திற்கு அனுப்பினான். மனிதன் தன் அனுபவத்தோடு தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். உலகச்சூழலில் தான் இது சாத்தியம். இறைவன், உயிர்களுக்குத் துயரங்கள் வழங்கி, அவற்றின் மூலமே உயிர்களைத் தூய்மைப்படுத்துகிறான். துயரங்கள், சோதனைகள், தடைகள் அல்ல சமூக இயலை இது முன்வைப்பதாகவே நாம் கருதலாம்.

ஹெகல், ஒருமை பற்றி, பரப்பிரம்மம் பற்றிப் பேசினார் தொடக்கத்தில் இரண்டு அற்றநிலை. பிரம்மம் தன்னை உலகமாக மாற்றிக் கொள்கிறது. உயிர்களின் மூலம், இயக்கம், உணர்வு கொள்கிறது. மனிதனாகிறது. இறுதியில் ஜெர்மானியச் சூழலில், ஹெகல் மூலம், பிரம்மம் தன்னைப் பிரம்மம் என்று உணர்கிறது. தன்னுணர்வு பெறுகிறது. உலகியல் வரலாறு முற்றுப் பெறுகிறது. இயங்கியல் இடையில் ஏற்பட்டது. இது அந்நியமாதல் மற்றும் வரலாறு.

காரல் மார்க்ஸ் இந்த இயக்கத்தைத் தன் போக்கில் விளக்குகிறார். இயற்கையோடு, சமுதாயத்தோடு, தன்னோடு, பிரிவற்றவன் மனிதன். ஆதிப்பொதுமைச் சூழல், வர்க்க வேறுபாடுகள் சார்ந்ததை அடுத்து

மனிதனுக்கு ஏற்படுவது அந்நியமாதல், முதலாளியச் சமூகத்தில் அந்நியமாதல், உச்சம் பெறுகிறது. இதை மனிதன் கடந்து சென்று, மீண்டும் இயற்கையோடும், சமுதாயத்தோடும், தன்னோடும் இரண்டற்ற, பிளவற்ற நிலை அடைய வேண்டும். இந்த நிலை கம்யூனிசம், ஹெகலை, மார்க்ஸ் இவ்வாறு நேர்ப்படுத்தினார். சிந்தனையிலிருந்து உலகம் பிறக்கவில்லை. உலகம்தான் சிந்தனைக்கு ஆதாரம்.

குழந்தைப் பருவத்தில், பிளவு இல்லை. துயரம் இல்லை. உலகச்சூழலில் வளரும்பொழுது தான் பிரச்சனை துயரம். ஆகவே மனிதன், மீண்டும் பழமைக்குள், குழந்தைப் பருவச்சிந்தனைக்குள், இறுதியாகத் தாயின் கருப்பைக்குள் சென்று, நிம்மதியாக இரண்டு அற்று உயிர்க்க விரும்புகிறான். சமயம் என்பதன் இயக்கம், இத்தகையதுதான் என்கிறார் பிராய்டு.

இந்தியச் சிந்தனையாளர்கள், தியானம் என்பது பற்றி நிறையப் பேசுகிறார்கள். உலகச் சூழலில் சாத்தியம் இல்லாத, இரண்டு அற்ற நிலையை, மனிதன், தியானத்தின்போது சிந்தனையற்ற நிலை எய்துவதன் மூலம் அடையலாம். இதற்காக எத்தனையோ தியானமுறைகள்.

மேற்கண்ட பல்வேறு வகைப்பட்ட சித்திரிப்புகளிலிருந்து பொதுவான ஒரு போக்கைக் காண்கிறோம். மனிதன் தனக்குள் பிளவு அற்று இருக்க வேண்டும். உலகம், சமுதாயம், பிளவுபட்டு இருக்கக் கூடாது. உலகம் பிளவுபட்டு இருந்தபோதிலும், மனிதன் தனக்குள் பிளவு அற்ற நிலை பெறவேண்டும். கடவுள்தான் பிளவு அற்றவர். அல்லது கடவுள் நம்பிக்கை இல்லை என்றாலும், சிந்தனை அற்ற நிலையே, பிளவு அற்ற நிலை. பிளவு-முரண் அற்றநிலை, சாத்தியம்தானா என்ற கேள்வியை ஒதுக்கி வைத்து, மேற்குறிப்பிட்ட சிந்தனை முறையில் சமயத்தன்மையைக் கண்டு கொள்ளலாம்.

சமயங்கள், இருமை என்றும் மும்மை என்றும் பேசினாலும், ஒருமை என்பதையே இறுதிநிலையாகக் கொள்கின்றன. இறைவனோடு - இறைமையோடு, மனிதன் இணைய வேண்டும். இணைதல் என்பது கலப்பு உடையதாகவோ - கலப்பு அற்ற கரைதலாகவோ இருக்கக் கூடும். சாமீபம் சாயுச்சியம் இப்படி ஏதோ ஒரு நிலை. காதலன் - காதலி உறவு நண்பருக்கிடையிலான உறவு பெற்றோர் உடன் கொள்ளும் உறவு. இப்படி ஏதோ ஒரு வகை - இணைவு - ஐக்கியம், அந்நியமற்ற, பிளவு அற்ற தன்மை. இவ்வகையில் மார்க்சியமும், ஒரு வகையில் சமயம் சார்ந்தது அல்லது சமயத்தின் பிரச்சினையை, மார்க்சியம் தன்னளவில் புரிந்து விளக்கும் முயற்சி சமயவாதிகளிடம் இல்லாத தெளிவு - மார்க்சிடம் இருப்பதாகக் கருதலாம்.

## 2. ஜே.கே.வின் தரிசனம்.

$E=MC^2$ / வர்க்கப் போராட்டத்தின்/
ஆதாரத்தில் வரலாறு பற்றிய வெளிச்சங்கள்/
பரிணாமக் கோட்பாடு முதலியவை தரிசனங்கள்.

சமய வாழ்க்கை என்றால் என்ன என்ற கேள்விக்கு, அன்பு செய்தல் என்கிறார் ஜே.கே. சமயம், வாழ்க்கை, அன்பு என்பன எல்லாமே ஒன்றுதான் என்கிறார். அன்புதான் சுதந்திரம், சுதந்திரம் என்பது அறிந்தவற்றிலிருந்து விடுதலை என்கிறார். சூத்திரவாதம் / வறட்டுவாதம் கூடாது என்கிறார். பகுதிப்பார்வைதான், கட்சி, கோட்பாடுகளைப் படைக்கிறது. முழுமையாகப் பார் என்கிறார். பார்த்தல், முழுமையாகப் பார்த்தல் - விழிப்புணர்வு நிதர்சனம் என்பதை மையப்படுத்துகிறார். இயற்கைக் காட்சிகள், மரம், மாலைவானக் காட்சி, ஆகியவற்றைப்பார்த்து ரசித்து மகிழும்போது பழமைக்குள், கடந்த காலத்திற்குள் நாம் செல்வதில்லை. நிகழில் இருக்கிறோம். இதுதான் நிதர்சனம். இவற்றைப் பேசும் போதே முழுமை, தரிசனம் - **Insight** பற்றியும் ஜே.கே.சொல்கிறார். ஜே.கே.வைப்புரிந்து கொள்ள நாம் முயற்சி செய்ய வேண்டும். புரிதல், கவனித்தல், என்பனவற்றுக்கு அவர் தரும் முக்கியத்துவம் கவனத்திற்குரியது.

கட்சி வாதத்திற்குள், அகப்பட்டு நிகழ்காலத்தை, நமக்கு எதிரில் உள்ளவற்றை, நமக்குள் நிகழ்ந்து கொண்டிருப்பனவற்றை, நாம் கவனிக்கத் தவறக்கூடாது. குரு சொல்வதற்குள் நம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாது. நிறுவனத்தின் தேவைக்காக, நம்மை, நம் சுதந்திரத்தை இழந்துவிடக்கூடாது. நாம் இன்னொருவரின் கருவியாக மாறிவிடக்கூடது. பழமைக்குள் மூழ்கிப் பகை வளர்க்கக் கூடாது. மூடநம்பிக்கைகளுக்குள் நாம் முடங்கக் கூடாது. அன்பாக இருத்தலுக்கு எதுவும் தடையாகக் கூடாது. வானக் காட்சியைப் பார்க்கும்பொழுது, அதில் கரையும் பொழுது, நம்மை மெல்ல மெல்ல இழக்கிறோம். இயற்கையை இரசிக்க மாட்டாதவன் பிறரிடம் அன்பு செய்ய முடியாது என்கிறார் ஜே.கே:கிறித்துவனா, நம் கட்சிக்காரனா என்று பார்த்து அன்பு செய்ய முடியாது. அன்பாக இருத்தல்தான் அன்புசெய்தல். இதுதான் சமயம், சமய வாழ்க்கை. காமம் தன்னைத் துன்புறுத்துகிறது என்பதற்காக உறுப்பை வெட்டிக் கொண்ட ஒரு சந்நியாசிக்கு, அன்பு தெரியாது. அவன் தன்னையே முழுமையாகப் பார்க்கவில்லை. கோபம், வன்முறை, பொறாமை ஆகிய உணர்வுகளை, அவற்றின் இயக்கத்தின்போது கவனிக்க வேண்டும்.

ஜே.கே.பார்வையில் நமக்கு உடன்பாடான அம்சங்களை இப்பொழுது கவனிக்கலாம். கிறித்தவர்கள் இயேசுவை இயேசுவின் வாழ்க்கையை வறட்டுவாதச் கோட்பாடாக மாற்றியிருக்கிறார்கள். அவரது பிறப்புக்கு முன்னர் தொடங்கி, அவர் இறப்புக்குப் பின்னரும்

எல்லாவற்றையும் வறட்டுக் கோட்பாட்டு வாதமாக்கி இருக்கிறார்கள் பிறமதங்களும் இதேபோலத்தான். ஒரு விஞ்ஞானிகூட நியூட்டன் கூறியதுதான் சரி என்று முடங்கினால் ஐன்ஸ்டின் வந்திருக்க முடியாது. இந்த உண்மை, எல்லாக் களங்களுக்கும் பொருந்தும். புரிந்து கொள்வதற்கு நிதர்சனப் பார்வை மிக அவசியம். இதற்கு, முன்னையது பற்றிய பார்வை, கருத்து தடையாக இருக்ககூடாது. நிகழை விளக்கப் பழையது, முன்னையது உதவ வேண்டும். நிகழ என்பது தொடர்ச்சியிலும்தான் இருக்கிறது. மருத்துவம்பார்த்தல் எவ்வளவு இன்றியமையாததோ அதுபோல, வரலாற்றில் சில போக்குகளை மாற்றுவதும் அவசியம். இதற்கு வரலாற்றுப் பார்வை இல்லாமல் முடியாது. இயேசுவை வைத்து, ஒரு கோட்பாட்டை உருவாக்குவதன் மூலம், வரலாற்று இயக்கத்திற்கு வழிகாட்ட முடியும். திருச்சபை, இதற்குத் தடையாக இருக்க முடியாது.

தன்னலம் எல்லாவற்றையும் தடுக்கும். முடக்கும். நமக்குள்ளும் நுட்பமாக, ஆழமாகத் தன்னலம் பதுங்கியிருக்க முடியும். சர்வாதிகாரிகள், தலைவர்கள், குருமார்கள் தன்னலத்தோடு செயல்படுவதை நாம் புரிந்து கொள்ள முடியும். நிறுவனம், சட்டங்கள், அதிகாரம், சொத்து, தலைமை - இவை தன்னலச் சார்புடையவை. ஆபத்துக் காலங்களில், தன்னலம் தன் கட்சி, தன்மதம் பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது. கடவுள் பற்றிய கோட்பாடு, கருத்தியல் என்பதும் பழமைக்குள் இருந்து எடுக்கப்படுவதாக இருக்கிறது. கடவுள் என்பதைப் பற்றிய சரியான புரிதல் தேவை.

ஜே.கே.வின் கோட்பாடு, இதைக் கோட்பாடு என்றுதான் குறிக்க முடியும். அதே வடிவில் நம்மால் ஏற்கக் கூடியதாக இல்லை. செயலூக்கத்தை அது வளர்க்க முடியாது. செயலற்ற தன்மைக்குத்தான் அது வழிகூறுகிறது. போட்டி, பொறாமை முதலிய தன்னலச் சார்பான குணங்களோடு மனிதன் இயங்குவதை ஜே.கே.பார்வை விமர்சனம் செய்கிறது. இதுஏற்கத்தக்கது.

சமயம் என்பதைச் சமயவாதமாக்கிவிடுவதை மறுக்கிறது. நிறுவனமாக்கலை மறுக்கிறது. நிறுவனம் என்பது மடமாக, அதிகார நிறுவன்மாக, இறுகுவது பற்றிய எச்சரிக்கை உணர்வோடு, நிறுவனத்திற்குள் இயங்குவது என்பது அவசியம். இப்படி ஜே.கே.வை நாம் எடுத்துக் கொள்ளலாம்.

இயற்கையை நாம் மனம் நெகிழ்ந்து கவனிக்கிறோம். கரைகிறோம். ஒரு குழந்தையைப் பார்த்ததும், மனம் நெகிழ்ந்து உறவாடுகிறோம். மனம் நெகிழ்தலின் போது கடந்த காலம் இடையில் வருவதில்லை. நிகழோடு-நிதர்சனத்தோடு நாம் முழுமையாகவே உறவு கொள்கிறோம். உறவு கொள்வது பற்றி ஜே.கே.சொல்வது உண்மைதான் என்று நாம் சொல்ல முடியும். ஆனால் இயற்கையும் இன்று மாசுபடுத்தப்படுகிறது. மனிதர்களின்

தன்னலத்திற்கு, அதிகாரத்திற்கு உள்ளாகிறது. நோய்வாய்ப்பட்ட குழந்தையை ரசித்துக் கொண்டிருக்க முடியாது. இன்றைய உலகச்சூழல், இப்படித்தான் அனைத்தையும் மாற்றியிருக்கிறது. இயற்கையைக் கவனிக்கும்போது, நாம் எப்படிக் கவனிக்கிறோம் என்பது ஜே.கே.அணுகல் முறைக்கு-அறிதல் முறைக்கு உதாரணமாகலாம். இது உதாரணம் மட்டும். இதிலிருந்து ஒரு நெறியை, கவனித்தல் முறையை நாம் எடுத்துக் கொள்ளலாம். மற்றபடி, இதனையே முழுமையாக்கவும் முடியாது முழுமையாகப் பார்த்தல் என்றும், எல்லாச் சூழலிலும் சாத்தியமும் இல்லை. முழுமையைப் பார்த்தல் என்பதுகூட ஒரு கோட்பாடாக, வாதமாக மாறிவிடலாம். பகுதிகளின் வழியே செல்லும் பார்வை, சில சமயங்களில், முழுமை நோக்கிய தரிசனமாகவும் மாறக்கூடும்.

ஜே.கே.சில சந்தர்ப்பங்களில் தரிசனம் என்றும் the unknown என்றும் கூறுகிறார். குரங்கின் கை பற்றிக் கொண்டிருக்கும்போது, குரங்குக்கும் நமக்கும் உள்ள எல்லை - வரையறை அழிந்து நமக்குள் பெருந்தரிசனம் நிகழ்வதை ஜே.கே.கூறுகிறார். வானக்காட்சியின் எல்லையற்ற தன்மைக்குள் - நிரந்தரத்திற்குள் - நாம் மூழ்கி, இயங்குவது பற்றியும் ஜே.கே.கூறுகிறார். The Eternal-காலமற்றது-the Timeless என்றெல்லாம் ஜே.கே.கூறுவது நம் ஆழ்ந்த கவனித்தலுக்கு உரியது. நிர்வாணம் - சூன்யம் - பிரம்மம் என்ற கருத்துக்களையும் இங்கு நினைவு கொள்ளலாம். சமயங்கள், இவ்வகைத் தரிசனங்களில் நம்மை இணைத்திருக்கின்றன. சமயத்தின் உயிரியக்கம் இந்தத் தரிசனத்தில்தான் இருக்கிறது. இத்தகைய தரிசனம்தான் முழுமையாகப் பார்த்தல். இதுதான் சரியாகப் பார்த்தல், கேட்டல், கவனித்தல். இத்தகைய தரிசனத்திற்கு ஆழ்ந்த அறிவு உள்ளூற இயங்கவேண்டும். வரலாறு, அறிவியல் என்பதும், வாழ்வியல் அனுபவங்கள் என்பதும் எவ்வளவோ நமக்குள் உரமாக இருக்க வேண்டும். நமது நெருக்கடிகளிலிருந்து வெளியேற்றத்திற்கான ஒரு உயர்அளவு முயற்சியின்போதுதான் இந்த தரிசனம் சாத்தியம். E=MC, வர்க்கப் போராட்டத்தின் ஆதாரத்தில் வரலாறுபற்றிய வெளிச்சங்கள், பரிணாமக் கோட்பாடு முதலியவை தரிசனங்கள், இவற்றின் போதாமை பற்றி நாம் தொடர்ந்து வரும் அனுபவங்களில் அறிந்து, மேலும் தீவிரமாகத் தேடலில் ஈடுபட்டு, பிறகு பிறிதொரு சந்தர்ப்பத்தில் வேறு தரிசனங்கள் பெறுகிறோம். வெளிப்படுத்தல் என்பதும் இதுதான். இயேசு முதலியவர்கள் இத்தகைய தரிசனங்களின் போதுதான். வெட்டவெளியில் நம்மைத் தூக்கி எறிகிறார்கள். சாவை ஏற்கிறார்கள். the Irrational என்று இவை கூறப்பட்டாலும் இவற்றுக்கு அடியில் Rationality அறிவியக்கம் இருப்பதைப் புரிந்து கொள்ள முடியும். கலைஞர்கள் இம்முறையில் அறிவாளர்கள்.

## 3. வேதாத்திரியின் "அமைதிநிலை"

சமயம் தன்னை உணர்ந்து கொண்ட நிலையில்
தன்னைத் தக்கவைத்துக் கொள்ளும்

வேதாத்திரி மகரிஷி தன் சமயக்கோட்பாடு பற்றி விரிவாகப் பேசுகிறார். பிரபஞ்ச இயக்கம் பற்றி நியூட்டன், ஐன்ஸ்டீன் ஆகியவர்களின் அறிவியல் கோட்பாடுகள், போதா என்ற முறையில் தன் விளக்கங்களை முன்வைக்கிறார்.

தொடக்கத்தில்-பிரபஞ்சம் தோற்றம் கொள்வதற்கு முன்னர் -என்ற தொடக்கப் புள்ளியிலிருந்து தொடங்குகிறார். வெளி என்பதைத் தன்போக்கில் விளக்குகிறார். காந்தசக்தி என்கிறார். மனிதனின், உயிர்களின் உணர்வு பற்றிச் சொல்கிறார். பிரபஞ்ச இயக்கத்திற்கும் மனிதப் பிரச்சினைகளுக்கும், இயக்கத்திற்கும், மனித இருப்பு மற்றும் உணர்வுக்கும் உறவு கூறுகிறார். விரிவாக அவர் கூறுவதை நாம் கீழ்க்கண்டவாறு புரிந்து கொள்கிறோம்.

மனிதனுக்கு நெடுங்காலமாக, தன் பிரக்ஞை அல்லது உணர்வு என்பது என்ன என்பது ஒரு புதிராக இருந்திருக்கிறது. இந்த உணர்வுதான் தெய்வங்கள், பிசாசுகள், நம்பிக்கைகள் என்று எத்தனையோ தோற்றங்களைத் தந்திருக்கிறது. மனிதனின் தன்னுணர்வை மனிதனுக்கும் அல்லது உயிர்வகைகளுக்கும் மட்டுமே உரிய உணர்வு என்று விளக்கம் தருவது போதாததாக இருந்திருக்கிறது. உயிர்கள் தன்னில் தன்னை இப்படி நிலை நிறுத்திக் கொள்கின்றன. இதற்கு மாறாக, தனது இருப்புக்கு வேறொரு தன்னைக் காட்டிலும் மிகப்பெரியதொரு ஆதாரசக்தியில் தன்னை நிறுத்திக் கொள்வது மனிதனுக்குத் தேவையாக இருந்திருக்கிறது. இந்நிலையில்தான், பிரபஞ்ச இயக்கத்தில் வைத்துத் தன்னைக் காண்பதாகிய போக்கு ஏற்பட்டிருக்கிறது.

அதாவது பிரபஞ்ச இயக்கத்தின் பகுதியாக, அதனோடு கரைந்ததாக மனித-உயிர்களின் இயக்கம் இருப்பதாகத் தன்னைக் காண்பது இந்தநிலை. இது ஆதிநிலை, அமைதி நிலை, உணர்வு அற்ற நிலை. ஆதிநிலை, இயக்கம் அற்றது எனத் தோன்றும் நிலை. எனினும், இயக்கமற்றதாக இது இருந்தது என்று கொண்டால், அடுத்து வரும் இயக்கத்தை விளக்க முடியாது என்பதால், அழுத்தத்தோடு கூடியதாக இந்த இயக்கத்தை வேதாத்திரி காண்கிறார். இந்த அழுத்தம் காரணமாக, தன்னிலிருந்து விடுபட்ட - தோற்றுவிக்கப்பட்ட - தூசுகள் தொடர்ந்து சுழன்று இயங்கி நட்சத்திரங்கள், கோள்களைத் தோற்றுவிக்கின்றன

இப்படி விரிவாக விளக்கங்கள் தருகிறார். இதன் தொடர்ச்சியாகத் தான் பரிணாமம் பற்றியும் பேசுகிறார். சிக்கலானது என்று தோன்றுகிற

வேதாத்திரி அவர்களின் சிந்தனைப் போக்கை, நாம் புரிந்து கொள்ளும் அணுகுமுறை பற்றி இங்கு சொல்ல வேண்டியிருக்கிறது.

அடிப்படையில், மனிதன் தன் இருப்பை பிரபஞ்ச இயக்கத்தின் பகுதியாகக் காண்பதன் மூலமே தனக்குப் பாதுகாப்பு என்று உணர்ந்தான். பகுதி என்று உணரும்போது இரட்டைநிலை. மாறாக, பிரபஞ்சத்தில் தன்னைக் கரைத்துக் கொள்வது ஒருமைநிலை. இருமைநிலையும், ஒருமை நிலையும் மாறிமாறி மனிதச் சிந்தனையை ஆட்கொண்டிருக்கின்றன. இது தர்க்கம் அல்லால் வேறு இல்லை. சமயம் என்பதை இந்தத் தர்க்கம் தான் தோற்றுவிக்கிறது.

எங்காவது ஒன்றிலிருந்துதான், எல்லாமே தோன்றியிருக்க வேண்டும் என்பதுதான், மனித அனுபவநிலை. ஆதிமனிதனின் சிந்தனை இதுதான். கடவுள் என்பது இன்று மறுப்புக்கு உள்ளாகியிருக்கிற சூழலில் வேறு தத்துவங்கள் தேவை. வேதாத்திரி இதற்கு விலக்கல்ல. தொடக்கத்தில் ஒன்று இருந்தது எனத் தொடங்க முடியாது. அது இன்மையாக இருந்தது என்று தொடங்க வேண்டும். இது ஒருமுனை. மற்றொரு முனை - மனித அமைதிநிலை. மனித உணர்வில் 0-புள்ளி என்கிறார் வேதாத்திரி.

தியானநிலையில் உணர்வுகள் குறைந்து குறைந்து இறுதியாக உணர்வு அற்ற 0-நிலைக்கே நாம் போய் சேர்கிறோம் என்கிறார். 0 நிலையில் எல்லாமே பிரபஞ்ச இயக்கம் உட்பட எல்லாமே வெளிப்படுகின்றன என்கிறார். இதுவும் தர்க்கம் அன்றி வேறு இல்லை. பிரபஞ்ச இயக்கத்தில் தன்னைக் கரைத்துக் கொள்வதன் மூலம், துன்பமற்ற-கலக்கமற்ற மனநிலை-மனம் அற்ற அமைதிநிலை சாத்தியம்-மற்றும் தேவை என்பதுதான் வேதாத்திரி அவர்களின் சிந்தனையின் மையம். இத்தகைய நிலை எந்த அளவில், சாத்தியம் என்ற கேள்விக்கு இப்பொழுது அவசியம் இல்லை. இங்கு நாம் கவனிக்க வேண்டிய உண்மை முக்கியம். இந்தச் சிந்தனை முறை சமயம் என்பதுதான். இந்த உணர்வு நிலையைச் சமயம் என்றுதான் புரிந்து கொள்ள முடியும். பிரபஞ்சம் பற்றிய அறிவியல் விளக்கங்கள் உட்பட எல்லாவற்றையும், இப்படித்தான் புரிந்து கொள்ள முடியும். சங்கரரின் ஒருமை முதலிய தத்துவங்கள் இப்படித்தான் தோன்றின. சங்கரரின் ஒருமை நிலையைத்தான் வேதாத்திரி தன் போக்கில் நம் காலத்திற்கு ஏற்றது என்ற முறையில் விளக்க முனைந்திருக்கிறார். இன்றைய அறிவியல் உலகம் அறிவியல் சார்ந்த விளக்கங்களைக் கோருகிறது.

இது சிந்தனையாளர்களின் சமயம், அல்லது அறிவாளிகள் என்று தம்மைக் கருதிக் கொள்பவர்களின் சமயம். பிரபஞ்ச இயக்கத்தையும் மனித/ உயிர்களின் இயக்கத்தையும், ஒரு மூலத்திலிருந்து விளக்க முனைந்த தர்க்கத்தின் சமயம் இது. மனிதன் நெடுங்காலமாக இந்த தர்க்கத்திற்குள்

மாட்டிக் கொண்டான். ஒருமை நிலையைத் தேடிச் செல்வது இந்தியச் சிந்தனை முறையின் ஒரு முக்கியப்போக்கு என்று கூறலாம். தாய்த்தெய்வங்களுக்கு முக்கியத்துவம் ஏற்பட்டிருப்பது இதனால்தான். பிராய்டு தந்த சமயம் பற்றிய விளக்கம், இதைப் புரிந்து கொள்ளக்கூடியதாக இருக்கிறது. புறத்திலிருந்து நிறைய அனுபவங்களோடு, சிக்கல்களோடு தனக்குள் விலகிச் செல்லும்போது அடிமன இயக்கத்திற்குள் இறங்கிய நிலையில் பிராய்டு மற்றும் யங் தரும் விளக்கங்கள் இங்கு நினைக்கத்தக்கவை.

இந்தியச் சிந்தனை முறை பற்றிய விளக்கம் தரும் அறிஞர்கள். இந்தியாவின் வளமான இயற்கை பற்றிக்கூறியிருக்கிறார்கள். உழவர் சமூகம் பற்றிக்கூறியிருக்கிறார்கள். தாய்மைச் சமூகம் முற்றாக அழியவில்லை என்றும் குறிப்பிடுகிறார்கள். நிலவுடமைச் சமூகம் என்று இந்தப்போக்கை மார்க்சியர் காண்கின்றனர். இத்தகைய கருத்து நிலைகள் விரிவான ஆய்வுக்கு உரியவை என்று இங்கு குறிப்பிடலாம்.

சமயம், மனிதனின் - உயிர்வகையின் உயிரியக்கத்தையும், உணர்வு இயக்கத்தையும் ஒன்றெனக் கருதுகிறது. உணர்வியக்கத்தின் ஆதாரத்தளமாக ஆன்மா அல்லது கடவுளைக் காண்கிறது. அடிப்படையில், மனிதனின் தன்னுணர்வு என்பதில் தொடங்கி மேற்கத்திய தத்துவங்கள் எதிர்திசையில் செல்லுகின்றன. இந்தச் சிந்தனைப் போக்குகளின் அடிப்படையாக மேற்குலகத் தொழில்வளர்ச்சியைக் காணவேண்டியிருக்கிறது. இறுதியில் எல்லாவற்றையும் மேற்குறிப்பிட்ட இருவகைப் போக்குகளையும், மனிதனின் சுயஇருப்பு பற்றிய சிக்கலாகவே காணவேண்டியிருக்கிறது. மனிதன், தன்னை விளங்கிக் கொள்வது என்பதுதான் பிரச்சனையின் மையம்.

சிந்திக்கிறேன். ஆகவே நான் இருக்கிறேன் என்று தொடங்கியது மேற்கத்திய சிந்தனை. நான் சிந்திப்பதாக உணர்கிறேன், நான் இருக்கிறேன் என்பதாகவும், இது வடிவம் பெற்றது. இன்னொரு கட்டத்தில், நான் என்பது உணர்வுகளின் தொகுதி, இவற்றில் எது எனது நான் என்ற கேள்வி எழுப்பி, நான் இல்லை என்பது வரை இந்த சிந்தனை முறை விரிந்தது.

இதே போக்கை, இந்தியச் சிந்தனை முறையிலும் காண முடியும். இறுதியில் எல்லாமே சூன்யம் என்பதும் இந்தப் போக்கின் எல்லை. சூன்யமும் மனித உணர்வுதான் என்று தொடங்கி இன்னொரு வட்டத்திற்குள் செல்ல வேண்டிய இருக்கிறது.

மனிதனை உடல் என்றும் உள்ளம் என்றும் பிரித்துக்கூறும். இருமைநிலை - உலகம், வரலாறு, பரிணாமம் முதலிய விளக்கங்களுக்குள்

செல்லும். உடல் என்பதன் தொடர்ச்சியில் இயற்கை, பொருளாதாரம், வர்க்கம் முதலிய இடைநிலங்களும் தோன்றும்.

ஒருமைச் சிந்தனை முறையைச் சமயத்தின் சாரம் என்று கொண்டால், மார்க்சியம் உள்பட, பல தத்துவங்களும் இன்றுவரை, இந்த உள்ளடக்கமாகிய சாரத்தைத்தான், தொடர்ந்து கொண்டிருக்கின்றன என்று காண முடியும். இதற்கு எதிர்நிலைதான், மதத்திற்கு எதிரான முறையில் செல்லுகிற அல்தூசரிய அறிவியல்முறை.

அடிப்படையில் மனிதனுக்கு உலகம் பாதுகாப்பானதாக இருக்க வேண்டும். இதற்காகத்தான் கருவிகள், வேளாண்மை முதலிய பலவற்றோடு சிந்தனையும் உணர்வுகளும் தேவைப்படுகின்றன. நான்யார் என்ற கேள்வியைத் தொடக்கமாகக் கொள்வது இதனால்தான்.

அந்நியமாதல் இல்லாமல் மனிதனுக்குச் சிந்தனையில்லை. உலகமும் இல்லை. அந்நியப்பட்ட நிலையில் உலகத்தைப் புரிந்து கொள்ள முடியும். அந்நியப்பட்டதனால்தான் துயரங்களும் தோன்றின. அந்நியமாதலின் எத்தனையோ வடிவங்களில் சில வர்க்கம், வருணம் முதலியன. வர்க்க வேறுபாடு அற்றுப்போதல் என்பது தனக்கான உலகைப் பெறுதல், தன்னைப் பெறுதல், அந்நியமாதலின் எத்தனையோ வடிவங்களில் கடவுளும் ஆன்மாவும் அடங்குகின்றன. கடவுளுக்குள் இருப்பவன் மனிதன்தான். தனக்குள் சிதைவுபட்ட அழுகிய, அசிங்கமான மனிதன்தான் பிசாசு. பிசாசு என்பது தெய்வத்திலிருந்து வேறுபட்டதும் அல்ல.

தத்துவங்கள், சமயங்கள், கோட்பாடுகள் முதலிய அனைத்தையும், மனிதன் தோற்றுவித்து, வாழ்ந்து பார்த்துக் கலைத்து மீண்டும் புதியதாக உருவாக்குகிறான். மனிதனுக்கு ஒரு தத்துவம், ஒரு சமயம், ஒரு கடவுள் போதாது. மனிதன், தனக்கான உலகைத் தான் படைத்துக் கொள்கிறான். ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு உலகம். ஆணுக்கு ஒரு உலகம். பெண்ணுக்கு இன்னொரு உலகம். வர்க்கம், சாதி, தொழில், வருமானம் முதலியவற்றுக்கு ஏற்ப உலகங்கள் உருவாகின்றன. அல்லது உற்பத்தி செய்யப்படுகின்றன. இவற்றை உற்பத்தி செய்வது நாம்தான் என்ற உணர்வு இன்றுதான் நமக்கு ஏற்பட்டிருக்கிறது.

பழைய மார்க்சியம் எல்லோருக்கும் ஒரு உலகம்தான் என்றது அல்லது இரண்டு உலகம் பற்றித்தான் பேசியது. நிலவுடமைக்கான உலகம். முதலாளிய உலகம், சோசலிச உலகம் என்றெல்லாம் கூடப் பேசியது இன்று எல்லாமே மாறியிருக்கிறது. மார்க்சியமும் மாறுகிறது மாறுபட்ட பல உலகங்கள் இன்று வந்துவிட்டன. இதன்வெளிப்பாடுதான் பின் நவீனத்துவம் முதலியவை.

உலகத்தை இன்று நம் வசப்படுத்த விரும்புகிறோம். முன்பு பழங்காலச் சூழலில் அடிமையாக இருந்தோம். இதற்கேற்றதாகத்தான் தத்துவங்கள்-சமயங்கள் உருவாயின. உலகை வசப்படுத்தும் முறையில்தான் மார்க்சியம் முன் வந்திருக்கிறது. மனிதன் தன்னைப் புரிந்து கொள்வதற்கு மார்க்சியம் தந்தது பேரொளி என்பதில் ஐயமில்லை. சமயம், தன்னை உணர்ந்து கொள்ளவில்லை. மார்க்சியம் தான் இதைக் கற்பிக்கிறது. சமயம் தன்னை உணர்ந்து கொண்ட நிலையில், தன்னைத் தக்கவைத்துக் கொள்ளும்.

மார்க்சியத் தோற்றத்திற்கு முன்னிலையாக பொருள் முதல் வாதம் தோன்றியது. மனிதச் சிந்தனைக்கு அடிப்படையாகப் பொருள் முதலியல் எழுந்தது. ஒருபாய்ச்சலாகக் கணிக்கத் தக்கது. (மேற்குலகத் தத்துவப் பயிற்சி நமக்கு அவசியம். நம் சமயமுறைகளைப் புரிந்து கொள்ளவும் இது அவசியம்).

பொருள் முதலியல் சிந்தனைகளுக்கும் காரணம், அறிவியலா? அறிவியல் சிந்தனைக்குக் காரணம் பொருள் முதலியலா? என்று கேட்கலாம். இவை இயங்கியல் உறவுடையவை என்பதுதான் சரியான பதிலாக இருக்க முடியும். ஒன்றே முதன்மையானது என்ற விவாதமும்கூடத் தேவைதான் என்று புரிந்து கொள்ளலாம்.

அறிவாளிக்குத் தேவையான சமயமும், உழைப்பாளிக்குத் தேவையான சமயமும் வேறுதான். ஆதிக்கவாசிக்கும், அடிமைப்பட்டவனுக்கும் தேவையான சமயங்களும் வேறுவேறுதான். சமயத்தை இப்படித்தான் பொருள்படுத்த வேண்டும். ஒரு சமயத்திற்குள் இரண்டும் இருக்கின்றன. வேறுபடுத்தி அறிந்து கொள்ள வேண்டும்.

சைவம் கூறும் நால்வகை உறவுமுறை இங்கு சிந்திக்கத் தக்கது. பகவத்கீதை இரண்டுவகை உறவுமுறைகளைக் கூறுகிறது. ஆண்டவனுக்கும் மனிதனுக்கும் இடையிலான உறவு முறைகள் நான்கையும் இணைக்கும் உறவு வகுத்தலில் அடங்கியிருப்பது, அரசியல் அன்றி வேறில்லை. இது ஆட்சியாளரின் அரசியல், இப்படி பார்ப்பதுகூட, சுருக்கிப் பார்க்கிற அரசியலாகவும் இருக்க முடியும்.

## 4. காலத்திலும் இடத்திலும் கடவுள்

கடவுளுக்கு எதிரான கலவரத்தை
கடவுள் எல்லைக்குள் இருந்தே செய்ய முடியும்.

1. கடவுளை ஒப்புக் கொள்ளும் சமயங்கள் போலவே, கடவுளை மறுக்கும் சமயங்களும் உண்டு. புத்தமும், சமணமும் கடவுளை மறுக்கின்றன. சாங்கியம், நியாயம், வைசேடிகம் முதலியனவும் சமயக்கூறுகள் கொண்டவை. கடவுளை மறுத்த நிலையில் ஆன்மா, பிரகிருதி, அறம், விதி

முதலிய இறுதி முதல் நிலைகளை இவை முன்வைக்கின்றன. கடவுளை மறுத்த இன்மை என்பதுகூட கடவுள்தான் என்ற கருத்தும் உண்டு.

2. கடவள் ஒருவரா, பலரா என்ற முறையில் சிந்தனைகள் தொடக்கம் முதல் தொடர்கின்றன. ஜார்ஜ் தாம்சன் தரும் விளக்கம் - இனக்குழுச் சமூகங்களில் உயிர் - பேய் முதலிய கருத்துக்கள் நிலவின. இது animism என்கிறார். சிற்றரசுகள் இருந்த காலத்தில், பல கடவுட்கோட்பாடும், சிற்றரசர்கள் ஒரு பேரரசுக்குள் அடக்கப்பட்ட காலத்தில் ஒரு கடவுட்கோட்பாடும் ஏற்பட்டது என்றும் அவர் விளக்குகிறார்.

3. உலகியல் சூழலில் நன்மை மட்டும் அல்லாமல், தீமையும் கடவுள் நிலையாகவே பாவிக்கப்பட்டதும் உண்டு. மூலம் ஒன்றாகத்தான் இருக்க முடியும் என்ற தர்க்கத்தின் நீட்சிதான் இக்கருத்து. தொடக்ககாலச் சிவன் குரூரமானவன். பின்னர், கருணைமிக்க சிவன். காளி-துர்க்கை தாய்க் கடவுள். தாய்மை நிரம்பியவள். தண்டிப்பவளும் இவள். முதலில் பொதுமைச் சமூகம், பிறகு அது அழிந்த சமூக நிலவரங்களும் சிந்திக்கத் தக்கவை. வேளாண்மைச்சமூகம், தெய்வங்களைக் கருணை மிக்கவராக மாற்றுகிறது.

4. கடவுள் எல்லாக் காலத்திலும் மனிதக்குணங்களோடு மனித வடிவில்தான் ஆக்கப்பட்டிருக்கிறார். மனிதக் கதைகள்தான் கடவுட் கதைகளுக்கும் ஆதாரம். கடவுளர்களுக்கிடையிலான உறவுகளும், பகைமையும், மனித வாழ்க்கை நிலவரங்களோடு கூடியவைதான். கடவுளர் கதைகள் மற்றும் இணைப்புகள், கலாச்சார இணைப்புக்களோடு உறவு உடையவை. முருகன், சுப்பிரமணியன் எனப் பல சான்றுகள்.

5. சிந்தனையாளர்களுக்கு அவர்களுக்கு ஒத்த கடவுள்-கடவுட் கோட்பாடுகள் தேவைப்படுகின்றன. ஐன்ஸ்டீனுக்கு ஒரு உயர்வகை சமயம் தேவைப்பட்டது. தாகூரின் கருத்துப்படி, அவரது சமயம், கவிஞனின் சமயம், இயற்பியல் அறிஞர்கள்கூறும் கடவுள்/கடவுள் நிலை, மிகமிக நுட்பமானது. பிதாகரஸ் போன்றவர்களுக்கு கடவுள் மிகப்பெரும் கணக்கியல் மேதை. மாணிக்கவாசகர் முதலியவர்களுக்கு கடவுள் இசை மற்றும் கலை வடிவினன். சங்கரனுக்கு குணமற்றவன்-பிரும்மம். கவுதமருக்கு நிர்வாணம்/சூன்யம். சிலருக்கு அறம்/விதி. விதிக் கொள்கை வலுத்த நிலையில் விதிக்குக் கட்டுப்பட்டவன் இறைவன்.

பார்ப்பானுக்கு முறையான சடங்குகளுக்கு கட்டுப்பட்டவன் இறைவன். சைவனுக்கு அன்பில் கட்டுப்பட்டவன் இறைவன். வைணவனின் இறைவன் நிகழ்த்துவது லீலை, விளையாட்டு. இறைவன் காதலன், கண்ணன். அவன் ஆடுவது நாடகம். நம்மை இறைவன் ஆட்டுவிக்கிறான். நாம் ஆடுகிறோம். இறைவன்தான் வந்து நம்மை ஆட்கொள்கிறான்.

இயற்கையில் அவன் கலந்திருக்கிறான். ஐம்பூதங்களாக இருக்கிறான். ஐம்பூதங்களின் தன்மையாக இருக்கிறான். காற்றாக, கடலாக இருக்கிறான். அகத்தும், புறத்தும் இருக்கிறான். மனிதனுக்கு எவை இன்றியமையாதனவோ, அவற்றில் இறைவன் இருக்கிறான். அதாவது மனிதன்தான் கடவுளைப் படைத்தான். காலத்திற்கு ஏற்றவாறு கடவுள் சிந்தனைகளும் மாறின என்பதற்கு மேற்கூறியவை விளக்கங்கள் ஆகின்றன.

6. மேற்கூறிய விவரிப்புக்கள் வழியே பார்த்தால், கடவுளும், தனக்குள் முரண் உடையவர். அதாவது கடவுட் கருத்தாக்கம் தனக்குள் முரண் உடையது என்று புரிந்து கொள்ளலாம். உலகத்தோடு பொருள் வகை உலகோடு, வரலாற்றோடு, மனிதர்களோடு, மனித உணர்வுகள்/சிந்தனையோடு மனிதத் தேவைகள், கலை/அறிவியல் உணர்வுகளோடு கடவுள் உறவு உடையவர். கடவுள் அழகானவர். அன்பானவர், உருவம் உடையர், அருவமானவர், பிரபஞ்ச ஒழுங்கைப் படைத்தவர். பிரபஞ்சத்தை இயக்குபவர்

7. மனிதன் கடவுள் பற்றிச் சிந்திக்கும்போது தன்னைப் பற்றித்தான் சிந்திக்கிறான். கடவுள் ஒரு திரை. அதன்மீது தன்னைத்தான் மனிதன் வரைந்து பார்த்துக் கொள்கிறான். கடவுளும் ஒரு கலைப்படைப்பு. கடவுள் ஒரு தளம். இந்தத் தளத்தில் நின்று மனிதன் தன்னைத்தானே பார்த்துக் கொள்கிறான். மதிப்பிட்டுக் கொள்கிறான். அறத்தைக் கடைப்பிடிக்க அமைதிகொள்ள, உலகச்சூழலில் தன் இடத்தை நிர்ணயிக்க, கடவுள் - மனிதனுக்கு ஒரு தளம்/கருவி/பார்வை/விளக்கு, கடவுள் இல்லாமல் மனிதன் வாழவில்லை. மனிதனாகவில்லை. கடவுளுக்குள் புகுந்து மனிதன் மேலே வந்திருக்கிறான். அந்நியப்பட்ட மனிதனுக்குக் கடவுள் தேவைப்படுகிறார். அந்நியமாதல் தான் கடவுளைப் படைக்கிறது. அந்நியப்படுத்தலுக்கான சூழல் நிலவும்வரை கடவுளும் தேவைப்படுவார். இதை மார்க்ஸ் புரிந்திருந்தார்.

பெரியாருக்குக் கடவுள் தேவைப்பட்டார்-புராணங்களை பார்ப்பனர்களை விமர்சனம் செய்ய-உலகியலை மக்களுக்கு உணர்த்த-பகுத்தறிவை விளக்க.

8. புரோகிதர்களும், புராணங்களும் எல்லாச் சமயங்களிலும் இருக்கின்றன. பெரியாருக்கும், மார்க்சுக்கும்கூட புரோகிதர்கள் உள்ளனர். கோயில்கள், வழிபாடுகள், சடங்குகள் உள்ளன. மூடநம்பிக்கைகள் உள்ளன. இவற்றை அறவே களைந்தவனாக மனிதன் இருக்க முடியுமா? சிந்திக்க வேண்டும்.

9. இதுவரையிலான கடவுள், ஆணாகத்தான் இருந்திருக்கிறார். கடவள், அரசனாகவும் இருக்கிறார். உழைப்பாளியாக வந்ததும் உண்டு. கடவுள் பார்ப்பனனாக வந்திருக்கிறார். தாழ்ந்த சாதியினராகவும்

வந்திருக்கிறார். நீதி அழிந்த காலங்களில் அநீதியை அழித்து நீதியை நிலைநாட்டுபவர் கடவுள். புரோகிதர்கள் இந்தக் கடவுளைப் பயன்படுத்த முடியும். உழைப்பாளியும், நாத்திகனும், நீதிக்காகப் போராடுபவனும் பயன்படுத்த முடியும். கடவுளுக்கு எதிரான கலவரத்தை கடவுள் எல்லைக்குள் இருந்தே செய்ய முடியும்.

பார்ப்பன வடிவில் வரும் கடவுளைப் பறையன் வடிவிலான கடவுள் எதிர்க்க முடியும். அழிக்க முடியும். சங்கராச்சாரியார் பார்ப்பன வடிவம். பெரியார் சூத்திரவடிவம். பார்ப்பன வடிவில் அநீதியை நிலைப்படுத்த புரோகிதர்களிடம் நாம் விட்டுவிடவேண்டியது இல்லை. விடுதலை இறையியல் அம்சங்கள் இந்து மதத்திற்குள்ளும் உண்டு.

மார்க்சியத்திற்குள்ளிருந்து மதக்கூறுகளைக் களைந்துவிட முடியுமா? மதம் உற்பத்தியாவதற்கான சமூகச்சூழல் முற்றாக அழியும்போது, மார்க்சியமும் மதக்கூறுகள் அற்றதாகும். மார்க்சியமும் ஒரு மடம் ஆகிவிட முடியும். மடம், புரோகிதர்கள், மூடநம்பிக்கைகள் உருவாவதும், களைவதும் இடையறாத செயற்பாடுகள்.

மதரப்பிரச்சனைகளை எப்படி அணுகுவது என்பதற்கு நாராயணகுரு நல்ல மாற்று உதாரணம். மதநெறியிலேயே சென்று மதத்தைக் களைந்தவர் நாராயண குரு. இது சித்தர் நெறிக்கு நல்ல சான்று. குன்றக்குடி அடிகளார் இப்படிச் செய்தாரா? இல்லை.

## 5. கடவுள் - கட்டுடைத்தல்

வரலாறு மனிதசமூகம் இயற்கை பேரண்டம்-
இவற்றோடு நாம் கொள்ளும் ஆழ்ந்த உறவின் மூலம்
கடவுளோடு நாம் உறவுகொள்கிறோம்.

ஆதிப் பொதுமைச் சமூகம், சமய வடிவில் காலம் காலமாகத் தங்கியிருக்கிறது. ஆதிச்சமூகத்தில் ஏற்றத்தாழ்வு இல்லை. எல்லோரும் இயற்கையிலிருந்து உணவைக் கூடித் தொகுத்தார்கள், துய்த்தார்கள். முதியவர்களுக்கு, அவர்களிடம் சேர்ந்திருந்த கருவிகள், மற்றும் வேறுபல அனுபவங்கள் விளைவாக முதன்மை இருந்தது. தலைமை இருந்தது. சமூகம் மாறிய நிலையில் அந்தப் பழமைச் சமூகம் பற்றிய ஈர்ப்பு அவர்களிடம் தங்கியிருந்தது. நினைவுகளில், கனவுகளில் நிலைத்திருந்தது. காலம் செல்லச்செலல ஏற்றத்தாழ்வுகள் - அதிகரித்துப் பெருகிய நிலையில், பழங்கனவுகள், பழமையைத் தக்க வைக்க வேண்டும் என்ற பண்பாட்டுக் கோலங்கள் இனித்தன.

ஆதிச்சமூகம், தங்களை மனிதர்களாக ஆற்றல்மிக்கவர்களாக வைத்திருந்தது. மனிதர்களிடம் கூட்டுணர்வை, வேர்கள் மண்ணுடன்

கொண்டுள்ள இறுக்கமான உறவு போலக் காத்திருந்தது. அந்தச் சமூகம் தங்கள் ஆற்றல்களுக்கு மூல ஊற்று. ஆதிச் சமூகத்தில் அனைவரும் தமக்குள் இணைந்திருந்தனர். ஓர் உருவமாய்த் தம்மைக் கண்டார்கள்: அந்தப் பொதுமைதான், தம் அறிவுக்கு, பண்பாட்டுக்கு, ஆற்றல்களுக்கு ஆதாரம். காலம் கழியக் கழிய, அந்தப் பழமை பேராற்றலாக, உணர்வு மிக்கதாக உணரப்பட்டது. அந்தப் பொதுமைச் சமூகம் பின்னர் வந்த சமூகச் சூழலில் மக்கள் உணர்வில் கடவுளாய்த் தங்கியது.

இன்றும் நிலவும் கடவுட்கருத்தை ஆழ்ந்து கட்டுடைத்துப் பார்த்தால் ஆதிச்சமூகத்தின் பதிவை கடவுட் கருத்தாக்கத்தில் காணலாம். சமூகம் மாறிய நிலையிலும், அந்தப் பழமை - பொதுமை ஏன் இந்த மாறிய சமூகச் சூழலில் மக்களின் கவர்ச்சிக்குரியதாக இருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ள முடியும். அந்தக் கடவுள் தம்மைக் காப்பார். அவர் இல்லாமல் போகவில்லை. இன்று உடனடியாக இல்லை என்றாலும், இறுதியில் தம்மை நமக்கு உணர்த்துகிறார். அந்தக் கடவுள் பற்றிய ஆழ்ந்த செறிந்த - ஆற்றல்மிக்க உணர்வை - பேருணர்வை வழிபாடு செய்து, கோயில்கட்டி உருவம் வைத்துக் கொண்டாடவேண்டும். அந்த நிலையை நமக்குள் பெருக்கவேண்டும். கடவுள் உணர்வு நமக்குள் -நம்மக்கள் மத்தியில் இன்றும் உறைந்திருப்பதற்கு - இது முக்கியமான காரணம். இந்தக் கடவுள், வரலாற்றின் - மக்களின் - படைப்பு. அனுபவங்களின் தொகுப்பு. ஆற்றல்கள் - அறிவின் தொகுப்பு - அன்பின் தொகுப்பு - கொள்கலம் பொதுமைச் சமூகம் விலகிச் செல்லச் செல்ல கடவுள் பற்றிய கற்பனைகள் அழகுகள், அதிகரிக்கின்றன. அதிகரித்தன.

ஆதிச்சமூகம் தான் மதங்களின் மூலமாக - மூலச்சக்தியாகத் தங்கியிருக்கிறது. மதங்கள், பகிர்தலை வற்புறுத்துகின்றன. குற்றங்களை மன்னிக்கக்கோருகின்றன. கருணையை நமக்குள் தூண்டுகின்றன. எளிமையை வேண்டுகின்றன. இவை நல்ல சமூகத்திற்கான தேவைகள். மார்க்சியம், ஆதிப்பொதுமை என்ற மூலத்தை தனக்குள் வரலாறாக திரும்பவும் உயர்நிலையில் கம்யூனிசமாக உயிர்ப்பிப்பதன் தேவையோடு தன்னிடம் தக்க வைத்திருக்கிறது. மார்க்சியம்-மதத்தை-- கடவுட் கருத்தை மறுக்கிறது என்பவர்கள் சிந்திக்க வேண்டும். மார்க்சியம், பொருளாதார வாதம் மட்டும் பேசுகிறது. மார்க்சியத்தில் கடவுள் இல்லை. ஆன்மீகம் இல்லை என்று குறைகாண்பவர்கள் சிந்திக்க வேண்டும். புரோகிதர்கள், கடவுளை வசப்படுத்திக் கொண்டார்கள். மூடநம்பிக்கையாக மாற்றினார்கள். கடவுளை வணிகப் பொருளாக மாற்றினார்கள். கடவுளின் தரகர்களாக, கடவுளை விளக்குபவர்களாகத் தம்மை மாற்றிக்கொண்டார்கள். இவர்கள் ஆதிக்கச் சக்திகளின் கைப்பாவைகள் கருவிகள். இவர்கள் மார்க்சியத்தை மறுப்பவர்கள்.

மார்க்சியத்திலிருந்து மதத்தை வெளியேற்ற வேண்டும், மார்க்சியத்தை விஞ்ஞான மயப்படுத்தவேண்டும் என்று கோருபவர்கள். ஆதிப்பொதுமைச் ச கம் என்ற கருத்தை, கருத்தாக்கத்தை மறுக்கிறார்கள். வரலாற்றில், கண்டுபிடிக்கப்பட்டதுதான் இந்த ஆதிச்ச கம் என்கிறார்கள். உண்மையில் இப்படி ஒரு ச கம் இருந்ததில்லை. வரலாற்றின் தொடர்ச்சியான போக்கில்தான் முரண்பாடுகளோடு மனிதன் உருவாகிறான். மனிதன் என்று பொதுமைப்படுத்திச் சொல்லுவது ஒரு கருத்தியல். ஒரு கற்பிதம். மனித நேயம் - அன்பு - உண்மை - அறம் என்பவை மதத்தின் பதிவுகள். இவற்றைத் தனக்குள்ளிலிருந்து மார்க்சியம் களைந்து கொள்ளவேண்டும். மரபு மார்க்சியம், மதம் சார்ந்த மார்க்சியம், நாம் ஒப்புக்கொள்ளலாம். மதம் என்பது ஒருகருத்துருவம்தான். மதத்தினுள்ளும்-சமூக அனுபவங்கள் - ச கத் தேவைகள் சேர்ந்திருக்கின்றன. மதத்தைப் படைத்தது வரலாறுதான். வர்க்க ஏற்றத்தாழ்வுகளும்தான். வரலாற்றுக் காலங்களில் வளர்ந்த-ச க அறிவு, விஞ்ஞான அறிவும்தான். மதத்திற்குள்-மத ஆழத்திற்குக் காரணமாய் ஆதாரமாகி இருக்கிறது. மதம் என்ற தொகுப்பினுள் பரிணாமக் கொள்கையை காண முடியும். மனிதனின் தர்க்க அறிவை, தர்க்கச் சிந்தனையின் சில வடிவங்களை, இயங்கியலின் சில கூறுகளைக் காணமுடியும். குயவன்-மண்-சக்கரம், ஆலமரம்-வித்து; பாம்பு-கயிறு முதலிய விவாதக் கருத்துக்களில் அறிவியலின் ஆக்கத்தைக் காணமுடியும். எல்லாக் கருத்தியல்புகளும், அறிவியலின் சமூக இயலின் ஊடறுத்தலோடு தம்மை மாற்றிக் கொள்கின்றன. புதுப்பித்துக் கொள்கின்றன.

அறிவியல் வளர்ச்சியின் எந்தக் கட்டத்திலும், கருத்தியலின் கூறுகளை முற்றிலும் களைந்துகொள்ள இயலாததாகவே இருக்கிறது. அறிவியலும் மனிதச் சார்புடையதுதான். முற்றான புறநிலைத் தன்மை உடையது என்று அறிவியலை வகுக்க முடியாது. பிரபஞ்ச இயக்கம் வரை அனைத்தையும் முற்றாக விளக்கும்வரை, கருத்தியலின் பதிவு அறிவியலுக்குள் இருக்கத்தான் செய்யும். அந்த இறுதிநிலையில் மனிதன் மனிதனாக இருக்க மாட்டான். அவனும் ஓர் இயந்திரமாவான். இயந்திரமாகத் தன்னை மாற்றிக் கொள்வது சாத்தியமா? சாத்தியமில்லையா? என்றெல்லாம் நாம் சிந்திக்க வேண்டும். அப்படியானால் மதமும் மனிதனோடு ஏதோ ஒரு வடிவில் இருக்கும் கடவுளும் இருப்பார்.

வரலாறு என்றும், மனித ச கம் என்றும், பேரண்டம் என்றும் நாம் பேசுகிறோம். இவை பெரும் தொகுதிகள். ஒருவகையில் இவை பெரும் கருத்துருவத் தொகுதிகள். இவை நம் சிந்தனையை உணர்வுகளைப் பாதிக்கின்றன. படைக்கின்றன. வரலாறு என்னை உருவாக்கியது என்றும், பேரண்டத்தோடு, இயற்கையோடு, ச கத்தோடு ஆழ்ந்த உறவு எனக்குத் தேவை என்றும், நாம் பேசுகிறபோது உண்மையில் கடவுளிடம்தான் நாம்

உறவு கொள்கிறோம். இவை கடவுளின் கருத்தியல், கடவுள்களின் மாற்ற வடிவங்கள். தாகூர் சரியாகத்தான் சொன்னார். பிரபஞ்சம், சமூகம், வரலாறு என்பவை கடவுள்.

## 6. உயிரியக்கம்

பிரபஞ்சத்தில் நிலவும் புதிர்களை
முற்றாக ஆராய்ந்து தீர்க்க முடியாது
கடவுள் புதிர்களில் வாழ்கிறார்.

உயிரியக்கம் பற்றிய புதிர், சிக்கல், காலங்காலமாக சிந்தனையாளர் மற்றம் மக்கள் சமூகத்தைப் பெரிதும் பாதித்தது. இதன் அடிப்படையில் சமய நம்பிக்கையைத் தக்கவைத்திருக்கிறது. பெர்க்சன் என்ற பிரெஞ்சு உயிரியலாளர் பற்றி இங்கு குறிப்பிடலாம். டார்வினின் பரிணாமக் கோட்பாடு, தாவரங்கள், விலங்குகள், இறுதியாக மனிதன் பற்றிய பரிணாம வளர்சசியை விவரிக்கிறது. ஓர் உயிர், இன்னொரு உயிராக எப்படி மாறியது? முதல் உயிர் எப்படித் தோன்றியது? மாறிமாறி உயிர்வகைகளின் தோற்றம் நிலவும்பொழுது, இந்த உயிர் இயக்கம் மேல்நோக்கி ஏன் செல்லவேண்டும் என்பன போன்ற கேள்விகள் தொடர்ந்து எழுகின்றன/ எழுந்தன. உயிர்ப்பற்ற பொருளிலிருந்து உயிரியக்கத்தை எப்படி விளக்க முடியும் என்ற கேள்வி ஒரு புதிராகத் தோன்றியது.

பரிணாமம் என்ற கோட்பாட்டை உயிரியக்கத்திற்கு முன்னர் கொண்டு சென்று நெபுலா வரை விளக்குகின்றனர் அறிவியலாளர்கள். உயிர்த்தன்மை என்ற இந்தப் புதிர் பிரபஞ்சத்திற்கு வெளியிலிருந்து, உலகத்தைப் பொருத்தவரை கதிர் மண்டலத்திற்கு வெளியிலிருந்து வந்திருக்கக் கூடும் என்றெல்லாம் நம்பினர். சாதாரண மக்கள் மட்டும் அல்லாமல், அறிவியலாளர்களும் இவ்வகை நம்பிக்கை கொண்டிருந்தனர். இயற்பியல் போன்ற துறை ஆய்வில் ஈடுபட்டுள்ள ஒரு விஞ்ஞானி கடவுள் நம்பிக்கையை உதறிக்கொள்ளத்தான் வேண்டுமா? கடவுள் நம்பிக்கையை ஆய்வுக்கூடத்திற்கு வெளியில் வைத்துக்கொண்டு, ஆய்வுக்கூடத்தில் ஆய்வைத் தொடர முடியுதா? என்றும் கேள்விகள் எழுகின்றன.

பெர்க்சன் பொருள் சார்ந்த பரிணாம விளக்கத்தை ஏற்க இயலவில்லை. ஓர் உயிர், இன்னொரு உயிராக மாறுதல் பெறுவதற்கு இடையல் ஒரு தூண்டுதல் எப்படி ஏற்படுகிறது என்று சிந்தித்தார். பொருளிலிருந்து உயிரின் தோற்றமும், இவருக்குப் பெரும்புதிர் இந்நிலையில் **Elanvital** என்ற உயிரியக்கம் பற்றிப் பேசினார்.

வெறும் இயற்பியல், மற்றும் வேதியியல் விதிகள், உயிரியக்கத்தை விளக்கப்போதுமானவை அல்ல என்றும், உயிரியல் பற்றிய புதிர்

விடுவிக்கப்படவேண்டுமென்றும், சிக்கலான புரத மூலக்கூறுகள் பற்றிய ஆய்வுதான் இந்தப் புதிரை விடுவிக்க முடியும் என்றும் எங்கல்ஸ் கூறியிருந்ததை இங்கு நினைவு கொள்ளலாம். அத்தகைய சிக்கலான புரத மூலக்கூறுகளின் கூட்டமைப்பை ஆய்வுக்கூடத்தில் உருவாக்ககூதற்கான முயற்சிகள் தொடர்ந்து நடைபெறுகின்றன என்பதையும் நாம் இங்கு நினைவு கொள்ளலாம். இன்று DNA பற்றிய நுட்பமான ஆய்வுகள் இந்தப்புதிரை நாளடைவிலே விடுவிக்கக்கூடும். இந்தச் சிக்கலின் மையம் எது என்பதைப்பற்றி இங்கு ஒன்றை நாம் தெளிவுபடுத்திக் கொள்ளலாம். உயிரியக்கம் மட்டுமல்லாமல் உயிர்களுக்குள் ஏற்படும் தூண்டுதல், இயல்பூக்கங்கள் இறுதியாக உள்ளுணர்வு intution முதலியவற்றை விளக்க முடியவில்லை என்பது ஓர் அடிப்படையான சிக்கல். இயந்திரவியல் வகைப்பட்ட பொருள் முதலியல் இதற்கு விளக்கம் கூற முடியாது. குறைந்த அளவுக்கு, இயற்பியல், மற்றும் வேதியியல் சார்ந்த விளக்கங்களின் போதாமையைப் புரிந்து கொண்டு இவற்றின் விதிகளோடு கூட, உயிரியல் Biology தொடர்பான இயக்க விதிகளுக்குள் ஆய்வு செல்ல வேண்டும். எங்கல்ஸ் போலவே, வொயிட்ஹெட் என்பவர் இத்தகைய விளக்கத்தில் ஆழ்ந்த கவனம் கொண்டிருந்ததை இங்கு குறிப்பிடலாம். இயற்பியலைக் காட்டிலும், அதன் மட்டத்தைக் காட்டிலும், வேதியியல், நுட்பங்கள் கூடியது. அதனினும் நுட்பங்கள் கொண்டது உயிரியல். அடுக்கு முறையில் படி முறை அமைப்பாகத்தான், இவற்றை சார்ந்த உயிரியக்கம் பற்றிய ஆய்வு தொடர முடியும்.

உயிரியக்கம் பற்றிய கேள்வி, அடிப்படையில் அறிவியல் சார்ந்த கேள்வி என்றாலும், இந்தக்கேள்வி அடிப்படையிலான அல்லது இந்தக் கேள்விடைய உள்ளடக்கிய புதிர் என்ற உணர்வுதான், சாதாரண மக்களை மயக்கக்கூடியதாக இருக்கிறது. சமயவாதி என்பவர் இந்தக் கேள்வியைப் பெரிதாக எழுப்பி, இந்த இடத்தில் கடவுளைக் கொண்டு வருகிறார்.

பெர்க்சன் கூறும் இலான் வைட்டலும், கடவுளும் ஒன்றாக இருக்க வேண்டியதில்லை. அல்லது கடவுட் கருத்தின் நீட்சியாகவோ எச்சமாகவோகூட இந்தக் கருத்தாக்கம் இருக்கக் கூடும். அல்லது உயிரியக்கம் பற்றிய ஆய்வில் திட்டவட்டமான முடிவுகள் இன்னும் அல்லது எதிர்காலத்தில் முன்வைக்கப்பட்ட போதிலும் இந்த விளக்கங்கள் புரியாத நிலையிலும், வேண்டாத நிலையிலும், கடவுள் பற்றிய கொள்கை, மக்கள் மத்தியில் நிலவக் கூடும். உள்ளுணர்வு விந்தையானது, உயிர்வகைகள் முன்நோக்கிச் செல்லுகின்றன என்ற பரிணாமக் கோட்பாடுகூட முதலாளியத்தை நியாயப்படுத்துவதற்கான வளர்ச்சிக் கோட்பாட்டின் ஒரு பகுதியாக இருக்க முடியும். தவிர எந்த ஒரு காலத்திலும், பிரபஞ்சம் முதலிய பல களங்களிலும் தொடர்ந்து நிலவும் புதிர்களை முற்றாக ஆய்ந்து தீர்த்துக் கொள்ள முடியும் என்று தோன்றவில்லை. அப்படியானால் சமய

நம்பிக்கைகள் மக்கள் உள்ளங்களில் தொடர்ந்து நிலவத்தான் செய்யும்.

பொருள் முதல்வாதம், மனிதனை உணவு, உடை, இருப்பிடம், பொருளியல், அரசியல் என்ற வரையறைகளுக்குள் சுருக்கிவிடுகிறது என்ற மதிப்பீட்டின் ஆதாரத்தில்தான். மேற்குறிப்பிட்ட சமய நம்பிக்கைகள் உயிரியக்கம் பற்றிய சிந்தனைகள் நிலைபெறுகின்றன. மனிதனுடைய உள்ளுணர்வு முதலியவற்றை உள்ளடக்கியதான ஆன்மீகம்தான் மனிதனுக்கு மிக விருப்பமானதாக இருந்து வருகிறது.

பிரபஞ்ச இயக்கத்தோடு உறவு உடையவனாக மனிதன் தன்னைக் காண்கின்றான். அண்டம் தனக்குள்ளும் இயங்குகிறது என்பது மனிதனைப் பாதிக்கிற பேருணர்வு. எல்லாவகை உயிரினங்களோடும் மனிதன் உறவு கொண்டுள்ளான். உயிரற்றவை என்று தான் கருதுபவற்றோடும் உறவு உடையவன். இவற்றின் ஆதாரத்தில்தான் மனிதன் இருக்கிறான். இயங்குகிறான். ஒட்டுமொத்தமான பலநூறு உறவுகளின் குறுக்கும் நெடுக்குமான பின்னல்கள் தனக்குள்ளும் வெளியிலும் இயங்குவதை உணர்கிறான். இயக்கத்தின் விதிகள் தனக்கு வசப்படாத நிலையில் மனித உணர்வுகள் தீவிர இயக்கம் கொள்கின்றன. அன்றியும், இத்தகைய பல நூறு இயக்கப் பின்னல்களை மனிதன் தனக்குள் தன் சிந்தனைக் கோளத்திற்குள் உள்வாங்கிக் கொள்வது சாத்தியமே இல்லை. ஒரு புள்ளியில் இவற்றை குவிக்க இயலாது.

பொருள் முதல்வாதம், எல்லாக்காலத்திலும் வறட்டுத்தனமாகவே இருந்துவிட முடியாது. ஆன்மீகம் என்பதான பல அம்சங்களை பொருள்முதல் வாதம்/மார்க்சியம் தனக்குள் கண்டு இணைத்துக் கொள்ளவும்இயலும்பொருள் முதலியலே எனக்குப்போதும் என்றுகூட ஒருவர்/ஒருகூட்டம் இருந்துவிடலாம். இடையிடையே தனக்குள் எழும் கேள்விகளை ஒருவர் முற்றாகப் புறம் தள்ளுவதும் சாத்தியமில்லை.

சிந்தனைக்குள் உணர்வுக்குள் உலகை அடக்கவும் இயலாது. மனிதன் நெடுங்காலத்திற்கு இந்த முரணோடுதான் வாழ்ந்தாக வேண்டும். **Nature is intelligent** என்று மார்க்ஸ் கூறியிருக்கிறார் என்பதை நினைவு கொள்ளலாம்.

சோதிடம், எண்கணிதம், கைரேகை, முகக்குறிப்பு உணர்ந்து சொல்லுதல், ஆவிகளோடு பேசுதல், மந்திரவாதம், பில்லிசூன்யம், தொலைவில் உணர்தல், முன்நிகழ்வைக் கனவில் அறிதல் முதலியவற்றையும் இங்கு சேர்த்துக் கொள்ளலாம். சித்தர்கள் சித்துவேலைகள் என்பனவற்றையும் சேர்த்துக்கொண்டால், எங்கல்ஸ் கூறியபடி இவற்றை ஒதுக்கிவிட்டு சிந்தனை இயங்குவதில்லை. சமயம் சாகாது என்பதைத்தான் இப்பொழுதுகூறமுடியும். சமய உணர்விலிருந்து விஞ்ஞானியும் தன்னைக்

கழற்றிக் கொள்ள இயலாது. மார்க்சியர், தன் பொருள் உலக எல்லைக்குள் தம் வரையறை கண்டு இயங்கினால் போதும். பெரியாரியருக்குச் சிரமம்தான்.

## 7. விடுதலை இறையியயல்

இந்து மதத்தை அழிக்க முடியாது.
இந்துத்துவத்தை எதிர்த்து அழிக்க வேண்டும்.

கிறித்தவ சமயத்தில் ஆற்றலோடு கிளைவிட்டிருக்கிற விடுதலை இறையியல் இந்து சமயத்தில் தோன்றவில்லை. ஏன் என்பது ஆய்வுக்கு உரியது.

இயேசு மண்ணுலகில் வாழ்ந்து மறைந்த வரலாற்று நாயகராக கிறித்துவ அறிஞர்கள் நிலைநாட்டுகின்றனர். இயேசுவுக்கு முற்பட்ட சமயவரலாறு முழுவதுமே இயேசுவின் ஊடுருவல் பெற்றது போல, கிறித்தவம் என்று பெயரிடப்பட்டிருக்கிறது. அதாவது, இயேசுவுக்கு முற்பட்ட யூதசமய வரலாறு முழுவதும், கிறித்துவத்தின் ஆதிவரலாறாக, ஆற்றல் மிக்க மரபாகஇனம் காணப்பட்டிருக்கிறது. இயேசுவும் அவருக்கு முற்பட்ட ஆபிரகாம் முதலியவர்களும் யூதமரபைச் சார்ந்தவர்கள் என்ற போதிலும், மனிதகுலம் முழுமைக்கும் உரியவர்களாக பொருள் படுத்தப்படுகிறார்கள். ஆபிரகாம் முதலியவர்களும் வரலாற்று மனிதர்கள். இயேசுவுக்கு முற்பட்டவர் பலர்இறைவாக்கினர் என அறியப்படுவதோடு, அவர்களின் சமயச்சார்பைக்காட்டிலும் அவர்களின் சமூகச்சார்புக்கே அழுத்தம் தரப்பட்டிருக்கிறது. அதாவது கிறித்துவத்தின் சமயமும் சமூகச்சார்பும் வேறு பிரித்து அறிய இயலாத அளவுக்கு ஒன்று எனக்காட்டப்படுகிறது. கிறித்துவம் பற்றிய கடந்த சில நூற்றாண்டின் ஆய்வுகள் இத்தகைய மெய்மையை உறுதிப்படுத்துவனவாக அமைந்திருக்கின்றன.

இயேசு மனித குல விடுதலைக்காகப் பாடுபட்டுச் சிலுவையில் ஏற்றப்பட்டார். இவர்இறைவனது பணியை/இறைப் பணியை நிறைவேற்றினார். சமயத்தின் பெயரால் குருமார்களும், அதிகாரத்தின் பெயரால் அரசும் நடத்திய அக்கிரமங்களை எதிர்த்தார். இவ்வகையில் மக்கள் சார்பில் போராடினார். தண்டிக்கப்பட்டார். சாவை ஏற்றுக் கொண்டார். இவர் செய்தது இறைப்பணி. இறைவனுக்கு உகந்த பணி. இவ்வாறு மனிதசார்பில் வைத்து மதிப்பிடக்கூடியது இயேசுவின் வாழ்வு. இதற்கு மாறாக இறைவனின் திருக்குமாரன் இயேசு, இறைவனால் மனுக்குலத்தின் பாவங்களை ஏற்பதற்காக ஏற்றுத் துன்புறுவதற்காக இயேசு அனுப்பப்பட்டார் எனத் தொடங்கி மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார் என்பது வரையிலான கதைகள் சமயத்தின் பெயரால் கூறப்படுகின்றன.

மக்கள் மத்தியில் ஒரு மதம் உருவாகும்போது இத்தகைய கதைகள் புனையப்படுவதை நாம் புரிந்து கொள்ள இயலும். இத்தகைய புரிதலுக்கு மேலாக இயசு என்று ஒருவர் வாழ்ந்ததேயில்லை. இயேசு என்பவர் பற்றிய அனைத்துக் கதைகளும் புனையப்பட்டவையே என்ற ஆய்வும் உண்டு.

இதே போலப் புத்தரையும் ஒரு புனைவு என்று ஆய்வுகள் கூறுகின்றன. புனைவுகளுக்கு ஆதாரங்கள் தேவைப்படுகின்றன என்ற முறையிலும் புனைவுக்கு உள்ளாகாதது எதுவும் இல்லை என்ற முறையிலும் இத்தகைய ஆய்வுகள் நம்மைக் கட்டுப்படுத்த வேண்டியதில்லை என்று கூறி மேற்சொல்வோம்.

இயேசு மட்டுமல்லாமல் மக்கள் நலத்திற்குரிய நற்பணிகளில் ஈடுபடும் எவரும் இறைவனுக்கு உரிய பணியைத்தான் செய்வதாக நாம் மதிப்பிட முடியும். அன்றியும், மனிதர் அனைவரும், உயிர்வகைகள் அனைத்தும் இறைவனின் திரு உருவங்களே என்றும் நாம் பொருள்படுத்த இயலும். இறைவன் நமக்குள் இருக்கிறான் என்றோ, இறைவன் அல்லது உயிர்கள் பொருட்கள், இயக்கங்கள் இல்லை என்றோ, இறைவனின் ஆலயமே நம் உடம்பு, வாழ்வு என்றோ, நற்செயல்களில் ஈடுபடுபவர் அனைவரும் இறைவனின் திருக்குமாரர்கள் என்றோ பிறர் கூறுவதை நாம் புரிந்து கொள்ள முடியும். ஆழ்ந்த சிந்தனை மூலம் இத்தகைய மனநிலையை -இறைவனின் திருக்குமாரன் என்ற மனநிலையை ஒருவர் பெறக்கூடும். இத்தகைய உணர்வுடையவர் தமக்காக வாழ இயலாது என்பதையும் இங்கு சேர்த்துக் காணலாம். இத்தகையவர் இயேசு மாதிரிச் செயல்படவும் இயலும். இத்தகைய புரிதல் இயேசுவை, அவர் திருப்பணிகளைக் கீழ் இறக்குவதாக இருக்கவும் கூடாது என்பதில் நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

இயேசுவின் வாழ்க்கை மட்டுமல்லாமல், விவிலியத்தில் பழைய உடன்படிக்கை நூலில் இடம்பெறும் அனைத்து தலைவர்கள்,அரசர்கள் முதலிய பலரின் வாழ்வும் செயல்களும் வரலாற்று நோக்கில் ஆராயப் பட்டிருக்கின்றன. இனக்குழு சமூகத்தில் மக்கள் இயற்கையோடு இணைந்து வாழ்ந்தனர். மக்கள் மத்தியில் அடிமைத்தனம் இல்லை. அரசும், ஆதிக்கமும் தோன்றிய காலத்தில் மக்கள் அடிமைப்பட்டனர். அடிமைப்படுத்தப்பட்ட மக்களின் விடுதலையோடு இறைவன் இருந்தார். கூடாரங்கள்தான் இறைவனுக்கு விருப்பமான இடங்கள். அரண்மனைக்குள் அடைபடுவது, அவருக்கு உகந்ததாக இல்லை. அரசர்களின் கொடுங்கோன்மையை இறைவன் எதிர்த்தார். இறைவாக்கினர் மூலமாக இறைவன் இத்தகைய எச்சரிக்கைகளை விடுத்தார். இறைவனின் திருப்பணிகளைச் செயல்படுத்தும் மன்னர்களுக்கு இறைவன் நெருக்கமாக இருந்தார். இந்த முறையில் அபிரகாம், சவுல், மோசே, சாலமோன் முதலியவர்கள் பற்றிய ஆய்வுகள் கூறுகின்றன.

விடுதலை இறையியல் பற்றிப் பேசுபவர்கள் கிறித்தவ இறையியல், அரசியல் இறையியல் என்று இறையியலை வேறுபடுத்துகின்றனர். தென் அமெரிக்காவில் தொடங்கிய விடுதலை இறையியல் இன்று பலகளங்களிலும் தன்னை விரித்து வருகிறது. தென் அமெரிக்காவில் இராணுவ சர்வாதிகாரக் கொடுங்கோன்மைச் சூழல், இத்தகைய இறையியல் ஆக்கத்திற்கு ஒரு காரணமாகக் காணத்தக்கது. கிறித்தவக் குருமார்களின் ஆழ்ந்த படிப்பு/ஆய்வுகள் என்பதையும் முதன்மைக் காரணமாகக் கூறலாம். மக்கள் சார்பில் மதத்தைப் புரிந்து கொள்ள, விளக்க அந்தக்குருமார்கள், துறவிகள், மக்கள் மத்தியிலிருந்து ஏழைகள் மத்தியிலிருந்து வந்தவர்களாகவும் இருக்க வேண்டும்.

மக்களின் விடுதலை என்ற அரசியல் நோக்கில் கிறித்துவத்தை வைத்து விளக்குவதோடு, சூழலியல், பெண்ணியம், கருப்பர் இயல், தலித்தியல் என்ற நோக்கிலும் இறையியலை விரித்துரைக்கின்றனர். இறைவன் இயற்கையினூடே விளங்குகிறான் என்ற புரிதலும் வானத்துப் பறவைகளைப் பாருங்கள். அவை விதைப்பதும் இல்லை. அறுப்பதுமில்லை என்பது போன்ற இயேசுவின் சில கூற்றுகளும் இவர்களின் சூழலியல் இறையியலுக்கு ஆதாரமாகின்றன. இயேசு மாட்டுத் தொழுவத்தில் பிறந்தார். தச்சுப்பணியை மேற்கொண்டார். ஏழைகள், அடிமைப்பட்ட மக்களோடு வாழ்ந்தார். விடுதலைக்காகப் போராடினார். தாழ்த்தப்பட்ட மக்கள்பால் பரிவு கொண்டார். உயர்குணங்கள் பற்றித் தன் கதைகளில் கூறினார். இத்தகைய கூறுகளிலிருந்து பெண்ணிய இறையியல், கருப்பர் இறையியல், இந்தியச் சூழலில் தலித் இறையியல் முதலியவற்றை எடுத்து விளக்குகின்றனர். சில சான்றுகள் மட்டுமே இங்கு எடுத்துரைக்கப் படுகின்றன. எனினும் இவ்வகைச் சான்றுகள், பொருள்கோள் முறையிலேயே கூறப்படுகின்றன.

பழங்கால சூழலில், சூழலியல் என்ற சிக்கல் எழுவதற்கு நியாயமில்லை. பழங்காலத்தின் ஒருகட்டத்திலேயே பெண் அடிமைப் படுத்தப்பட்டாள். மக்களின் பெரும்பகுதியினர் அடிமைப்படுத்தப்பட்டனர். இந்தியச்சூழலில் மக்களில் ஒரு பெரும்பகுதியினர் தாழ்த்தப்பட்டவர்களாக ஆக்கப்பட்டனர். இத்தகைய புரிதலோடு, வரலாற்றை,இயேசுவின் வாழ்வை இன்று நாம் வாசிக்கிறோம். வாசிக்க முடியும். இன்றைய தேவைகளை, நம் ஆர்வங்களை முன்னைய வரலாற்றின் மீது ஏற்றிப் பார்க்க வேண்டியதில்லை. இயேசுவுக்கு இன்றைய நோக்கிலான பெண்ணியப்பார்வை இருந்திருக்க முடியாது. இயற்கை மனிதர்களுக்கு அன்று அந்நியமாக இல்லை. இயற்கையின் வழியே இறைவனைக் காண்பது என்பது இயல்பான ஒரு செயல். பல்வகைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்கான ஆதாரம் என்ற முறையில் இயற்கையையும், இறைவனையும் இணைத்துக் காணும் போக்கு பழங்காலத்திலேயே

ஏற்பட்டிருக்கும். சூழல்சீர்கேடுகள் மிக்க நிலையில் சூழல் சீர்கேடு கூடாது என்பது இறைவனின் நோக்கு என்று இன்று விளக்குகிறோம். இன்று நாம் உருவாக்கும் புதிய இறையியல் என்றுதான் இதைக் கூறமுடியும். வேதத்திலேயே நமக்கு ஆதாரம் உண்டு என்பது போன்ற சிந்தனை முறைதான். சூழலியல் இறையியலை, விவிலியத்திலிருந்து கண்டுபிடிக்கிறது.

இந்து மதத்தில் விடுதலை இறையியல் ஏன் தோன்றவில்லை என்பது பற்றிக் காண்போம். உறுதியான விடை கூறமுடியும் என்று தோன்றவில்லை. எனினும் சில சிந்தனைகளை முன் வைக்கலாம்.

இந்து மதத்திலிருந்து இந்துத்துவம் என்ற மதவாத அரசியல் திட்டமிட்டு உருவாக்கப்படுகிற இன்றையசூழல், இந்து மதத்திற்குள்ளிருந்தே விடுதலை இறையியலை இனி, இப்பொழுது உருவாக்க இயலாது என்பதைப் புலப்படுத்துகிறது. விவேகானந்தரின் குரலில் விடுதலை இறையியலை அடையாளம் காணமுடியும். ஆனால் இன்று விவேகானந்தரும் கூட இந்துத்துவத்தின் பகுதியாக அடைபட்டிருக்கிறார். இந்துத்துவ அரசியலோடுதான் சங்கராச்சாரியார் முதலியவர்களும், சைவ மடங்களும் சேர்கின்றன. குன்றக்குடி அடிகளாரின் குரல் இங்கு எடுபடவில்லை.

கிறித்துவ குருமார்களைப் போல இந்துமதத் துறவிகள் திட்டவட்டமான அமைப்போடும், ஆழ்ந்து அகன்ற கல்வி அறிவோடும் இல்லை. தென் அமெரிக்க நாடுகளில் நிலவுவதைப் போன்ற இராணுவ கொடுங்கோன்மை இங்கு இல்லை என்பதை முதன்மையான காரணமாகக் கொள்வதற்கில்லை. இங்கு கொடுங்கோன்மைகள் இல்லாமலும் இல்லை. பிரிட்டிஷ் அரசுக்கு எதிராக, இந்துத் துறவிகள் இயக்கம் நடத்தவில்லை. வங்கம் ஒரு விதிவிலக்கு என்றே கொள்ளவேண்டும். இராசாராம்மோகன்ராய் முதலியவர்களின் சீர்த்திருத்தங்கள், இந்துமதத்தின் அடிப்படைகளைத் தீண்டவில்லை. திலகர் முதலியவர்கள், இந்து மதத்திற்குள்ளிருந்தே அரசியல் விடுதலைக்குரலை கிளப்பினார்கள் என்பதும் உண்மைதான்.

காந்தியாரும் இந்த நெறியில் கூடியவரை, மதச்சார்பின்மை என்று கூறத்தக்க அளவில் காந்தியின் சார்புநிலை இருந்தது. அநீதி தலையெடுக்கும் காலங்களில் நீதியை நிலைநாட்ட நான் அவதரிக்கிறேன் என்று கண்ணன் கீதையில் கூறினான். விடுதலை இயக்கத்திற்கு இந்தக்குரல் பயன்பட்டது. 47க்கு பின்னர் நிலவிய சூழலுக்கு இந்தக்குரல் பொருத்தப்படவில்லை. முன்பே அரசியல்விடுதலை, பொருளியல் விடுதலையோடு இணைத்துப் பார்க்கப்பட்ட வில்லை. அரவிந்தர் முதலியவர்கள் கூட மக்களின்

விடுதலையைப் பொருளியல் விடுதலையாக மதிப்பிடவில்லை. அத்வைதம், சோசலிசம்நோக்கிய தீவிரமான குரலாக பொருள் படுத்தப்பட்டிருக்க முடியும். அதை இங்கு சங்கரமடங்கள் செய்யவில்லை.

பெரியாரின் நாத்திகவாதம், மதத்திற்கு முற்றான எதிர்க்குரலாகத்தான் இருந்தது. மதத்திற்குள் இருக்கும் விடுதலைக்குரலை பெரியார் காணவில்லை. கேட்கவில்லை. அன்பும் சிவமும் இரண்டல்ல என்ற சைவசமயச் சார்பினர் மடங்களுக்குள்ளே, பூசனைகளுக்குள்ளே முடங்கிக்கிடந்தனர். சொத்துக்களைப் பராமரிக்கும் நிறுவனங்களாக மடங்கள் இருந்தன. முதலாளிகளும், நிலவுடமையாளர்களும், அரசும் இவர்களோடு இருந்தனர். சாதியப் பாதுகாப்பு இவர்களுக்கு அரணாக இருந்தது. பார்ப்பனர்களில் பலர் பிற்போக்குவாதிகளாக இருந்தனர். பெண்களும், தலித் மக்களும், இந்து சமூக எல்லைக்குள் மதிக்கப்படவில்லை. இந்து சமயத்தின் வரலாறு இன்றுவரை ஆழமான மார்க்சியப் பார்வையில் மதிப்பிடப்படவில்லை.

கிறித்துவ விடுதலை இறையியல் மார்க்சியத்தின் வரலாற்றுப் பார்வையை, பொருளியல் பார்வையை ஏற்கிறதே தவிர, மார்க்சியத்தின் பொருள் முதல் வாதத்தை ஏற்பதில்லை. மார்க்சியம் கடவுளை மறுக்கிறது என்பதுதான் அவர்களின் மாறுபாட்டுக்குக் காரணம்.

கடவுள் என்ற கருத்தாக்கம், எத்தகைய வரலாற்றுத் தேவைகளிலிருந்து கிளம்புகிறது என்றோ, கடவுள் என்ற கருத்தியலுக்குள் எத்தகைய கூறுகள் அடங்கியிருக்கின்றன என்றோ விடுதலை இறையியல் மதிப்பிடவில்லை என்றே தோன்றுகிறது. துறவு முறையும், கிறித்துவ சமய நிறுவனங்கள் மாபெரும் தனியுடமைகளாக இருப்பதையும் இணைத்துப் பார்த்தால் இதற்கான காரணம் தெளிவுபடும்.

கிறித்துவ சமய எல்லைக்குள் பெண்களும் குருமார்களாக வரமுடியும் என்றும், தலித் மக்கள் அதிக அளவில்குருமார்களாக வரமுடியும் என்றும் உணர்வுகள் எழுந்திருக்கின்றன. நிறுவன மயப்படுத்தலுக்கு எதிரான ஒரு போக்கின் விளைவாக, கிறித்துவத் துறவிகள், மடநிறுவனங்களைவிட்டு வெளியேறி, தனி ஆசிரமங்கள் அமைக்கின்றனர். மக்கள் மத்தியில் விடுதலைக்கான இயக்கங்களைத் தோற்றுவிக்கிறார்கள். நாளடைவில் மேலும் நிலைமைகளில் மாற்றங்கள் ஏற்படக்கூடும். சூழலியல், பெண்ணுரிமை, தலித் விடுதலை முதலிய களங்களில் அவர்கள் செயல்படுகிறார்கள். பெரியாரியம் கிறித்துவத்திற்குள் நுழையவில்லை.

• இந்து மதத்திற்குள் சாதியம் ஆதிக்கப்போக்காக இருந்தது என்பதும் பார்ப்பனியத்திற்குத் தலைமை இருந்தது என்பதும் உண்மைதான். இந்தக் காரணம் கொண்டே இந்து மதத்திலிருந்து விடுதலைப் போக்கைத்

தோற்றுவிக்க முடியாது என்று கூறுகின்றனர். ஒற்றைப் பரிமாண விளக்கம் என்றே இதைப் புரிந்து கொள்ள முடியும். இந்துமதத்திற்கு முன்பு நெருக்கடி நேரவில்லை. ஆங்கில அரசு இந்து மதத்தோடு பார்ப்பனர்களோடு சமரசம் செய்து கொண்டது. பார்ப்பனர்களுக்கு வாய்ப்புக்களைத் தந்தது கிறித்துவப்பாதிரிமார்கள். பார்ப்பனர்களுக்கு எதிராக, தாழ்த்தப்பட்ட சாதியினரைத் தம்பக்கம் ஈர்த்துக் கொண்டனர். இந்து மதத்தின் ஆரிய பார்ப்பானியச் சார்பை தாக்கினர்.

இன்றும் இந்து மதத்திற்குள்ளிருக்கும் மக்கட்சார்பான போக்குக்கு அழுத்தம் தராத நிலைமைகளே நீடிக்கிறது. மார்க்சியர், இந்தப் போக்கைத் தூண்டி வளர்த்திருக்க வேண்டும். இந்து மதத்தை அழிக்க முடியாது. இந்துத்துவப் போக்கை எதிர்க்க வேண்டும் என்றால், மேற்கூறிய முறையில் மதத்திற்குள்ளிருந்தே, சில சீர்திருத்த - புரட்சிகர சக்திகளை இனங்கண்டு ஊக்குவிக்க வேண்டும். இந்துத்துவத்தை எதிர்கொள்வதற்கு இதுசரியான அணுகல் முறையாக இருக்க முடியும். பெரியாரிய நெறியும், இதை உட்கொண்ட மார்க்சியப் போக்கும் இந்துத்துவத்திற்கே ஆக்கம் / ஆதிக்கம் தரும்.

## 8. புதிர்களில் கடவுள்.

புதிர்கள் இருக்கும்வரைதான்
வாழ்க்கையும் வாழத் தக்கதாக இருக்கும்.

சோதிடம், கைரேகை முதலியவற்றில் நமக்குச் சில அனுபவங்கள் இருக்கக்கூடும். சென்றமாதம், சேலத்து நண்பரின் மகன், வயது 21 கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தவர். இருசக்கர வாகனத்தில் செல்லும்போது பின்னால் வந்த லாரியில் அடிபட்டு, அந்த இடத்திலேயே மாண்டார். இலக்கியம், கலை, வரலாற்றாய்வு என்ற முறையில் வாழ்ந்தவர் என் நண்பர். அவருக்கு ஒரேமகன். என் நண்பருக்கும், அவரது துணைவியாருக்கும் தம் எதிர்காலத்திற்கான நம்பிக்கைக்கு தம் ஒரே மகனைத்தான் நம்பியிருந்திருக்க வேண்டும். அவர்களின் சோகம் பலரையும் வெகுவாகப் பாதிக்கக் கூடியது.

சோதிடத்தில் என் நண்பருக்கு நம்பிக்கை இல்லை. எனினும், அவரைச் சார்ந்தவர்கள், இறந்த இளைஞனின் பிறந்தநாள், நேரம் முதலிய குறிப்புக்களோடு, ஒரு பெரிய சோதிடரை அணுகியிருக்கிறனர். குறிப்புக்களிலிருந்து கணித்த அந்த சோதிடர், எனக்கு உடல் நலம் இல்லை , அடுத்தவாரம் வாருங்கள் என்று கூறி அவர்களை அனுப்பிவிட்டார். இன்னொரு சோதிடரைப் பார்த்தபோது, ஆற்றில் விடவேண்டிய சாதகத்தை ஏன் எடுத்து வந்தீர்கள்? என்று கேட்டிருக்கிறார். இம்மாதிரி அனுபவங்கள் நம் அனைவருக்கும் ஏற்பட்டிருக்கக் கூடும்.

சோதிடர் கூறுவனவற்றில் பல பொய்யாகிவிடுகின்றன. சாதகக் கணிப்பில் தவறு என்றும், பிறந்த நேரத்தைக் குறித்து வைத்ததில் தவறு என்றும் காரணம் கூறுகிறார்கள். காரணங்களை ஒதுக்கி விட்டாலும், பத்தில் ஒன்றாவது உண்மையாகிறது என்பதை முற்றாக மறுக்க முடியாது. பத்தில் ஒன்று எப்படி உண்மை என்பதை நாம் விளக்க வேண்டும். சோதிடத்தில் மட்டும் அல்லாமல் எண்கணிதம் முதலியவற்றில் இதே மெய்மையைப் பார்க்கிறோம்.

நம் வாழ்க்கை முன்னே திட்டமிடப்பட்டிருக்கிறது என்று சோதிடர் கூறுவதை நாம் முற்றாகப் புறக்கணிக்க முடியாது. நாம் நம்அறிவை நம்பித் திட்டமிடுகிறோம். திட்டமிடல் என்பது தனிமனிதன் தன் சொந்த வாழ்க்கை முதற்கொண்டு அரசியல் வரை பல களங்களுக்கும் விரிந்து செல்கிறது. நம் திட்டங்களில், மேற்குறிப்பிட்ட முறையில் குறுக்கீடுகள் நேர்கிறபோது நாம் தடுமாறுகிறோம். திகைக்கிறோம்.

சோதிடர்களோடு சடங்குகள், கடவுளர்கள், அற்புதங்கள் செய்யும் சித்தர்கள், நமக்கு வரும் தீங்குகளை மாற்றும் முறையில் யாகம் தெய்வ வழிபாடு முதலியவற்றைச் செய்யத் தூண்டும் புரோகிதர்கள் முதலிய பலர் இந்த வலைப்பின்னலில் தொடர்பு கொண்டிருக்கிறார்கள். இந்த வலைப்பின்னலுக்கும், சமயத்திற்கும் என்ன இன்றியமையாத உறவு என்பதுதான் நமக்கு முன் இருக்கும் கேள்வி.

நம் வாழ்க்கை, முன்பே திட்டமிடப்பட்டது என்றால், இதை நிர்ணயித்தவர் யார்? கடவுளா? எதை வைத்து நம் வாழ்வை, வாழ்வுத் திட்டத்தை நிர்ணயிக்கிறார்? நம் வினைகளை வைத்து நிர்ணயிக்கிறார் என்றால் நமக்கு வினைகள் வகுத்தது யார்? பல பிறவிகளுக்கும் வினைத் தொடர்புதான் காரணமா? இந்தத் திட்டத்தில் விலகல் எப்படி நேர்கின்றது? மனிதனுக்கு சுதந்திரம் உண்டு என்பதை மறுக்க இயலுமா? இந்தச் சுதந்திரத்தை கடவுள் அனுமதிக்கிறாரா? எந்த அளவுக்கு அனுமதிக்கிறார்?

நமக்கு வரக்கூடிய தீங்கு முதலியவற்றைச் சில சடங்குகள் செய்து செலவு செய்து, கோவில்களுக்கு யாத்திரை செய்து விலக்க முடியும் என்றால், தன் திட்டத்திலிருந்து கடவுள் விலக்கு அளித்துக் கருணை செய்கிறாரா? இத்தகைய சிந்தனைகள் ஒருபுறம். கூடவே வேறுவகைச் சிந்தனைகள் சோதிடர்கள், புரோகிதர்கள், கோயில்கள், உருவ வழிபாடு விழா, சடங்குகள், சாத்திரங்கள், அற்புதச் சித்தர்கள் என்று ஒருபாடு கூட்டங்கள் சேர்ந்து கொள்கின்றன. இவர்களின் பிழைப்புக்கு இவை வழிசெய்கின்றன. ஏமாற்றுகள் ஏராளமாக நடைபெறுகின்றன. நம்பிக்கை உள்ளவர்களின் நம்பிக்கையை அழிக்கும் அளவுக்கு ஏமாற்றுக்கள் நடக்கின்றன.

இந்த வலைப்பின்னலில் மாட்டிக் கொண்டவர்கள் இதிலிருந்து தப்பமுடிவதில்லை. இந்த வலைப்பின்னலில் கடவுளையும் இவர்கள் மாட்டி வைத்திருக்கிறார்கள். நமக்கு வரும் ஊனங்கள், சாவு, குழந்தைப்பேறு, மனைவி முதலிய பாக்கியங்கள், செல்வம், அழிவு, வெற்றி தோல்வியை எந்த அடிப்படையில் தீர்மானிக்கிறார்.

நாம் செய்யும் வினைகள்-நல்வினை, தீவினைகளின் அடிப்படையில் நமக்கான விதி நமக்கு நிர்ணயிக்கப்படுகிறது என்ற கோட்பாடு இந்தியாவில் நெடுங்காலமாகக் கூறப்படுகிறது. இந்த வினை/விதிக் கோட்பாட்டை முன்வைத்தவர்கள் சமணர்கள், பௌத்தர்கள், பல பிறவித் தொடர்ச்சி, மேலுலகம், நரகம் முதலிய கருத்தாக்கங்கள் இதன் தொடர்ச்சியில் எழுந்திருக்கின்றன. வினை/விதிக் கோட்பாட்டின் அழுத்தம் கடவுள் மீதும் விழுந்திருக்கின்றன. கடவுளும் வினையின் விளைவுக்கு உட்பட்டவர். பிரம்மாவின் தலையைக் கொய்த சிவபெருமான் பிரமஹத்தி என்ற பாவத்திற்கு உள்ளாகி மண்டை ஓட்டில் பிச்சை ஏற்று அலைந்தார் என்பன போன்ற கதைகள் கூறப்படுகின்றன. ஆகவே கடவுளைக் காட்டிலும் ஆற்றல் மிக்கது விதி என்ற கருத்து வலிமை பெறுகிறது. யாகம் செய், மந்திரத்தைச் சரியாகச் சொல், கடவுள் கட்டுப்பட்டு வருவார் என்றும் மீமாம்சகர் கூறுகின்றனர். கடவுளும், மனிதனால் கட்டுப்படுத்தப் படுபவராகிறார்.

இவைபற்றிய உண்மைகள் அல்லது கற்பனைகள் ஒருபுறம் இருக்க, இவற்றோடு சமயம் கொண்டுள்ள உறவு நம் சிந்தனைக்கு உரியது இவைதான் சமயம், இவற்றை ஒதுக்கி வைத்துச் சமயத்தைப் பார்க்க முடியாது என்ற கருத்தும் ஏற்படுகிறது. இதை நாம் மறுக்கவும் இயலாது. நமக்கு முன் திட்டமிடப் பட்ட முறையிலே நம் வாழ்வில் நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன என்ற அடிப்படையிலிருந்து மேலும் சில கருத்துக்கள் செயற்பாடுகள் எழுந்திருக்கின்றன.

நம் வாழ்வில் நடப்பது எதுவானாலும் நாம் ஏற்றுக் கொள்ளவேண்டும். ஊனம், குழந்தைப்பேறு இன்மை, தோல்விகள், மரணம் முதலியவற்றை ஏற்றுக் கொள்ளவேண்டும். இவற்றால் மனம் தடுமாறக்கூடாது. நன்மை, தீமை இரண்டையும் ஒத்த மனப்போக்கில் ஏற்க வேண்டும். நாம் மற்றவர்களுக்கு, பிற உயிர்வகைகளுக்குத் தீங்கு செய்யக்கூடாது. கடவுளை நம்புகிறோமோ இல்லையோ பிறருக்குத் தீங்கு செய்யாமல் நன்மைசெய்து வாழவேண்டும்.

சமயம் இப்படி ஒரு அறவியலை முன்வைக்கிறது. அறவியல் செயலற்ற தன்மைக்குச் சில சந்தர்ப்பங்களில் இடம் அளிக்கும் அளித்திருக்கிறது. என்றாலும் இந்த அறவியலில் நற்பாங்கும் இருக்கத்தான் செய்கிறது.

வினை அல்லது விதிக்கோட்பாட்டுக்கு நியாயம் கூறமுடியும். பல நூறு/பல ஆயிரம் மனிதர்களின் முரண்பட்ட செயற்பாடுகளின் விளைவாகவே அடுத்துவரும் மனிதர்க்கான வாழ்க்கை அமைகிறது. தந்தை அல்லது பாட்டனுடைய உடல் கூறுகள்/பண்புக்கூறுகள் மகன்/பேரனிடம் தொடர்வது சாத்தியம். அதன் அடிப்படையில் பிறவித் தொடர்ச்சியை ஒருவாறு விளக்க முடியும். இதுமுற்றான விளக்கமும் அல்ல என்பதை இன்று நாம் புரிந்து கொள்வது எளிது. வரலாற்று முறையில் சமூக வினைப்பாடுகளின் தொடர்ச்சியை பழங்கால நிலைமைகளில் ஓர் உணர்வாக மட்டும் புரிந்து கொள்ள முடியும். எனினும் இத்தகைய விளக்கம்/புரிதல் அக்கால மனிதர்களுக்குத் தேவையாக இருந்தது. தாம் வாழும் உலகைப் புரிந்து கொள்வதன் மூலமே. அந்த உலகைத் தமக்கான உலகமாக மாற்றிக் கொள்ள முடியும்.

வினை/விதிக்கோட்பாட்டின் ஆதாரத்தில், பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யாதே என்ற அறத்தை வகுத்தார்கள் என்று விளக்க முடியும். வாழ்க்கை நலம் அல்லது பாதுகாப்புக் கருதிப் பிறமனிதர் மற்றும் உயிர்வகைகளுக்கத் தீங்கு செய்யக்கூடாது என்பது சமூக நலத்திற்கான அறம். அறவுணர்வு சமயத்தின் ஓர் இன்றியமையாத பகுதியாக இருந்திருக்கிறது. என்ன தீங்கு செய்தாலும் பரிகாரம் உண்டு என்பதும் சமயத்தின் பகுதியாகியிருக்கிறது. தீங்கு செய்வது தவிர்க்க இயலாதது என்ற ஆதாரத்தில் அல்லாமல், தீங்கு செய்வதைக்கூட வாழ்வுச் செயலாக மாற்ற இக்கருத்து உதவும்.

சமயத்திற்குள் இந்தத்தடுமாற்றம் இன்றுவரை இருக்கத்தான் செய்கிறது. எது அறம், எது மறம் என்பதைக் கறாராகப் பிரிக்க முடியாது என்ற சமூக உண்மையைக் கருத்தில் கொண்டு, சமயத்தின் தடுமாற்றத்தை நம்மால் புரிந்து கொள்ள முடியும். இந்தத் தடுமாற்றத்தை ஒதுக்கிய நிலையில், புரோகிதர் செயல்படலாம். அரசுக்குச் சார்பாகச் செயல்படலாம். போர்க் கொலைகளை முடித்தபிறகு யாகம் அல்லது தானம் செய்து கழுவாய் தேடிக் கொள்ளலாம். சமயம், இவ்வாறு புரோகிதமாக மாற்றப்படும் சூழலில் எதுவும் சாத்தியம்தான். அதேசமயம், இதற்கெதிரான போக்கும் சமய எல்லைக்குள் ஓயாது எழுகிறது என்பதை நாம் கவனிக்கத் தவறிவிடக் கூடாது. சோதிடம், கைரேகை முதலியவற்றுக்கும் கடவுளுக்கும் உள்ள உறவு பற்றித் திரும்பவும் பார்க்கலாம். தனிமனித ஊனம், சாவு முதலியனவும், வினைக்கோட்பாட்டின் ஆதாரத்தின் மூலமே தீர்மானிக்கப்படுகிறது என்றால் தீர்மானிப்பவர் கடவுளா? கடவுள் என்ற கருத்தை இடையில் வைத்துக் கொள்ளாமலேயே, சமணமும் பவுத்தமும் இதைத் தமக்குரிய நெறியில் விளக்குகின்றன. அந்த விளக்கம் இப்போது நமக்கு அவசியம் இல்லை. கடவுள் இல்லாமலேயே மனிதர்களுக்கு நேரும் பல கதிகளை விளக்க முடியும் என்ற முறையில் சோதிடம் இயங்குவதாகச் கொள்ளலாம். இங்கு சமயம் வேறொரு வடிவில் இடம் பெறுகிறது.

மனித அறிவுக்கு அப்பாற்பட்டு, மனித வாழ்க்கை நடைபெறுகிறது. தீர்மானிக்கப்படுகிறது. வாழ்க்கை அவனது கைகளில், கட்டுப்பாட்டில் இல்லை. பிறவி கூடாது. இப்படி ஒரு நெறியில் விளக்கம் நடையிடுகிறது. வரலாறு, சமூகம் என்ற ஆதாரங்களில் அக்கால நிலைமைகளில் வாழ்க்கை பார்க்கப்படவில்லை. அரசு என்பதற்கும் தனிமனித வாழ்க்கை நிர்ணயிக்கும் உறவு காணப்படவில்லை. மனிதன், உடல், உயிர், ஆன்மா, கடவுள், பிறவி, இறப்பு, மேலுலகம், நரகம், ஆசை ஒழிப்பு என்ற புள்ளிகளைக் கொண்ட வட்டத்தில் வைத்து வாழ்க்கை விளக்கப்பட்டது. அறிவியல், சமூக இயல், பொருளியல் முதலியவை விளக்கம் பெறாத பழங்காலச் சூழலில், சமயவாதச் சிந்தனையை மறுப்பதற்கில்லை.

சமயம் கடவுளை ஒப்புக்கொண்டோ மறுத்தோ, வாழ்க்கை பற்றி ஒரு தர்க்கத்தை முன் வைத்தது. இந்தத் தர்க்கம் இடைவிடாமல் கேள்விக்கு உட்படுத்தப்பட்டது. மறுக்கவும் பட்டது. வேறுவகை விளக்கங்களும் தொடர்ந்து முன் வைக்கப்பட்டன. பல நூற்றாண்டுகள், சில ஆயிரம் வருடங்கள், மனிதவாழ்க்கை மேற்குறிப்பிட்ட வட்டத்தை, வட்டங்களை விட்டு வெளிவர இயலவில்லை. மறுக்கப்பட்ட கடவுள் மீண்டும் மீண்டும் உயிர்த்தெழுந்தார். மதமும் புதிதுபுதிதாக உயிர்ப்பிக்கப்பட்டது.

அறிவும், ஆராய்ச்சியும் பெரிதாக வளர்ச்சி பெற்ற இன்றைய நிலையிலும், சோதிடம் தொடங்கி உள்ளுணர்வு வரை எத்தனையோ செயற்பாடுகளை நம்மால் விளக்க முடியவில்லை. கடவுளை மறுத்துவிட்டுச் சோதிடம் இயங்க முடியும். ஆனால் இப்படி இயங்கும் சோதிடர், துறவிகள் உண்டா என்ற கேள்வியையும் இங்கு கேட்டுக் கொள்ளலாம். கடவுளை மறுத்த நிலையிலும், நிரந்தரம், காலங்கடந்த நிலை, தரிசனம் முதலிய கூற்றுக்கள் வழியே இவர்களுக்குள் சமய இயக்கத்தையும் நாம் இனம் காண முடியும்.

நம் வாழ்க்கை நம் கட்டுப்பாட்டில் இல்லை. நம் தீர்மானித்தலில் இல்லை. நிகழ்வில் மட்டும் வாழ்க்கை இயங்கவில்லை. எதிர்காலமும் நிகழுக்குள் நிழலிடுகிறது. தொலைவில் உள்ளனவும் நம் உணர்வு எல்லைக்குள் வருகின்றன. நம் சிந்தனை எல்லைகள் சில சந்தர்ப்பங்களில் தகர்ந்து பேருணர்வு நம்மை ஆட்கொள்கிறது. நமக்குள் நாம் எப்பொழுதும் உறைவதில்லை. நம்மை நாம் இழக்கவும் செய்கிறோம். அது பேரின்பமாகவும் இருக்கிறது. பேருண்மைகள் வாழ்க்கை பற்றிய பேருண்மைகள் இத்தகைய மன நிலைகளிலேயே வசப்படுகின்றன. ஆகவே, உடம்பே, பொருளே மெய் என்று நம்மை அடைத்துக் கொள்வது நமக்கே இழப்பு.

பிரபஞ்சத்திற்கு பேருண்மைகளுக்கு நம்மை, நம் மனத்தைத் திறந்து வைத்துக் கொள்ள வேண்டும். மனத்தைத் திறந்து வைத்த நிலையில்தான்

பிற மனிதர்களோடு, உயிர் வகைகளோடு, உலகோடு, உரையாடல் சாத்தியம். அந்த உரையாடலில்தான் உறவுகள் தழைக்கின்றன. வாழ்க்கை விரிவும், செறிவும், அழகும் பெருகுகின்றன. இன்னும் புரிந்து கொள்ள இயலாத பிரபஞ்சத்தில்தான் நாம் வாழ்கிறோம். புரிந்து கொள்ளாத-இயலாததையும் சேர்த்தே நாம் வாழ்கிறோம். புதிர்களும் வாழ்வுக்கு அழகாகின்றன. புதிர்கள் இருக்கும் வரைதான் வாழ்க்கையும், வாழத் தக்கதாக இருக்கும். கடவுள் எதாவது சில வடிவங்களில் வாழ்க்கைக்குள் இருக்கிறார் - தேவைப்படுகிறார். கடவுளை நாம் எதிரியாகப் பார்க்க வேண்டியதில்லை. கடவுள் மனிதர்களோடுதான் இருக்கிறார். கடவுள் நமக்கு அந்நியர் இல்லை. கடவுளை எந்நேரமும் நினைத்துக் கொண்டாட வேண்டியதும் இல்லை. நம் அறிவைக் கொண்டு நாம்தீர்மானிக்கும் வரையில்தான் நாம் செல்ல முடியும். இடையில் கடவுள் வரலாம். சந்தித்துவிட்டு, நம் வழியில் நாம் செல்லுகிறோம். நாம் புரோகிதர் இல்லை. நாம் மனிதர்களாக இருப்போம்.

## 9. சமயம் - அறிவுக்குவியம்

சமயத்தைக் கவிதையாக இலக்கியமாக கலையாக
மாற்றுவதன் வழியே
சமயத்தின் ஆதிக்கத்தைக் குறைக்க முடியும்.

சமயத்தின் அழிவு பற்றி நாம் இன்றைய நிலையில்கூடச் சிந்திக்க முடியாது. சமயம் இன்னும் பல நூற்றாண்டுகளுக்கு நிலைக்கும். சமயத்தின் வடிவங்கள் பல. சில வடிவங்களிலேனும் சமயம், சமுதாயத்தோடு என்றும் தங்கியிருக்கும். சமயத்தைக் காத்து வைத்திருப்பதன் ஆதாரங்களில் மிக முக்கியமானவை, தனியுடமை நிறுவனங்களும் அரசு அதிகாரமும். இவை இன்றும் வலிமை பெற்று வருகின்றன. இவற்றின்வலிமை அதிகரிக்கிற அளவுக்கு, மக்களின் மனங்களில் சிதைவுகள் அதிகரிக்கும். இந்நிலையில் சமயத்தின் வடிவங்களும், ஆளுகையும் அதிகரிக்கத்தான் செய்யும். சமயம் போதையாக, அபினாக மாற்றப்படும் போக்கு அதிகரிக்கும். இதே அளவில், சமயத்தில் ஆன்மீக அம்சமும் மக்களை அதிகமாகக் கவரும். சமயநிறுவனங்களிடமிருந்து உடமைகளைப் பறித்தால் ஒழிய சமயத்தின் அதிகாரம், மற்றும் போதையைக் குறைக்க முடியாது. அரசு அதிகாரத்தை உள்வாங்கிக் கொண்ட நிலையில்தான், சமயமும் மக்கள் மீது அதிகாரம் செலுத்துகிறது. இம்முறையில் அரசின் நிறுவனங்களில் ஒன்றாகச் சமய நிறுவனம் செயல்படுகிறது.

பல்வேறு சமயங்களும் தமக்குள் முரண்பட்ட போதிலும் மக்கள் மீது அரசு மற்றும் தனி உடமை அதிகாரத்தைச் செலுத்துவதில் ஒன்றுபடத்தான் செய்கின்றன. சுரண்டல் அளவும் ஒடுக்கு முறையின் அளவும் அதிகரிக்கும் விகிதத்தில், சமய நிறுவனங்களும் மக்கள் மீது

ஆளுகை செலுத்துவதில் ஆதிக்கம் பெறுகின்றன. சமயத்தின் மீது எப்பொழுதும் மக்கள் சந்தேகத்துடன் இருக்கின்றனர். மக்களிடம் கடவுளர்கள் மீது அவநம்பிக்கை என்றைக்குமானதாகத்தான் இருக்கிறது.

புரோகிதர்கள் என்றும் கடவுளை, சமயத்தை உண்மையாகக் கொண்டதில்லை. கடவுளை இவர்களைப் போல யாரும் கேவலப் படுத்துவதில்லை. சமயம், கடவுளின் வழியாக இயற்கையோடு உறவு கொண்டிருக்கிறது. கதிரவனின் ஒளி, மதியின் ஒளி, மலர்களின் அழகு முதலியவற்றின் மூலம், கடவுள் நமக்குக் காட்சி தருகிறார். நம்மோடு உறவு கொண்டிருக்கிறார், என்ற முறையில் இயற்கையின் வழியே கடவுள் நம்மோடு உறவு கொள்கிறார். இயற்கையின் சிலஅம்சங்களோடு மனிதன் உறவு நிலைக்கும் காலம் வரை, கடவுளும் நம்மோடு கவர்ச்சியானவராக இருப்பார்.

கோயில், கட்டடங்கள், சிற்பங்கள், விழாக்கள், பாடல்கள், கதைகள், புராணங்கள் முதலியவற்றின் வழியே சமயம் தன் கலைத்தன்மையோடு நம்மோடு நெடுங்காலமாக உறவு கொண்டதாக இருக்கிறது.

சமயத்திலிருந்து கலையை வேறுபடுத்திப் பார்க்கும்போக்கு அதிகரித்து வருகிறது. அறிவியல், வரலாறு பற்றி ஆராய்தல் ஆகியவை அதிகரிக்கும் நிலையில் சமயத்தின் கலை அம்சம், சிலரால் கூடுதலாக மறுக்கப்படுவது போலவே, சிலரால் சமயத்தின் கலைத்தன்மை கூடுதலாக இரசனைக்கு உரியதாக அமையும்.

சமயம், இத்தகைய கலைத்தன்மை வழியே, நம்நெஞ்சை பிணித்துள்ளது. சுகமான பிணிப்பு இது. அறிவுக்குவியம் என்று நண்பர்கள் பேசுகிறார்கள். ஒவ்வொரு காலத்திலும் சமூகத்தின் அறிவு, சில களங்களில் குவிந்திருக்கிறது. அதாவது, இன்று அறிவியலில் அறிவு குவிந்துள்ளது என்று வைத்துக் கொண்டால், அறிவியல் வழியாக நாம் பிற அனைத்தையும் சமயம் கலைகள் உட்பட அனைத்தையும பார்க்கிறோம். மதிப்பிடுகிறோம்.

ஒரு காலகட்டம் முழுவதற்கும் ஒரு அறிவுக்குவியம் மட்டுமே என்று கொள்வதற்கில்லை. அறிவுக்குவியங்கள், சமூகப்பிரிவுகள் மற்றும் தனிமனிதர்களுக்கு மாறுபட்டு அமையக்கூடும். அரசியல்வாதிகள் அதிகாரத்தின் வழியே அனைத்தையும் பார்க்கக்கூடும். ஒரு நபருக்கேகூட சந்தர்ப்பத்தைப் பொறுத்து, அறிவுக்குவியங்கள் ஒன்றுக்கு மேற்பட்டதாகவும் அமையலாம்.

சமயங்கள், வரலாற்றில் நெடுங்காலம் மக்களின் சமூகப் பிரிவுகளின் அறிவுக்குவியமாக இருந்திருக்கிறது. சமயத்தின் ஆட்சிக்கு இது

முதன்மையான **காரணம்**. இந்தத் தன்மை, இன்றும் நாளையும் என்றைக்கும் நீடிக்கத்தான் செய்யும். சமயத்தை அழிக்க முடியாது. ஆகவே சமயத்தின் வடிவங்களில் இன்றும் சமூகத்திற்கு தனிமனிதர்களுக்குத் தேவையான வடிவங்கள் பற்றித்தான் நாம் சிந்திக்க வேண்டும். சமயத்தின் கலைத்தன்மை, அறம், புதிர்த்தன்மை, அறிவியல், மற்றும் சமூக இயல்தன்மை ஆகியவற்றுக்கு அழுத்தம் தருவதன் மூலம், மக்கள் மீது அதிகார நிறுவனமாகச் சமயம் இறுகுவதன் போக்கிலிருந்து மக்களை விடுவிக்கலாம்.

சடங்குமுறைகள் எல்லா காலங்களிலும் அறிவுக்கு ஒத்தமுறையிலேனும் நிலைக்கும். ஆகவே, சடங்குமுறைகளின் தொகுப்பாகச் சமயத்தைப் பார்ப்பதன் மூலம், நம் காலத்திற்குரிய சடங்கின் ஆதாரத்தில், சமயத்தை வேறுபடுத்தலாம். அரசியல் நிறுவனங்கள், அதிகார நிறுவனங்கள் என்றைக்கும் புரோகிதர்களையும் மூட நம்பிக்கைகளையும் வேண்டி நிற்கும். இவர்கள் தந்திரங்கள், சாகசங்கள் செய்வதில் தேர்ந்தவர்கள். இவர்கள்தான் புதிய மூடநம்பிக்கைகளைப் பரப்புபவர்கள். அதிகார நிறுவனங்கள்தான் இவர்களின் உற்பத்திக்கான மூலம் அதிகாரத்தை அழிப்பதில் நாம் என்றும் கவனம் கொண்டிருக்க வேண்டும்.

சமயத்தைக் கவிதையாக, இலக்கியமாக, கலையாக மாற்றுவதன் வழியே சமயத்தின் ஆதிக்கத்தைக் குறைக்க முடியும். நாத்திக வாதம் சமயத்தை அழிப்பதுபோலவே வளர்க்கவும் செய்யும். சமயத்தை அழிக்க முடியாது. சமயத்தின் கூட்டமைப்பை உடைத்து, அதன் கூறுகளை இனம்கண்டு, இனத்தை அதனதன் வகையோடு இணைத்து, சமயத்தின் ஆட்சியை மாற்றலாம். சமயத்தை ஒழிப்பதைவிட மாற்றுவது பற்றித்தான் நாம் சிந்திக்க வேண்டும். சமயத்தை நாம் ஒழிக்க முனைந்தால், சமயம் நம்மை ஒழிக்கும். சமயத்தை ஒழிக்க நினைப்பது கூட சமயம் பற்றிய அறியாமையின் விளைவு. கலை வாயிலாக மட்டும் அல்லாமல், அறிவியலின் வழியாகவும், சமயம் தன்னைத் தக்க வைத்துக் கொள்ள முடியும். ஆகவே, அறிவியல் வழியே, அதனை மாற்றுவது பற்றித்தான் நாம் சிந்திக்க வேண்டும். அரசு இருக்கும்வரை, வர்க்க ஏற்றத் தாழ்வுகள் இருக்கும்வரை, சமயமும் இருக்கும் என்றார் மார்க்ஸ். சமயத்தின் ஆதிக்கத்தை மட்டும் அல்லாமல் தேவையையும் இந்தக்கூற்று விளக்குகிறது. அரசு தகர்ந்து உதிர்வது போலத்தான் சமயமும் தகர்ந்து அப்புறம் உதிரவேண்டும். உதிரும்போது சமயத்தின் கூறுகளாக முன்பு காணப்பட்டவை, கட்டமைக்கப் பட்டவை. அதனதன் பகுதிகளில் இணையும் அதிகாரத்தை, அரசை, தனியுடைமையைத் தகர்ப்பது பற்றி முதன்மையாக நம் கவனம் செல்லட்டும்.

## 10. இந்து மதம்

சாதிச்சார்பு, தனியுடமை, அரசு அதிகாரம் ஆகியவற்றை விலக்கிப்பார்த்தால் இந்து மதத்தில் எது எஞ்சியிருக்கும்?

இந்துமதம் பற்றிய இன்று நிலைய விவாதிக்கிறார்கள். இந்து மதம் என்ற பெயர் எப்படி, எப்பொழுது வந்தது? இது ஒரு மதமா? பல மதங்களின் கூட்டமைப்பா? இந்து மதத்னைத் தோற்றுவித்தவர் யார்? இதற்கு மறைநூல் என ஒன்று உண்டா? இந்து மதத்திற்குள்ளிருந்து சாதியைப் பிரித்துப் பார்க்க முடியுமா? என்றெல்லாம் கேள்விகளும் ஆய்வுகளும் விரிவடைகின்றன. இவைபற்றிய தொகுப்புரை மற்றும் ஆய்வுகள், விமர்சனங்களுக்குள் இப்பொழுது செல்வது என் நோக்கமன்று. இதற்குள் சென்றால் வெளிவரவும் இயலாது.

இந்து மதம், எல்லாக் காலத்திலும் ஒரே வடிவத்தில் இல்லை. வரலாற்றுச் சூழலுக்கு ஏற்றவாறு மாறி வந்திருக்கிறது. வேத, காலத்தில் ஓர் இறைவன் என்ற கருத்து இல்லை. இயற்கைதான் அக்காலத்தில் தெய்வமாக இருந்தது. வேதங்களில் யாகம், மந்திரச் சடங்குகளுக்குத்தான் முன்னுரிமை தரப்பட்டது. உபநிடதங்களில்தான் இறைமை பற்றிய கருத்தோட்டங்கள் பெரிதாக எழுந்தன. யாகத்தை ஆதாரமாகக் கொண்ட வாழ்வியலுக்கு எதிரான கலகமாகப் புத்தமதம் எழுந்தது. இரும்பு உலோகம் பயன்பாட்டுக்கு வந்த கால நிலைமைகளில், நாகரிகத்தில் பெரும் பாய்ச்சல் நிகழ்ந்தது. சிந்தனையில் பெருத்த மாறுதல்கள் ஏற்பட்டன. அரசுகள், நகரங்கள், சமக்கிருதமொழி வளர்ச்சி முதலியன ஏற்பட்டன. சாங்கியம் முதலிய பல்வேறு தரிசனங்கள் தமக்குள் பெரும் தர்க்கங்களை நிகழ்த்தின. சாதியம் கேள்விக்கு உட்படுத்தப்பட்டது. பார்ப்பனர்களும், அரசர்களும் மோதிக் கொண்டனர். பிறகு இணைந்தனர். சூத்திரர்கள் பஞ்சமர்கள் மீது பாரமாய் அமர்ந்தனர். தம் ஆதிக்கத்தை வலுப்படுத்திக் கொண்டனர். இந்தக் கட்டத்தில்தான் சாதியம், இறுகத் தொடங்கியது. நால்வருண முறை சாதியத்திற்குள் கரைந்தது. சமூகம், இயக்கம் குறைந்து இறுதியில் தேக்கத்திற்கு இடம் கொடுத்தது. இந்தப்போக்கு பல நூற்றாண்டுகளுக்கு மாற்றம் இல்லாமல் நிலவியது. சங்கரரின் மாயா வாதம் தோன்றியது.

எட்டாம் நூற்றாண்டுக்குப் பிறகு பக்தி இயக்கங்கள் இந்தியாவில் பல பிரதேசங்களில் புயல் எனக் கிளம்பின. பெண்களும், சூத்திரர்களும் பக்தி இயக்கத்தின் முன்னணியில் நின்றார்கள். இவர்களின் குரல் சமயத்தின் எல்லைக்குள் வீரியத்தோடு முழங்கியது. பகவத்கீதை பக்தி உணர்வின் நோக்கில் பொருள்படுத்தப்பட்டது. மீண்டும் தேக்கம். பிரிட்டிஷார் காலம் வரை இதே தேக்கம். பின்னர் ஆங்கில ஆதிக்கத்திற்கு எதிராக இந்துமதம் தன்னை வெளிப்படுத்துகிறது

இந்துமதம் பற்றிய வரலாற்றை இப்படித் தொகுத்துரைக்கலாம். இந்தத் தொகுப்பு முறையில் குறைகள் வெளிப்படையாகத் தெரிகின்றன. விவரங்கள் போதுமான அளவில், இத்தொகுப்பில் இடம் பெறவில்லை தவிர, தொகுப்பவர் யாராக இருந்தாலும், அவரது நோக்கு நிலைதான், தொகுப்புச் செயலின் தொகுப்புச் செயலைச் செய்கிறது. அல்லது, தொகுப்பவர் குறிப்பிட்ட ஒரு நோக்கில்தான் தொகுப்புச் செயலைச் செய்கிறார். செய்யமுடியும். இப்பொழுது எனது நோக்கு பற்றிச் சொல்ல வேண்டும். இப்படிச் சொல்வது யார் யாரோடு விவாதிக்கிறோமோ அவர்கள் தம் நோக்கு நிலையைத் திரட்டிக் கொள்வதும் கருதித்தான்.

ஒருமதம் என்ற முறையில் வரலாற்றுச் சூழலுக்கு ஒத்தமுறையில்தான் இந்துமதமும் மாறி வந்திருக்கிறது. இந்து மதம் என்ற பெயர் எந்தக்காலத்தில் இதனோடு இணைக்கப்பட்டது என்ற கேள்வி எனக்கு முக்கியமானதாகத் தோன்றவில்லை. இந்துமதம் ஒரு தொகுப்பு பல முரண்பட்ட போக்குகள் இதற்குள் இணைந்திருக்கின்றன. இணைக்கப் பட்டிருக்கின்றன. இந்துமத உருவாக்கத்தில் ஆரியர் பங்களிப்போடு, திராவிடர் பங்களிப்பும் பெரும்பகுதி. இந்தியாவில் நிலவிய இனக்குழுக்கள் இதற்குள் இழுத்துக் கொள்ளப்பட்டன. இந்து மதத்திற்குள் இவை உள்வாங்கப்பட்டன. புத்தம், சமணம், முதலிய எதிர்நிலை எடுத்த சமயங்கள் இந்து சமய ஆக்கத்தை வெகுவாகப் பாதித்தன.

பக்தி இயக்கம் இந்து மதத்திற்குள் சலனத்தை, அதிர்ச்சியை ஏற்படுத்தியது என்பது உண்மைதான். இந்த அதிர்ச்சியும் உள்வாங்கப் பட்டிருக்கிறது. சாதியக் கட்டமைப்பை இந்துமதம் தனது உறுதியான கட்டமைப்பாக பற்றிக் கொண்டுள்ளது. பார்ப்பனர் இதன் தலைமையில் உச்சத்தில் தம்மை ஏற்றி வைத்துக் கொண்டனர். ஆரியரும், திராவிடரும் பெருமளவில கலந்துவிட்டனர். எனினும், ஆரியக்குரல்தான் பல சந்தர்ப்பங்களில் உரத்து ஒலிக்கிறது. இதன் காரணமாக எதிர்க்குரலும் தனக்குள் உரத்தை ஏற்றிக் கொள்ள நேர்ந்திருக்கிறது.

இந்து மதம் பற்றிய ஆய்வை எந்தக் கட்டத்திலும் கருத்தியல் பற்றிய ஆய்வாகக் குறைக்க முடியாது. சாதியம் பற்றிய ஆய்வை பொருளியலுடன் இணைத்தே பார்க்க வேண்டியும் இருக்கிறது. இந்து மதம் என்ற தொகுப்பினுள், பல்வேறு முரண்பட்ட கிளைகள் மக்கள் தொகுதிகள், வழக்காறுகள், கருத்தியல்கள் உள்வாங்கப் பட்டிருக்கின்றன. சமுதாயத்தில் தேக்கம் நிலவியக் காலச் சூழலில் - சூழலை வைத்தே இந்துமத ஆய்வை முடித்துக் கொள்ள முடியாது. இந்துமதம் நம் காலத்தில்தான் அரசியலாக மாற்றப்பட்டிருக்கிறது. இந்த அறவியலின் கூறுகள், என்றைக்கும் நிலவியதாகவும் கூறுவதற்கு இடம் உண்டு. மதம் என்ற தொகுப்பினுள்

சாதியத்திற்கு எதிரான கூறுகளும் இருக்கின்றன. சமூக, வரலாற்று ஆய்வின் மூலமே மதம் பற்றியும் நாம் புரிந்து கொள்ள முடியும்.

எத்தகைய பொருளியல் சக்திகள், மதத்தைப் பயன்படுத்தி, தம் ஆதிக்கத்தை சாதியின் வழியாக, சாதி என்ற அம்சத்தை மதத்திற்குள் இணைத்ததன் மூலம் தம் ஆதிக்கத்தை உறுதிப்படுத்திக் கொண்டன என்பதை அறிய முடியும்.

இந்து மத வரலாற்றை மேற்போக்காகப் பார்க்கிறபோதே, கடவுளர்களின் வரலாற்றையும் தொடர்ந்து பார்க்கிறோம். கடவுளர்-அவர்களின் பெயர்கள் - உருவங்கள் முதலியவை மாறிமாறி வந்திருக்கின்றன. கடவுளர்களுக்கு - இடையில் கலப்புக்கள் நேர்ந்திருக்கின்றனர். கடவுளர்கள் எவ்வளவு பேராற்றல் மிக்கவர்களாகச் சித்திரிக்கப்பட்ட போதிலும் மனிதர்களின் ஆற்றல்களுக்கு - ஆக்கங்களுக்கு தேவைகளுக்கு இவர்கள் உட்பட்டவர்கள்தான். கடவுளர்களுக்கு இடையில் தென்படும் முரண்பாடுகள் - மோதல்கள் மீண்டும் மனிதர்களுக்கு இனங்களுக்கு - சாதிகளுக்கு இடையிலான மோதல்கள்தான். பல்வேறு கடவுள்கள் எல்லாம் ஒரு கோபுரம் போல இணைக்கப்பட்டதைப் பார்க்கும்பொழுது இந்தியச் சமூக முறைமைக்கு ஏற்றதாகவும், இந்தப்போக்கை கணிக்க முடிகிறது. கருத்தியல்களும் இந்தப்போக்குகளும் மாறுபட்ட போக்குகளும் இவ்வாறு இணைக்கப் பட்டிருக்கக் கூடும்.

இவ்வாறு நாம் கூறுவதன் நோக்கம் பற்றிச் சில சொற்கள் - மதங்கள் என்பவை வரலாற்று நாடகத்தின் பகுதிகள் - வரலாற்றுச் சூழல்கள் - சக்திகள் மாறுகின்றன வரலாறு ஒரு படித்தாக, மாறாமல்தான் இருக்கிறது என்ற பார்வை. முன்னைய வரலாற்று மோதல்களை இன்றும் நிகழ்த்த வேண்டும் என்று கோருவதற்கு ஒப்பாகிவிடும். வரலாற்றைக் கூடியவரை - குறிப்பாக பழங்கால வரலாற்றைக் கூடியவரை - வெளியில் நின்று பார்ப்பவர்களாக நாம் இருக்க முடியும். நால்வருணம் - மற்றும் சாதிய முறையை நம் காலச் சூழலுக்குத் தேவை என்று கூறுபவர்களின், அரசியலை - பொருளியல் போக்கை - பழமை போக்கை - நாம் புரிந்து கவனம் கொள்ள வேண்டும். ஏற்றத்தாழ்வு இல்லாத எந்த ஒரு சமூகத்தின் வரலாற்றையும் நாம் சுட்டிக் காட்ட முடியாது. மேற்கில் ஒரு வடிவத்தில் - கிழக்கில் வேறு வடிவத்தில் ஏற்றத் தாழ்வுகள் இருந்திருக்கின்றன. செயல்பட்டிருக்கின்றன. சோசலிச சமூகத்திலும் ஏற்றத்தாழ்வுகள் இருக்கத்தான் செய்யும். வரலாற்றுச் சூழலில் - பொருளியல் தேவைகளை ஒட்டியும் ஏற்றத் தாழ்வுகள் செயல்படுகின்றன. சமூகத்தின் தலைமையை யார் கைப்பற்றுகிறார்களோ - அவர்களின் தேவையைப் பொருத்தும், ஏற்றத்தாழ்வுகள் கட்டமைப்படுகின்றன. ஆதிக்கம் தன்னை எந்தவகையில் வலுப்படுத்திக் கொள்ள முயன்றாலும், அதற்கு எதிரான சக்திகள் உடன்விளைவாக கிளர்ந்தெழத்தான் செய்யும்.

சிக்கல்களை முழுவதுமாக தீர்த்துக் கொள்வதும் சாத்தியம் இல்லை. வரலாற்றில் சில நிலவரங்கள் தங்கிவிடுகின்றன. இவை கேள்விக்கு உட்படுத்தப்படாமலும், கூட இருந்துவிட முடியும். எடுத்துக்காட்டாக, பெண் அடிமைத்தனம். வர்க்க வேறுபாடுகள், கடந்த ஓர் இரண்டு நூற்றாண்டில்தான் கேள்விக்கு உட்படுத்தப்படாமலும் கூட இருந்துவிட முடியும். எடுத்துக்காட்டாக, ஓர் இரண்டு நூற்றாண்டில்தான் கேள்விக்கு உட்படுத்தப்படுகிறது. சாதியம், இன்று உச்ச அளவில் கேள்விக்கு உட்படுத்தப்படுகிறது. புதிய சக்திகள், அரசியல் அரங்கின் முன்னிலைக்கு வந்திருக்கின்றன.

இந்துமத எல்லைக்குள் ஏற்றத்தாழ்வுகள், சாதி வடிவத்தில் செயல்படுகின்றன. இத்தகைய ஏற்றத்தாழ்வுகள், எல்லாக் காலத்திலும், கேள்விக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. மதத்தின் அடிப்படைக் கட்டமைப்பாக சாதியை வைத்திருக்க வேண்டும் என்று இன்றும் கூறுபவர்களின் ஆதிக்க அரசியலை இன்று நாம் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியும். மதத்தை விட்டுச் சாதியை வெளியேற்ற வேண்டும் என்ற குரலின் தர்க்கத்தையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும். வெளியேற்ற முடியாது என்ற தர்க்கத்தில் நாம் இறுகிவிடவும் முடியாது.

ஆதிக்கத்திற்கு எதிரான சக்திகள் திரளும்போது ஆதிக்கம் என்ற அநீதிக்கு எதிரான - நீதியின் குரலாகவே எதிர்ப்புச் சக்திகள் தம்மை வெளிப்படுத்திக் கொள்கின்றன. அநீதியைக் களைவது நீதிக்குரலின் - நோக்கம். அநீதியை, முன்னைய சக்திகள் பாதுகாக்கத்தான் செய்யும் நீதி - முற்றான நீதியாகவும் இருக்க முடியாது. எல்லையில் நின்றுதான் நீதியின் குரல் முழங்கும் வேறுவழியும் இல்லை. இதுவும் வரலாற்றின் தர்க்கத்திற்கு ஒத்ததுதான். நடுநிலைக் குரலும் கேட்டுக் கொண்டுதான் இருக்கும். நீதியைப் பற்றிப் பேசும்குரலும் தடுமாறத்தான் செய்யும். நீதியின் குரல் காரசாரமாக இருப்பதைப் போலவே நாராசமாகவும் இருக்கத்தான் செய்யும். ஆதிக்க வர்க்கம், அல்லது உயர்சாதியில் இருப்பவர், சமுதாயத்தில் ஆதிக்கவர்க்கம் மற்றும் சாதியின் இருப்பை கேள்விக்கு உட்படுத்தி, இந்தப் போக்கு அநீதியானது என்று குரல் எழுப்பும்பொழுது, அடக்கப்பட்ட வர்க்கம் / சாதியைச் சேர்ந்தவர் சந்தேகத்தோடுதான் பார்க்க முடியும். தவிர, இந்தக் குரலின் உண்மைத் தன்மையை இவர்கள் சோதித்துப் பார்க்கத்தான் செய்வார்கள். இது ஒரு சோதனைக் கட்டம். இது வேதனையாகவும் இருக்கக் கூடும். வரலாறு இத்தகைய முரண்களையும் உள்ளடக்கியதுதான்.

சாதியை விலக்கி/நீக்கி வைத்து, இந்து மதத்தைப் பார்க்க முடியாது என்பது ஒரு தீவிரமான அணுகல்முறை சாதியை விலக்கிப் பார்ப்பது இன்னொரு அணுகல்முறை. இதற்கும் தேவை இருக்கிறது. மதத்தின் ஆதிக்கத்தைத் தகர்ப்பதற்கான வழிமுறைகளுள் ஒன்றாக இதனையும் பார்க்க

முடியும். இறுகுவது பகைமையைத்தான் தீவிரப்படுத்தும். நண்பர்களையும் பகை அணிக்குத் தள்ளும்.

சாதியை விலக்கி வைத்துப் பார்க்கம்போது, சாதியை ஆதரிக்கும் ஆதிக்கச் சக்திகளின் கோரமுகம் வெளிப்படையாகத் தெரிகிறது. ஏற்றத் தாழ்வை கடவுளர் அனுமதிக்க முடியுமா? மதம் அனுமதிக்கலாமா? என்ற கேள்வியோடுதான் நாம் சாதியை விலக்கிப் பார்க்க கோருகிறோம். கடவுளர்களின் சாதியச் சார்பும் வெளித்தெரிகிறது. இந்து மதத்தின் மெய்யியலும், வெளிச்சத்திற்கு வருகிறது.

சாதியைப் போலவே ஆதிக்கத்தை - அரசு அதிகாரத்தை தனியுடமையை விலக்கிப் பார்க்கவும் வேண்டும். கோயிலுக்கு உடமை தேவையா? அரசோடு மதம் ஒத்துழைக்க வேண்டுமா? என்ற கேள்விகள் இந்த நோக்கில் எழுபவை. இப்பொழுதுதான் இந்து மதத்தில் எது எஞ்சியிருக்கும் என்பது புலப்படும். இந்து மதத்தை நோக்கி மட்டும்மல்லாமல் வேறு எந்த மதம் நோக்கியும் இத்தகைய கேள்விகள் எழுப்பத் தக்கவை.

## 11. பகவத் கீதை - பன்மைப் பொருள்

பகவத்கீதை நமக்கு கையேடு அல்ல
இந்துத்துவத்திற்கு எதிரான கருத்தியல் போராட்டத்தில்
பகவத்கீதையை நாம் பயன்படுத்த முடியும்

இந்துக்களின் மதநூல்களில் முக்கியமானதாக அறிஞர்களால் மதிக்கப்படுவது பகவத்கீதை. சாதாரண மக்களுக்கும் பகவத் கீதைக்கும் உறவு சிறிதளவும் இல்லை என்பதன் மூலம் நாம் ஓர் உண்மையை அறிய முடியும். அறிவு அல்லது தர்க்கத்தோடு உறவு உடையது பகவத்கீதை.

பகவத்கீதை பற்றிய ஆய்வு நமக்கு இன்னொரு உண்மையையும் உணர்த்துகிறது. பகவத்கீதை, காலம்தோறும் பலரால் தமது மற்றும் வரலாற்றுச் சார்புக்கு ஒத்த முறையில் பயன்படுத்தப் பட்டிருக்கிறது. அதாவது நவீனகாலத்தில் பொருள்கோள் என்ற முறையை, ஒரு முக்கிய ஆய்வு முறையாக மேற்கத்தியர் கண்டுபிடித்திருக்கிறார்கள். நமக்கு இந்த முறை அந்நியமானது என்று கருத முடியாது. வேதம் முதலிய நூல்களுக்கும், திருக்குறளுக்கும் இன்னும்பல நூல்களுக்கும் காலந்தோறும் புதிய உரைகள் - பொருள்கள் கூறப்படுகின்றன. இவ்வகைப் பொருள்கோளின் அறிவியல் சார்பை வெளிப்படுத்தியவகையில் மேற்கத்தியரின் ஆய்வுப் புதுமையை நாம் வரவேற்கிறோம்.

பகவத்கீதை பற்றிய ஆய்வில் ஓர் அணுகுமுறை, வேற்றுமை களுக்கிடையில் ஒற்றுமை காணுதல் என்ற முறையில் பல்வேறு

முரண்களுக்கிடையில், இறை என்ற உண்மைக்குப் பகவத்கீதை அழுத்தம் தந்திருக்கிறது என்பதாகும். பகவத்கீதை அது இந்திய தரிசனங்கள், பலநூறு சாதிகள், சடங்குகள், கடவுள் வழிபாடு முதலிய முரண்பட்ட பல போக்குகளையம் தனக்குள் உள்வாங்கியிருக்கிறது. இவை அனைத்தும், பிரம்மத்தின் அம்சங்கள். இவற்றின் வழியே இயங்குபவன் இறைவன். அவரவர் தமக்குரிய முறையில் தம் கர்மங்களை, தமக்கென விதிக்கப்பட்ட கடமைகளைச் செய்து கொண்டிருந்தால், இறைவனின் அருளைப் பெறமுடியும். கடமை, பொறுப்பு, முக்கியம் பலன் தானே வந்து சேரும். வேற்றுமைகள் இருக்கின்றன. அவற்றை ஏற்க வேண்டும். வேற்றுமைகளைப் பெரிதுபடுத்தக் கூடாது. வேற்றுமைகளினூடே இயங்கும் ஒற்றுமைப் பண்புக்கு ஒன்றுபடுத்தும் பண்புக்கே, முதன்மை தரவேண்டும் எல்லா மதங்களும் இறுதியில் கடவுளைச் சேர்கின்றன. இவ்வாறு விளக்கப்படுகிறது.

வேற்றுமையில் ஒற்றுமை என்ற இந்தக் கொள்கை, உடன்பாட்டு முறையிலும், எதிர்மறை முறையிலும் பொருள் படுத்தலுக்கு உள்ளாகியிருக்கிறது. சாதிகள், வழிபாடுகள், மதங்களுக்கிடையில் பகை கூடாது. ஒற்றுமை தேவை என்ற முறையில் பொருள் படுத்துவது ஒருமுறை. நேரு முதலியவர்களுக்கு இத்தகைய அணுகுமுறை உடன்பாடு. கோசாம்பி அவர்களின் அணுகுமுறை. எதிர்மறைத் தன்மை உடையது. இணைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு, பல்வேறு முரண்களை இணைத்து வைக்கிறது பகவத்கீதை. இந்தியனின் பைத்தியகார மனநிலைக்கு இது சான்று. அன்றியும், இத்தகைய இணைப்பின் உச்சத்தில் பரப்பிரம்மம் இருத்தப்படுகிறது. இந்த பிரம்மத்தின் வழியே, இந்தச் சமூகத்தின் உச்சத்தில் தன்னை இருத்திக் கொள்பவன், பிராமணன். சமரசப்படுத்துவது போன்ற தோற்றம் ஒரு மாயை.

இராதாகிருஷ்ணன் தரும் விளக்கம் இங்கு குறிப்பிடத் தக்கது. இந்தியத் தத்துவத்தின் உச்சநிலைதான், பிரம்மம் பற்றிய கண்டுபிடிப்பு பல்வேறு தோற்றங்களைக் கடந்து இவற்றின் வழியே ஊடுருவி இருப்பது, இயங்குவது பிரம்மம். இந்த பிரம்மத்தைத் தனக்குள்ளும், வெளியிலும், பிரபஞ்சம் முழுவதும் பார்க்கிற ஞானம், பிரம்மஞானம். இவன் பிராமணன். இந்த ஞானத்தை அடையப் படிநிலைகள் உண்டு. கர்மத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவன். மெல்ல, மெல்ல முன்னேறி இந்த ஞானத்தைப் பெற முடியும். பல பிறப்புக்கள் இதற்குத் தேவைப்படலாம். மனிதர்கள், அறிவு, உணர்வு என்ற முறையில் வேறுபாடு உடையவர்கள். போர்க்குணத்தின் மூலம் தன்னை வெளிப்படுத்துகிறவன் சத்திரியன். கர்மங்கள் மூலம் தன்னை வெளிப்படுத்துகிறவன் சூத்திரன். சாதிய வேறுபாடு என்பது மேலோங்கியுள்ள குணங்களின் அடிப்படையிலான வேறுபாடு. பிராமணனாகிற உரிமை பிறசாதியினர்க்கும் உண்டு. கர்மங்களின் வழியே முன்னேறி ஞானத்தை, பிரம்ம ஞானத்தைப் பெற

முடியும். அறிஞர்கள், ஆட்சியாளர்கள், வணிகர்கள், உழைப்பாளிகள் என்ற தொழில்முறை வேறுபாடுகள் இல்லாமல் சமூக இயக்கம் இல்லை. நால்வருண முறையை இராதாகிருஷ்ணன் தமக்குரிய முறையில் காண்கிறார். காந்தியும் இவ்வாறு ஏற்கத்தான் செய்கிறார். பிரம்மம் என்ற உச்சத்தைத் தனக்குள் பெறுவது இராதாகிருஷ்ணனுக்கு முக்கியமானது. காந்தியடிகளுக்கு இது முக்கியம் இல்லை. வருணம், சாதிஞானம் பற்றிப்பேச முடியும். இராதாகிருஷ்ணன் இத்தகைய முயற்சியில், ஆய்வில் ஈடுபடவில்லை. தத்துவ ஞானத்தின் உச்சம் இதுதானா? என்ற கேள்விக்கும் இடம் இருக்கிறது.

எல்லாமும் பிரம்மம் என்ற தத்துவ ஞானத்தில் முடங்கியவர்களுக்கு மத்தியில், விவேகானந்தர் முற்றாக வேறுபட்டுத் தெரிகிறார். நானும் பிரம்மம், நீயும் பிரம்மம் என்றால், ஆண்டான் அடிமை என்ற வேறுபாடு தேவையில்லை, என்று தொடங்கி, சோசலிசம் என்ற கருத்தாக்கம் வரை விவேகானந்தர் செல்லுகிறார். சங்கராச்சாரிகளுக்கு இந்தக் கருத்தாக்கம் உடன்பாடாக இருக்க முடியாது. காந்தியின் ஞானம் இதுவரை விரிவு பெறாது.

இந்திய சமுதாயத்தில் இயக்கம் நிலவிய காலத்தில் ஒரு வகையாகவும், தேக்கம் நிலைபெற்ற காலத்தில் வேறுவகையாகவும், பகவத்கீதை பொருள்கோளுக்கு உள்ளாகியிருப்பதையும் நாம் பார்க்க முடியும். இந்திய சமூகம் கி.பி.5/6 ஆம் நூற்றாண்டுகளில் தனக்கான பொருள் உற்பத்தி, பகிர்வு என்ற நிர்வாக முறையை உருவாக்கியது. பொருளியல் நடைமுறைக்கு ஒத்தமுறையில் நிர்வாக முறையை படைத்துக் கொண்டது. சாதிகளுக்கிடையில் உறவைத் திடப்படுத்தியது. சாதியக் கலப்பைத் தடுக்க முயன்றது. வேளாண்மை சார்ந்த உற்பத்திக்குக் கைவினைஞர்கள் உதவி செய்ய வேண்டும். கைவினைஞர்களுக்கு உடமை, நில உரிமை இல்லை. உடையாளர்கள்தான் கிராம நிர்வாகத்திற்கு உரிமை உடையவர்கள். கைவினைஞர்கள் போலவே பஞ்சமர்கள்; உடமையாளர்களுக்குச் சேவகம் புரியவேண்டும். உடமையாளர்களின் வீட்டுப் பெண்ணைத் திருமணம் செய்வதன் மூலம், உடமைக்கு மற்றவர் உரிமையாளர் ஆவார்கள். சாதிக்கலப்பு தொழில்முறையில் குழப்பங்களை ஏற்படுத்தும். நிர்வாகத்தில் குழப்பங்கள் ஏற்படும். உற்பத்தி பாதிக்கப்படும். சமூக இயக்கத்திற்கு இந்த அனுசரணை தேவை. சமூகம், இயக்கத்தில் இருந்த காலத்தில் பகவத்கீதை மேற்கூறிய முறையில் பொருள்படுத்தலுக்கு உள்ளாகியிருக்கும். இத்தகைய பொருள்கோள், சிலருக்கு உவப்பாக இருக்க முடியாது. சமூகத்தில் சாதிய முறை இறுகி, அதிகாரம் இறுகி, இயக்கம் அழிந்த நிலையில், வைத்துத்தான் சங்கரரின் மாயாவாதப் பொருள்கோளைப் புரிந்து கொள்ள முடியும்.

பக்தி இயக்கம் என்று தெரியவருகிற காலத்தில் பகவத்கீதை வேறுவகையில் பொருள்படுத்தப்பட்டது. பிரம்மம் உச்ச அளவிலான ஞானம். இந்த ஞானத்தைப் பிராமணனே பெற முடியும். ஆக நால்வருண வேறுபாடு முக்கியம் என்ற நிலமை மாறுகிறது. கர்மத்தைச் செய்பவரும், கர்மத்தின் வழியாக ஞானத்தைப் பெறமுடியும். அல்லது, கர்மமே யோகம் மற்றும் ஞானம். உழைப்பவர்களுக்கும் இந்த ஞானம் உரியது. கடவுள் தொலைதூரத்தில் இல்லை. கடவுள் நம்மை நோக்கி வருகிறார். நம்மோடு உறவாடுகிறார். இம்முறையில் பொருள்படுத்தும்போது, தாழ்த்தப்பட்டவர்களுக்கும், பெண்களுக்கும் இந்த ஞானம் உரியதாகிறது. கடவுள் வழிபாடு என்பது ஒரு கொண்டாட்டம். பக்தி செய்வதன் மூலம், பிரம்மத்தை இறைவனை எளிதாகப் பெற முடியும். இத்தகைய பொருள்கோள், சமத்துவம் கோருகிறது. சாதிகளை மறுக்கிறது. பிராமணர்களைக் கொண்டாடுவதில்லை. உழைப்பவர்கள் கொண்டாடப்படுவார்கள். வைணவம், இத்தகைய பொருள்கோளை செய்தது.

இந்தியா விடுதலை பெறுவதற்கான முயற்சிகள் எழுந்த காலத்தில் பகவத்கீதை பெரிதும் பயன்பட்டது. ஆன்மாவுக்கு அழிவில்லை. ஆயுதங்கள் ஆன்மாவைத் துண்டாட முடியாது. ஆன்மா நிரந்தரமானது என்றக் கருத்தாக்கம் இளைஞர்களை மகிழ்ச்சியோடு தூக்குமேடைக்கு ஏற வைத்தது. பக்கீம் சந்திரர், பகவத்கீதையைப் பெரிதும் பயன்படுத்திக் கொண்டார். சாதிக்குரிய சுயதர்மம் என்பதை மாற்றி, விடுதலை என்ற சுயதர்மத்தை மேற்கொள்ளுதல் என்று பொருள்படுத்தினார். அநீதி மலிந்த காலத்தில் நீதியைக் காக்க நான் அவதாரம் செய்வேன் என்ற பகவத்கீதை வாசகம், ஆங்கில அரசுக்கு எதிரான விடுதலை முழக்கத்திற்கு பெரிதும் ஆதாரமாக அமைந்தது. பார்த்தன் போல ஆயுதம் தாங்குவதற்கான ஊக்கத்தையும் தந்தது. இந்தியச் சூழல், பலருக்குக் குருச்சேத்திரப்போர்க்களமாக தென்பட்டது. பாரதியின் பாஞ்சாலி சபதம் நம்நினைவுக்கு வருகிறது. காந்தியடிகளுக்கும் பகவத்கீதை பயன்பட்டது. இம்சையை ஆயுதப் போராட்டத்திற்குத் தூண்டுகிற பகவத்கீதையை அகிம்சை நோக்கிப் பொருள்படுத்துவது, சாத்தியமில்லை என்றாலும் காந்தி இதைச் செய்ய முயன்றார். புறச்சூழலிலிருந்து விலக்கி, அகத்தில் நடைபெறும் போர்க்களமாகக் குருச்சேத்திரத்தை மாற்றுகிற காரியத்தை காந்தி செய்ய முயன்றார்.

இந்துத்துவவாதிகளுக்குப் பகவத்கீதை பெரிதும் பயன்படுகிறது. சாதி இருக்க வேண்டும். இந்துத்துவமே ஞானத்தின் உச்சம் என்ற முறையில் பகவத்கீதையை பயன்படுத்துகிறார்கள். கடமையைச் செய். பலனை எதிர்பாரதே என்ற வாசகம் மார்க்சியர்களுக்கு உவப்பளிப்பதாக இல்லை. நால்வருணமும், சாதிப்பாகுபாடும், மார்க்சியருக்கு உடன்பாடில்லை. விவேகானந்தரின் விளக்கம் வர்க்கச் சார்பில், பகவத்கீதையைப்

பொருள்படுத்துவதற்கு நெருக்கமாக இருக்கிறது. நீதியை நிலைநாட்ட ஆயுதம் தரித்தலும் மார்க்சியருக்கு உடன்பாடானதுதான். ஆன்மாவுக்கு அழிவில்லை என்பது மார்க்சியரின் பொருள். முதல்வாதத்திற்கு எதிரானது. கீதையின் பிரம்ம ஞானம், மார்க்சியருக்கு பெரிதும் கசப்பானது. இந்துத்துவத்திற்குப் பயன்படும் நூலை நாம் நிராகரிக்க வேண்டும் என்பது மார்க்சியர் நிலைப்பாடு.

இந்தியாவின் விடுதலைக்கான போராட்டத்தில் மக்களைத் திரட்ட பகவத்கீதையை இந்துசமயத் தலைவர்கள் பயன்படுத்திக் கொண்டதை மார்க்சியர் ஏற்பதோடு ஒரு விமர்சனத்தை முன் வைக்கின்றனர். மதஉணர்வை இயக்கத்திற்குள் கொண்டு வந்ததன் விளைவாக இந்து-முஸ்லிம் வேறுபாட்டுக்கு அது வித்திட்டது என்றார்கள். ஆக இது தவிர்க்க இயலாத தீமை. இதை நாம் களைந்தாக வேண்டும். மதத்தையும்அரசியலையும் பிரித்து வைக்க வேண்டும். மதச்சார்பின்மையை, விஞ்ஞான நோக்கு முதலியன நமக்கு இன்றியமையாதவை. இப்படி மார்க்சியர் கூறுகின்றனர் கணிக்கின்றனர்

இந்தியமக்களிடமிருந்து மத உணர்வை முற்றாகக் களைய முடியாது. மதத்தை எவ்வாறு பொருள்படுத்துவது என்பதில் மார்க்சியருக்கு உள்ள குழப்பம்-சிக்கல் பற்றி இங்குக் குறிப்பிடவேண்டும். சுருக்கமாக இங்கு சிலவற்றைத் தொகுத்துக் கூறலாம். மதம் கூறும் கடவுள் என்பது ஒரு கருத்தாக்கம். வரலாற்றுச் சூழலில், மக்களின்-சமூகப் பிரிவுகளின் தேவைகளுக்கு ஒத்த முறையில், கடவுட் கருத்துக்கள் எழுகின்றன. மதம், முற்றாக அபின் அல்ல. மதம் என்பது ஒரு காலத்திய பார்வை-அறிவு மார்க்சியத்தின் பொருள் முதல் என்ற பார்வையும், ஒருமைக் கோட்பாடாக விளக்கப்படுவதன் அடிப்படையில் பிரம்மம் என்ற கருத்தியலைப் பார்க்க முடியும். சமய உணர்வுக்கு வரலாற்றின் தேவைகளுக்கு ஒத்த முறையில், புதியபொருள் கூறிமக்களைத் திரட்டுவதன் மூலமே,சமய உணர்விலிருந்து மக்களை விடுவிக்க முடியும்.

ஆன்மா அழிவில்லாதது என்பதை மனித்னுக்கு தத்துவத்திற்கு-மனித இலட்சியங்களுக்கு, அழிவில்லை என்றும், வரலாற்றில் மனிதனுக்கு அழிவில்லை, சமூகமாற்றங்கள் வழியே வரலாறு முன் செல்லுகிறது என்ற முறையிலும் பொருள்படுத்தலாம். இயற்கையிலிருந்தும், சமுதாயத்திலிருந்தும், தன்னிலிருந்தும் அன்னியப்பட்ட மனிதன், இயற்கையோடும், சமுதாயத்தோடும், வரலாற்றோடும், தன்னோடும் இணைக்கமுற அமைத்தல் என்பதனுள், பிரம்மஞானத்தைக் காண-காட்ட முடியும். விவேகானந்தர் நெறியில், நாமும் முன் செல்ல முடியும். வரலாறு நமக்குள்ளும், வரலாற்றினுள் நாமும் இயங்குவதை, கீதைகூறும், விசுவரூப தரிசனத்தினுள் நாம் காண முடியும்.

சாதி-ஏற்றத்தாழ்வுகள் நமக்கு உடன்பாடில்லை என்ற போதிலும் ஏற்றத்தாழ்வில்லாத சமூகம் இல்லை என்ற உண்மையை நாம் மறந்துவிடமுடியாது. சாதி மற்றும் வருணவேறுபாடுகளுக்கு எதிராக நாம் முழங்கும் பொழுது எச்சரிக்கையோடுதான் இருக்க வேண்டும். மார்க்சியக் கட்சிக்குள்ளும் ஏற்றத்தாழ்வும், சாதி உணர்வும் செயல்படுவதைக் காணத் தவறக்கூடாது.

பகவத்கீதை நமக்குக் கையேடு அல்ல. ஆனால், பகவத்கீதையைப் பயன்படுத்துவதன் மூலம் இந்துத்வத்திற்கு எதிரான கருத்தியல் போராட்டத்தில் நமக்கான பங்கைச் செலுத்த முடியும். சமயம் பற்றி நாம் தரும் விளக்கத்திற்கு நிகராக, வேறு யாரும் தர இயலாது. மக்களை நெருங்கிச் செல்வதற்கு, இதுவும் ஒரு நெறி. மதம் நம்மைத் தோற்கடிக்க நாம் அனுமதிக்கக் கூடாது. மதத்தை வெல்வது என்பது அதைக் கடந்து செல்வதாகும்.

## 12. ஓசோவின் வெளிச்சம்

ஓசோவின் வெளிச்சம்
விடுதலை வேட்கை உடையவனுக்கு
கிடைக்கும் வெளிச்சம்

ஓசோ-தனக்கு சமயம் உடன்பாடில்லை. சமயத்தன்மைதான் உடன்பாடு என்கிறார். உலகில் உள்ள 300 சமயங்களும் இறுகிய பாறைகள். இவற்றில் உயிர்த்தன்மை இல்லை என்கிறார். இவை பழமைக்கான கோட்டைகள். உயிர்வாழ்வை இவை அனுமதிப்பதில்லை. கடவுள் இல்லை. உலகைப் படைத்ததாகச் சொல்லப்படும் அவர், உலகைப் பிசாசுவிடம் ஒப்படைத்தார். பிசாசுஅரசியல்வாதி.

பிரபஞ்சத்தின் சீரான இயக்கம், பருவங்கள் முதலியவை ஒழுங்கு தவறாமல் இயங்குகின்றன. இத்தனைப் பெரிய பிரம்மாண்டத்தைக் கடவுள் படைத்துக் காத்துவர இயலாது. குற்ற உணர்வை உங்களுக்குள் மதவாதி, புரோகிதன் உருவாக்குகிறான். பசிக்கு உணவு மாதிரி, உடலுக்கு காமம். இவை தேவை. இவற்றின் நுகர்வு குற்றமில்லை. மதம், எல்லாவற்றையும் ஒழுங்குமுறை ஆக்குவதன் மூலம், மனிதனைக் குற்றவாளி ஆக்குகிறது. உயிர் இயக்கத்தைச் சாகடிக்கிறது.

இயற்கையில் உள்ளம் கலக்கவேண்டும். இது விடுதலை. ஏழைகளுக்கே தேவ உலகம் என்பது பொய்யானகூற்று. இப்படிப் பேசுகிறார் ஓசோ.

மனிதனுக்கு பூரணமான விழிப்புணர்வு தேவை என்பது ஓசோவின் அறிவுரை. உனக்கு நீயே குரு என்றும் கூறுகிறார். நாம் மறுக்கவில்லை.

ஓசோவின் கருத்துரைகள், எல்லாவற்றின் எல்லைகளையும் தகர்க்கின்றன. இது உண்மை இல்லை. பழமையின் முடக்கத்தைத் தகர்க்கிறார் ஓசோ. அதே சமயம், மனிதச் சிந்தனையின் எல்லைக்குள்தான் இருக்கிறார். மதங்கள் பற்றி அவரது விமர்சனத்தை முற்றாக எடுத்துக் கொள்ள இயலாது. வரலாற்றின் எல்லைக்குள்வந்துவிட்ட மனிதனை, வரலாற்று வெளியில் தள்ள முடியாது. வரலாற்றின் எல்லைக்குள்ளான சுதந்திரத்தைத்தான் மனிதன் அனுபவிக்க முடியும். இயற்கையினுள், மனிதன், அரசியல்வாதியின்அகங்காரம் தெரிவதில்லை. இயற்கையில் உயிர்கள், ஒன்றை மற்றது சார்ந்து, உண்டு உண்ணப்பட்டு, உறங்கி, இயல்பாகப் புணர்ந்து வாழ்கின்றன. அல்லது இப்படி நாம் கருதுவதுகூட மனிதனோடு ஒப்பிடுவதன் மூலம்தான்,மனித வாழ்க்கை 'திட்டமிடப்படுகிறது. அரசு,மனிதர்களுக்காகத் திட்டமிடுகிறது. முதலாளிகள் அபகரிக்க, வறுமை, நோய், நொடிகள் பரவுகின்றன. வர்க்க ஏற்றத் தாழ்வான சமுதாய அமைப்புக்குள்தான் விதிமுறைகள், ஒழுங்குகள், திட்டங்கள், அதிகாரம், வன்முறை முதலியவை ஏற்பட்டிருக்கின்றன. இவற்றிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள மனிதன் முனைகிறான். போராடுகிறான். தன்னையும், உலகச் சூழலையும், தான் எய்த வேண்டிய இலக்கையும், சித்திக்கிற கடவுளைக் கண்டு பிடிக்கிறான். கடவுள் ஆதிக்கவாதியின் கோட்டைக்கு அரணாக காவலாக ஆக்கப்பட்டிருக்கிறார். கடவுளுக்கு எதிராக மனிதன் கலகம் செய்கிறான். ஆதிக்கத்தை எதிர்த்த போராட்டத்தின் போதுதான் தன் பார்வைக்குள் வெளிச்சங்கள் காண்கிறான். கடவுள் பற்றிய உண்மையைப் புரிந்துகொள்கிறான்.

அறிவும், புரிதலும், வீரமும் உடைய இவனுக்குப் புரோகிதர் தேவையில்லை. இவன் அடிமை இல்லை. அடிமைத்தனம் இவனுக்கு உடன்பாடில்லை. இவன் கடவுளை விடுவிக்கக் கூடியவன். கடவுளை இயற்கைக்குள் விடுவிக்கக் கூடியவன். விடுவிக்கிறான். முதலில் சிந்தனைக்குள், பிறகு உலகச்சூழல் என ஒன்று இருக்கிறது. அரசு-அரசியல்-முதலாளியும்-ஏற்றத்தாழ்வு-பற்றிய தொடர்ச்சியான சிந்தனை வளையங்கள் இருக்கின்றன. பொருளியல்-ஆதிக்க எல்லைகளுக்குள் முடங்கிய நிலையில் மனிதனுக்கு விடுதலை இல்லை. கடவுளுக்கும் விடுதலை இல்லை. ஆதிக்கச் சூழல் தகர்ப்பை ஓசோ பேசுவதில்லை. வரலாற்றில் 20 ஆம் நூற்றாண்டுவரை வந்த மனிதன் ஓசோ. ஜென் ஞானத்தின் தொடர்ச்சி மற்றும் விரிவு ஓசோ. கடவுள் மதம் ஆகியவற்றின் மூலம் ஓசோ கூறுகிற இறுகிய தன்மை-சாவு, அடிமைத்தனம், சமூக அமைப்பின் ஆதிக்கத்தின் அடிமைத்தனம், கடவுளை-எதிர்ப்பதன் மூலம், முதலாளிய ஆதிக்கத்தையும் ஓசோ எதிர்ப்பதாக நாம் பொருள்படுத்த வேண்டும். பிசாசு இன்றி, நரகம் இன்றி, கடவுள் இல்லை. புரோகிதர் இல்லை. ஒரு நாணயத்தின் இருபக்கங்கள் இவை. இவற்றுக்கும் அர்த்தம் உண்டு. இவை பொய்மைகள் அல்ல. இவை உண்மைகள்.

ஓசோவின் வெளிச்சம், எல்லைக்குட்பட்ட வெளிச்சம் தேவையான வெளிச்சம். இது மனித வெளிச்சம். அறிஞனுக்கு, விடுதலை வேட்கைஉடையவனுக்கு, ஆதிக்கத்தை எதிர்ப்பவனுக்கு, பொருளுக்குள் முடங்காதவனுக்கு, எவரையும் அடிமைப்படுத்த விரும்பாதவனுக்கு கிடைக்கிற வெளிச்சம். வெளிச்சம் முதலில் மனிதனை ஆரோக்கியம் உடையவனாக மாற்றும். இன்றைய உலகச்சூழலில், ஒவ்வொரு நாளும் பக்தனைப்போலவே, இந்த வெளிச்சத்தைத் தனக்குள் இவன் உற்பத்தி செய்து கொள்ளவேண்டும். இறுதி-நிரந்தரமான வெளிச்சம் சோசலிசம்தான். ஓசோவை இளைஞர்கள் விரும்புவது எதற்காக?

ஓசோவின் ஒளி / ஆதிச்சமூகத்திலிருந்து இன்றுவரை தொடரும் ஒளி. இது சோசலிசத்திற்கான ஒளி-சோசலிசம் பற்றிப் புரிதல்-வரலாற்றுப் போக்கில் பெரிதாக எழுந்திருக்கிற ஒளி-மார்க்சியத்திற்கு இந்த ஒளி முரணானது அல்ல. ஓசோவுக்குள் மார்க்சியம் இந்த ஒளி வடிவில் இருக்கிறது. நாம் கண்டுகொள்ள முடியும். ஓசோவை இப்படித்தான் பொருள்படுத்த வேண்டும். இந்த ஒளி மீண்டும் சமயத்தின் ஒளிதான்.

சமயத்தை ஓசோ மறுக்கிறார். புரோகிதரை மறுக்கிறார். சமயத்தைப் புதுப்பிக்கிறார். சமயத்திற்குள் உள்ள ஒளியை விடுவிக்கிறார். விடுதலை ஆவேசத்தில் வரலாற்றின் எல்லை கடந்து தாவுகிறார். சிந்தனைப் பாய்ச்சலின் இயல்பு. ஓசோ நம் நன்றிக்கு உரியவர்தான்.

## 13. நீட்சேவின் அதிமானுடன்

நீட்சேவின் அதிமானுடன்
ஒரு அசலான பிராமணன்

நீட்சேவின் அதிமானுடன் ஒரு புதிய கடவுள். கிறித்துவம், பணிவு, அடக்கம் முதலிய பண்புகளை வலியுறுத்தியதன் மூலம், நாகரிகச் சிதைவுக்குக் காரணமாயிற்று. மக்களாட்சி முறை, சராசரி மனித நிலைக்கு எல்லோரையும் தாழ்த்தியது. குழு ஆட்சி, கூட்டத்தின் ஆட்சி மேன்மக்களைத் தோற்றுவிப்பதில்லை. கலாச்சாரம் என்பது பிரான்ஸில் மையம் கொண்டது. பிரிட்டன், ஜனநாயகம் என்று பேசி, எல்லாவற்றையும் அவற்றின் அடிமட்டத்திற்குக் குறைத்தது. வியாபாரிகளின் நாகரிகம் பணத்திற்கு கடைத்தெருவுக்கு முக்கியத்துவம் தந்தது.

மனிதனின் பரிணாம வளர்ச்சி; இக்காரணங்களால் தடைப்பட்டிருக்கிறது. பரிணாமத்தின் அடுத்த கட்டம்-உயர்கட்டம் அதிமானுடன் / கடவுள் இறந்துவிட்டார். பாதிரிமார்கள் உயர் நாகரிகத்தைத் தோற்றுவிக்க முடியாது. மேன்மக்கள் Aristocracy முன்னைய ஐரோப்பிய நாகரிகத்தின் காணிக்கை. இதைக் கிறித்துவமும், மக்களாட்சி முறையும்

வியாபாரிகளின் ஆட்சியும் அழித்துவிட்டன. தேசியம் மனிதனைச் சிதறடிக்கிறது. ஐரோப்பா மீண்டும் ஐக்கியப்படும். அப்போது மேன்மக்கள் ஆட்சிவரும். நெப்போலியன் ஐரோப்பாவை இணைத்தான். பிளேட்டோவின் அரசியலில் உயர்மனிதர்கள்தான் ஆட்சியை நெறிப்படுத்தினார்கள். மேன்மக்கள் ஆட்சிவரும் நெப்போலியன். ஐரோப்பாவை இணைத்தான். பிளேட்டோவின் அரசியலில் உயர் மனிதர்கள்தான் ஆட்சியை நெறிப்படுத்தினார்கள். மேன்மக்கள் ஆட்சி அலுவலர்களாக இருக்க முடியாது. அவர்கள் நெறிப்படுத்துபவர்கள் மட்டுமே. ஆடவர்களின் மகிழ்வுக்காக இருக்க வேண்டியவள் பெண். ஆண்மகன், தன்னைப் பெண்ணிடம் இழந்துவிடக் கூடாது. ஆண் அதிகாரத்தை உள்வாங்கிக் கொண்டவளாக பெண் ஆகிவிடக் கூடாது. குழந்தைப்பேறு அவள் கடமை. புணர்ச்சி இன்பம் என்பது ஆண்/பெண் சேர்க்கைக்குக் காரணமாக இருக்க முடியாது.

இப்படி விரிகிறது நீட்சேவின் சிந்தனைகள். நீட்சே படைத்த அதிமானுடன்தான்,ஜாதுஷ்டிரா. இவன் மலைச்சிகரத்தில் இருந்தவன். பிறகு மனிதர் மத்தியில் வந்தான். நீட்சே வாழ்வு முழுவதும் தனிமையில் கழிந்தது. இந்த அதிமானுடன் தனியன். இவனுக்கு கவிதை பிடிக்கும். இவன் கவிதை மயமானவன். இவன் தத்துவாதி. நீட்சே தோற்றுவித்தது. ஒருபுதிய சமயம் என்கிறார் வில் டியூரண்ட். இப்படித்தானா? கடவுள் இறந்துவிட்ட உலகில் மனிதனுக்கு விதிக்கப்பட்டது. தனிமைதானா? நீட்சேயின் தொடர்ச்சியான கருத்துரைகளில் அவரது சிந்தனைத்திறன் will to power சக்தி வழிபாடு வெளிப்படையாகத் தெரிகிறது. சராசரி-மிகச் சாதாரண - மனிதனின் வாழ்க்கை. அவருக்கு அறவே உடன்பாடில்லை. அவன் புலன்களின் பங்கினை ஒருபோதும் மையப்படுத்தவில்லை. அரசியல், அதிகாரம் ஒன்றைப் புதியதாகப் படைப்பது அவர் நோக்கமாக இருக்கவில்லை. அவரது சிந்தனைகள் வழியே, மனித நாகரிக வரலாற்றின் சில கதிகளை, சில போக்குகளை நாம் பரிசீலனை செய்ய முடியும். அவரது மேன்மகன் நிலப்பிரபு என்று கூறுவதற்கில்லை. பிளேட்டோவின் பிராமணன் இவன். பூர்சுவா நாகரிகச் சீரழிவுக்கு, சிதைவுக்கு இவன் எதிர்நிலை. நீட்சேவின் Tragic Hero இவன் ஒருவீரன். நீட்சேவின் வாழ்க்கை. அவர் முன்வைத்த அவல நாயகனின் வாழ்க்கைதான். கடவுள் இந்த உலகத்தைப் படைத்து, பிசாசிடம் ஒப்படைத்திருக்கிறார் என்று இவர் கூறுவதன் பின்னணியில் நீட்சேவைப் பார்க்க முடியும். வால்டேர் கூறினார்: கடவுள் இல்லை; நாம் ஒருபுதிய கடவுளைப் படைக்க வேண்டும் கடவுள் இல்லாமல் உலகம் இருக்க முடியாது என்பது வால்டேரின் கருத்து நீட்சேயின், அதிமானுடன்இந்தக் கடவுள். இவன் பிசாசு அல்ல. பிசாசு போலஇவன் தோற்றம் தரலாம். நீட்சேவிடம் கருணை இல்லையா? அன்பில்லையா? என்ற கேள்வி எழுப்பிக் கவனித்தால், நற்குணங்கள் அவரிடம் உள்ளே உறைந்திருப்பதைக் கவனிக்க முடியும்.

இந்த அதிமானுடன் கட்சியை உருவாக்க மாட்டான். குழுக்கள் இவனுக்கு உடன்பாடில்லை. இராணுவ சர்வாதிகாரத்தை இவன் மேற்கொள்வானா! மாட்டான். இவன் பிளேட்டோவின் இன்னொரு வடிவம். பெருந்தோற்றம். சத்திரியனைத் தனக்குள் உள்வாங்கின பிராமணன் இவன் சதி செய்வானா? இவனால் முடியாது. போர்க்களத்தில்,இவன் சிறிதும் பதறால் பார்த்திருப்பான். கீதையின் கண்ணனாக இவன் இருக்க முடியும். இவன் உலகியல் மனிதன் அல்லன். உலகியல் கடந்தவன் இவன். இவன் ஒரு கற்பனைப் படைப்பு. இவன் பார்வை வழியே, நம் உலகை நாகரிகத்தை,அரசியலை, வாழ்வைப் பார்த்துக் கொள்ளலாம். இவன் ஹிட்லரைத் தோற்றவித்தானா? தேசியத்தை அறவே வெறுக்கும் இவன், ஹிட்லரைத் தோற்றுவிக்க முடியாது. ஹிட்லர் அதிமானுடனா? மேன்மகனா? இல்லை. இருக்க முடியாது. நெப்போலியன் இவனுக்கு நெருக்கமாக வரக்கூடும். நெப்போலியன் அதிமானுடனா? சொல்லமுடியாது. அதிமானுடனை நமக்குள் நிறுத்தி நம்மை நாமே பார்த்துக் கொள்ள முடியும். தனது சாவைக்கூட இவனால் உணர்வுக் கலப்பின்றி பார்த்துக் கொண்டிருக்க முடியும். கீதை சொல்லும் ஸ்திதப்பிரக்ஞன் இவனாக இருக்கக் கூடும். ஊழி பெயரினும் தான் பெயராத என்று வள்ளுவர் கூறும் சான்றோனை இவனுக்குள் பார்க்க முடியும். இவனுக்குள் தன்னலம் அறவே இல்லை. இவன் புரோகிதனை அனுமதிக்க மாட்டான். தவறுகளிடமிருந்து பாடம் கற்று முன்செல்வான். பின்நோக்க மாட்டான். இவனிடம் கலக்கம் இல்லை. இவன் நமக்குள்ளும் கலந்து இருக்கிறான். இவன் எப்பொழுதும், சிந்தனையாளர்கள், மற்றும் செயல் வீரர்களின் இலட்சியமாக இருந்திருக்கிறான். இவன் கடவுள் மாதிரி எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு கலங்காமல் இந்தியாவில் பிராமணன் என்ற கருத்தாக்கத்தை நாசப்படுத்தியவர்கள் பிராமணர்கள். பீஷ்மர் ஓர் அசலான பிராமணர். மேன்மையை அறவே அழித்த - அழிக்கிற - பிராமணப் பெயர் பூண்ட பூணூல் தரித்த கோழைகளை - போக்கிரிகளைத்தான் இன்று பிராமணர்களாக நாம் பார்க்கிறோம்.

## 14. இறப்புக்குப் பின்னர்....

புதிர்கள் நம்மைக் கடந்து செல்லும்போது
நின்று ரசிப்பதைத் தவிர
நமக்கு வேறு சாத்தியமில்லை

எம்.எஸ்.உதயமூர்த்தி எழுதிய ஆத்மதரிசனம் என்ற நூலைப் படித்தேன். அமெரிக்காவில் செய்யப்பட்ட ஆய்வுகளின் அடிப்படையில் இறப்புக்குப்பின்னர் உயிர், ஆன்மா வாழ்தல் பற்றியும், இதன் அடிப்படையில் நாம் எத்தகைய வாழ்வுத் திட்டத்தை அமைத்துக் கொள்ள வேண்டும் என்பது பற்றியும் இந்நூலில் உதயமூர்த்தி எழுதுகிறார். ராஸ், வில்லி முதலிய ஆய்வாளர்களை நூலில் பலமுறை மேற்கோள் காட்டுகிறார்.

ஆன்மாவுக்கு அழிவில்லை என்ற இந்திய ஞானத்தை மீண்டும் உறுதிப்படுத்துகிறார்.

டாக்டர் பரஞ்சோதி என்ற தன் நண்பர்கூறும் ஓர் உண்மை. நூலில் மேற்கோளாகப் பயன்படுத்தப்படுகிறது. தந்தை, தன் மகன் முதலிய வாரிசுகள் வழியே, தன் D.N.A. மூலம் வாழ்கிறார் என்கிறார் பரஞ்சோதி. அந்த அறிவியல் உண்மை மறுக்கத்தக்கது அல்ல என்றாலும் இதனால் எழும் பலசிக்கல்கள், நம்மைப் பொறுத்தவரை தீரவில்லை. உடலியற் கூறுகள் சில/பல தொடர்கின்றன. மாற்றங்களுக்கும் உள்ளாகின்றன. உடலியற் கூறுகள் எனத்தீர்மானிக்கப் படலாகும் உளவியலும் கூடத் தொடர்வதாகக் கூறலாம். இசையோ, மனித அறிவோ மூலக்கூறுகள் வழியே தொடர்வதாகக் கூறமுடியாது.

இறப்பு நேர்ந்து சிலமணிநேரம் கழிந்த நிலையில், சிலர் மீண்டும் உயிர்த்தெழுந்து அந்த இடைக்காலத்தில் தமக்கு நேர்ந்த அனுபவங்களை கூறியிருக்கிறார்கள். இவர்களின் அனுபவங்கள் தொகுக்கப்பட்டு ஆய்வுக்கு உட்படுத்தியுள்ளனர். மேற்குறிப்பிட்ட சில விஞ்ஞானிகள் அதேபோல இறப்பு நேர்வது போன்ற அனுபவத்திற்கு உள்ளான மனநிலைக் காட்சிகள் பற்றி கூறியிருக்கின்றனர். இறந்த பிறகு மனத்தில் ஏற்படும் நிம்மதி, ஒளி பற்றியும் பலர்கூறியிருக்கின்றனர். மேற்குறிப்பிட்ட சில விஞ்ஞானிகள் அதேபோலஇறப்பு நேர்வது போன்ற அனுபவத்திற்கு உள்ளான மனநிலைக் காட்சிகள் பற்றி கூறியிருக்கின்றனர். இறந்தபிறகு மனத்தில் ஏற்படும் நிம்மதி, ஒளி பற்றியும் பலர் குறிப்பிடுகிறார்கள். புலன் கடந்த அனுபவங்கள் சார்ந்ததாகச் சமயம் விளங்குகிறது என்பதன் காரணமாக மேற்கூறிய சில புதிர்களைப் பற்றி நாம் சிந்திக்க வேண்டியிருக்கிறது. சமயம் நிலை பெறுவதற்கு இத்தகைய புதிர்கள் ஆதாரமாகின்றன.

உயிர் தனித்து இயங்கவல்லது என்றோ, உயிரிலிருந்த ஆன்மா வேறுபட்டது என்றோ, உயிருக்குப் பல பிறப்புகள் உண்டு என்றோ, நம்மால் நம்ப இயலவில்லை. இறந்ததாகச் சொல்லப்படும் நபர்களின் உளவியல் பற்றிய ஆய்வுகள் எனப்படுபவன பற்றியும் நமக்கு நம்பிக்கை இல்லை. நம்பத்தகுந்த ஆய்வறிஞர்கள் தங்களிடம் பரிசோதித்த அனுபவங்கள் அடிப்படையில்தான். உயிர், ஆன்மா,இறப்பிற்குப் பின் வாழ்வு பற்றிக் கூறுவேண்டியிருக்கிறது என்பதைக்கூட நம்மால் ஏற்கமுடியவில்லை.

இறப்பு என்பதை பெரும்புதிர்போல் சித்தரிப்பதும் நமக்கு உடன்பாடில்லை இறப்பு பற்றிய அச்சம் நமக்கு இல்லை. இறப்பிற்குப்பின் வாழவேண்டும் என்ற வேட்கையும் நமக்கு இல்லை.

இந்த நிலையில் மேற்கூறப்பட்ட விவரக்குறிப்புக்கள் அடிப்படையில் நாம் கூறுவதற்கு எதாவது கருத்து இருக்கிறதா? மாபெரும்

புதிர்கள் நமக்குள்ளும், பேரண்டத்திலும் எண்ணற்ற வகைகளில் உள்ளன என்பதை நாம் மறுக்கவில்லை.

புதிர்கள் அனைத்தும் ஏதோ ஒரு காலத்தில் அறிவியல் ஆய்வுக்கு விரிவான அளவுக்க உட்படுத்தப்பட்டு புதிர்கள் நீங்கிவிடும் என்று நாம் கருதவில்லை. புதிர்களோடுதான் நாம் வாழவேண்டும். புதிர்கள் - வியப்புணர்வைக் கிளறுகின்றன. நம்மைப் பரவசப்படுத்துகின்றன. புதிர்களின் மையத்தில் வாழ்வதைத் தவிர்க்க இயலாது. மிகச்சிறிய மலரும் வித்தும் தமக்குள் உள்ளடக்கியுள்ள புதிர்கள் விந்தையானவை. நம் அறிவுக்கும் எதார்த்திற்கும் வசப்படும் எல்லைகளில்தான் நாம் வாழ வேண்டியிருக்கிறது. விபத்துக்களை முற்றாக நம்மால் தடுக்க இயலவில்லை. குறைப்பதற்கான முயற்சி சற்றுகூட நடைபெறுவதாகத் தோன்றவில்லை. புதிர்கள் என்று சொல்லி நம்மை ஏமாற்றும் நரிக்கூட்டங்கள் பற்றி நாம் எச்சரிக்கையோடு இருக்க வேண்டிய நிலையும் இருக்கிறது.

நமக்கான வாழ்க்கை என்று நாம் கூறுவதுகூட, நெடுங்காலமாகவும், இன்றும் நம்மவர் நம்மை ஆளுபவர் நமது வழிகாட்டிகள் முதலயி பலரும் தமக்கு வகுத்துத் தந்த அறிவு மற்றும் தர்க்கத்தால் கட்டமைக்கப்பட்டதுதான். இந்த கட்டமைப்புக்களைக் கலைப்பதும், புதிய கட்டமைப்புக்களை உருவாக்குவதும்கூட, நமக்கான வாழ்வின் பகுதிதான். புதிர்கள் நமக்குள்ளும், புறத்தும் நம்மைக் கடந்து செல்லும்போது சில கணங்கள் நின்று இரசிப்பது தவிர நமக்கு வேறு சாத்தியம் இல்லை.

அறிவுலகத்தோடுதான் நாம் கட்டப்பட்டிருக்கிறோம். இந்தக் கட்டுப்பாட்டுக்குள்ளும் இருக்கிற சுதந்திரத்தை நாம் அனுபவித்துக் கொண்டும் இருக்கிறோம். கட்டுப்பாட்டை இயற்றியவன் யார்? நமக்குக் கிடைத்துள்ள சுதந்திரத்தில் அடிமைத்தனக் கலப்புப் பற்றியும் சிந்திக்கத்தான் செய்கிறோம். எங்களை வசப்படுத்தியுள்ள உலகிலிருந்து வெளியேறுவது எங்களுக்குச் சாத்தியமும் இல்லை. நாங்கள் அகப்பட்டுள்ள எல்லைகள், வரையறைகளிலிருந்து வெளியேறிய நிலையில் எங்களை இழுத்துச் செல்லக் கூடியதான அந்தப் புதிய புதிர் உலகம் பற்றி, எங்களுக்குள் உறுதி இல்லை. எங்கள் கால்களை இந்த உலகில் வலுவாக ஊன்ற எங்களுக்கு இயலாது. அப்படி ஒரு புதிர் உலகம் இருக்கக்கூடும் என்பதைக் கூட எங்களால் மறுக்க இயலாது. எங்க்ளை முற்றாக எங்களால் திறந்து கொள்ள முடியாது. நாங்கள், எத்தனையோ புதிர்களால் எவ்வளவோ காலமாக ஏமாற்றப்பட்டிருக்கிறோம். எங்களை ஏமாற்றுவதும் கூட எளிது. ஆகவே கூடுதல் எச்சரிக்கையோடு இருக்கிறோம். எந்த வெள்ளமும் எங்களை அடித்துக் கொண்டு போகவும் செய்யலாம். ஏமாற்றப்படவும் நாங்கள் ஆயத்தமாகவே உள்ளோம். எங்களை ஏமாற்றுபவர், கடவுளாக இருக்க முடியாது. எங்களை பிசாசு ஏமாற்றலாம்.

## 15.மனோவசியம்

நீதான் கடவுள் நீதான் இயேசு
என்று சொல்லி ஒருவரை வசியப்படுத்தி
சிலுவையில் ஏற்றிவிட முடியும்

மனோவசியம் பற்றி பி.சி.கணேசன் எழுதிய சிறிய புத்தகம் படித்தேன். மதம் பற்றிய புரிதலுக்கு மனோவசியம் பற்றிய அறிவு பயன்படும் எனத்தெரிந்தது.

ஒருவர் தன்னைத்தானே மனோவசியத்திற்கு உட்படுத்திக் கொள்ள முடியும். தன்னைத்தானே - சுயஉணர்த்தல் மூலம் தளர்த்திக் கொள்ள -இறுக்கம் தளர்த்திக் கொள்ள இயலும். ஒற்றைத்தலைவலி முதலிய நோய்க்கூறுகளை அகற்றிக் கொள்ள இயலும். பகைமை, காமம் முதலிய உணர்வு இறுக்கங்களைக் களைந்து கொள்வதும் சாத்தியம், தன் வாழ்வில் பின்னோக்கிச் சென்று தன்மனம் பாதிக்கப்பட்ட சூழலை நினைவுக்குக் கொண்டு வந்து, நிதானமாகப் பார்த்து தன் உளநோய்களைக் குணப்படுத்துவதும் சாத்தியம். மனோவசியத்தை பிறர் மூலமும் செய்ய இயலும்.

மனோவசியத்தின்போது ஆழ்மனத்தைத் தொடுகிறோம். ஆழ்மனம் நமது செயல்கள், குணங்கள் பலவற்றோடும் இன்றியமையாத உறவு கொண்டது. தன்னைத்தானே திறந்துவிடுவதன் மூலம், தன் உணர்வுகளின் இயக்கத்தை தானே பார்வையாளனாக நின்று கவனிப்பதன் மூலம், தன்னைத் தானே புரிந்து கொள்வதன் மூலம், தன்னைப்பற்றி அறிந்து கொள்ள இயலும். தன் எல்லையை விரித்துக் கொள்ள முடியும். வாழ்க்கையை மேம்படுத்திக் கொள்ள முடியும். சிறுவயது முதற்கொண்டே பிறர் நம்மை வசியப்படுத்திப் பலவற்றை நமக்குள் செலுத்தியுள்ளனர். நாமே நமக்குள் பலவற்றை செலுத்தியிருக்கின்றோம். நமது நனவிலிச் செயல்கள் பலவற்றை இவ்வாறு நாம் பெற்றுள்ளோம்.

கடவுள் நம்பிக்கை முறைகள் பலவும்இவ்வாறு நமக்குள் சென்றவைதான். நீதான் கடவுள், இயேசு என்று ஒருவனுக்குக் கூறி, பலமுறைகூறி, அவனை கடவுளாகவே உணரவைக்க முடியும். இப்படியே இன்னும் பல. உன் கணவன் கண்ணன்தான் என்று ஆண்டாளுக்கும் மீராவுக்கும் கூறி அவர்களைக் கண்ணன் வசப்படுத்தலாம். நானே பிரம்மம் என்று என்னை நானே வசியப்படுத்தலாம். நான் கலைஞன் என்று என்னை நானே வசியப்படுத்தி கலைஞனாக முடியும். வசதி வாய்ப்புக்கள் தேவை என்பதையும் மறுப்பதற்கில்லை. சமய உணர்வை ஏற்றுவதற்கும், களைவதற்கும் இந்தநெறி பயன்படுகிறது.

மனோவசியம் என்பது மந்திரமோ, தந்திரமோ இல்லை என்கிறார் ஆசிரியர். நம் பெற்றோர், ஆசிரியர், நண்பர்கள், நமக்குப் பலவற்றைக் கற்பிக்கிறார்கள். உணர்த்துகிறார்கள். நாம் பலவற்றை ஏற்று அவற்றின் வசமாகிறோம். இத்தகைய இயல்பான செயல்முறை மனோவசியத்தின் ஒருவகைதான்.

கடவுள் உண்மைதான் என்ற நம்பிக்கை நிலவுகிற சமூகச் சூழலில் கடவுள் நம்பிக்கையுடன் பிசாசுகள் இடம் பெறுகிறது. பேய், பிசாசு முதலிய நம்பிக்கைகளும் இவ்வாறுதான். கடவுள், பேய், பிசாசு முதலியவற்றின் இருப்புக்கான ஆதாரங்கள் குறைவாக இருக்கிற சூழலிலும் அவற்றை நம்புபவர் மூலம்இவை நம் குழந்தைகளுக்குள் செலுத்தப்படுகின்றன.

ஒருவருக்குப் பேய் பிடித்திருக்கிறது என்பதை மனோவசியம் என்ற முறையில் விளக்கலாம். ஆனால், ஒருமொழி மட்டும் தெரிந்தவர் பேயேறி ஆடும் நிலையில் பலமொழி பேசுவதை நம்மால் விளக்க முடியாது. இது பெரிய புதிர். இதுபோல இன்னம் பல சிக்கல்கள் ஆழ்மனத்தின் வினோதங்கள் புதிர்கள் அற்புதமானவை. சிக்கலானவை, சமய உணர்வுகள், நம்பிக்கைகள் பெரும்பகுதி ஆழ்மனத்தோடு உறவு உடையவை. மனோவசியம் என்ற ஆய்வுமுறையின் மூலம் சமயம் பற்றிக் கூடுதலாகப் புரிந்து கொள்கிறோம்.

கடவுளை வணங்கும்போது நம் மனத்தை நாமே வசியப்படுத்தி, நம் தேவைகளை நமக்கு நாமே உணர்த்திக் கொள்கிறோம். கடவுள் என்பதை நமக்குள் எழுப்பி, அதன் பரப்பில், ஆட்சியில், நம்மை நிறுத்தி, அதற்காக நம்மை இழந்து, நாமாகவே வலிந்து நம் துன்பங்கள் தீரும் என்ற நம்பிக்கையைப் பெறுகிறோம்.

கடவுள் பற்றிய தியானத்தின் மூலம் நமக்குள் வானம், நட்சத்திரம், பறவைகள், ஒளி, இயக்கம் முதலியவற்றை எழுப்பி, அவற்றின் வசப்பட்டு அவற்றோடு நாமும் கலந்து, நம் ஆற்றலை விரித்துக் கொள்கிறோம். நமக்கு அழகு சேர்த்துக் கொள்கிறோம்.

அவர் எனக்குள் இருக்கிறார் என்ற நம்பிக்கையில் அச்சமற்று இருக்கிறோம். அன்பாக இருக்கிறோம். பாதிரிமார்கள், சாமியார்கள் நம் மனதை வசப்படுத்துவதற்காக ஒளிக்காட்சிகள், சிலைகள், ஓவியங்கள், கற்பூரம், மாலைகள், ஊர்வலங்கள் முதலியவற்றை அமைத்திருக்கிறார்கள். நம்மனங்களை நெகிழ்த்தி நமக்குள் பலவற்றைத் திணிக்க முடியும். நாம் அவர்களுக்கு இவ்வாறு வசப்படுகிறோம். சமய நம்பிக்கைகள் இவ்வாறு நம்மை வசப்படுத்துகின்றன. நாம் மெய்யடியாராக ஆகிறோம். விஞ்ஞானம் முதலியவற்றிலிருந்து ஆதாரங்கள் தருவதன் மூலமும் நமது நம்பிக்கையை வலுப்படுத்துகின்றனர்.

நம்பிக்கைகளைத் தாங்கி வரும் போது, புற உலக அனுபவங்களுக்குப் பொருந்தாத நிலையில் புற உலகமும் நாமும் முரண்பட்டு போராடி நம்பிக்கைகளை உதறிக் கொள்கிறோம். பெரும் சிரமங்களோடு **Conditioned reflex** என்று பாவ்லோவ் தரும் விளக்கமும் இங்கு பொருந்துகிறது.

## 16. காந்தியின் இந்து மதம்

காந்தியின் இந்துமதம்
அவரது பிரதிதான்

காந்தியின் இந்து சமயம் பற்றிய கொள்கை, அவரது பிரதி என்று கொள்ளவேண்டும். நிறுவன அதிகாரம் உடைய சங்கராச்சாரி முதலியவர்களின் பிரதிகளே இந்துமதம் என நம்பப்படுகிறது. அதை நாம் ஏற்க வேண்டியதில்லை.

காந்தியின் இந்து சமயக் கொள்கை பிற கருத்தியல்களின் பாதிப்பிற்கு உட்பட்டவை. சமணர்களின் இன்னா செய்யாமை, இயேசுவின் மலைப்பொழிவு முதலியவற்றோடு டால்ஸ்டாய், கார்லைல் முதலியவர்களையும் சேர்த்துக் கொள்ளலாம்.

காந்தியின் சுயசரிதையிலிருந்து மேலும் பலரைக் குறிப்பிடலாம். காந்தி, எல்லாவற்றிலும் அண்டத்தின் அனைத்திலும் இறைவனைக் கண்டார். எனினும் அவரை அத்வைதி என்று கூறுவது பொருந்தாது. அந்த அளவுக்கு அவர் தனக்குள் ஆழ்ந்து சென்றவர் அல்ல. உண்மை என்பதுதான் கடவுள் என்றும், உண்மை என்பது உண்மைதான் என்றும் அவர் தெரிவித்த போதிலும், இறுதிவரை இறை நம்பிக்கையை அவர் கைவிடவில்லை. ஒத்துழையாமை முதலிய இயக்கம் தொடர்பான முடிவுகளை அவர் மேற்கண்டபோது, தியானத்தின் இறை உணர்வில் ஈடுபட்டார். தனக்குள்ளிருந்து இறைவன் வழிப்படுத்துகிறார் என்று அவர் நம்பினார். அது இறைவனாகத்தான் இருக்க வேண்டும் என்ற தம் நம்பிக்கையை அவர் சந்தேகிக்கவே இல்லை. வழிகாட்டுதலின் விளைவு பற்றியும் அவர் ஆய்வு செய்யவில்லை.

மனிதர்களின் அன்பின்அம்சம் பற்றி அவர் கொண்டிருந்த மாற்றவியலாத கருத்தின் ஆதாரத்தில்தான் தனக்கு யாரும் எதிரியில்லை, என்ற முறையில் இன்னா செய்யாமை என்ற கருத்து நிலையில், அவர் ஊன்றியிருந்தார். ஒருவர் 'மனத்தினுள் இருக்கும் ஈரத்தை - அன்பைக் கிளறிவிடுவது அவரது நோக்கம். மனிதர்களின் அன்பின் அம்சம் பற்றி அவர் கொண்டிருந்த மாற்றவியலாத கருத்தின் ஆதாரத்தில்தான் தனக்கு யாரும் எதிரியில்லை என்ற முறையில்இன்னா செய்யாமை என்ற கருத்து

நிலையில் அவர் ஊன்றியிருந்தார். ஒருவர் மனத்தினுள் இருக்கும் ஈரத்தை - அன்பைக் கிளறிவிடுவது அவரது நோக்கம்.

இறை உணர்வு தனக்குள் தங்குவதற்கும் புலனடக்கத்திற்கும் இன்றியமையாத உறவை அவர் கொண்டிருந்தார். அவர் கடைப்பிடித்த பிரம்மச்சரியம், புலால் உண்ணாமை முதலிய செயல்களுக்கு இதுதான் காரணம். வன்முறையைத் தவிர்த்தமைக்கு இதையே காரணமாகக் கூறமுடியும்.

இந்து சமயத்திற்கு ஆதாரமான நூல்களை அவர் படித்தவர் இல்லை. பகவத்கீதையை அவர் தன் வழிகாட்டி நூலாகக் கொண்டார். பகவத்கீதை நமக்கு அகிம்சையைத்தான் போதிக்கிறது என்று அவர் உறுதியாக நம்பினார். பகவத்கீதை மட்டும் அல்லாமல் இந்துசமயத்தின் அனைத்து வகை நூல்களிலிருந்து, ஆயுதம் தரித்தலுக்கு ஆதாரம் காட்ட முடியும். காந்திக்கு இது உடன்பாடில்லை. எல்லாச் சமயங்களும் ஒரு நெறியினவே என்ற உறுதியான நெறியை இந்து சமயம் தனக்குக் கற்பிக்கிறது என்று நம்பினார். சாதிய அமைப்புக்கும், இந்து மதத்திற்கும் தொடர்பு அறவே இல்லை என்றும், சாதிய அமைப்பை இந்து மதம் கொண்டாடியது உண்மை என்றால் இந்துமதம் தனக்குத் தேவையில்லை என்றும் உறுதியாகக் கருதினார். தன் சீதை நகை அணிவதில்லை என்றார். அரிச்சந்திரன் கதையும், சிரவணன் கதையும் காந்தியை ஆழமாகப் பாதித்திருந்தன. எல்லாருக்குள்ளும் இறைவன் இருக்கிறான் என்ற முறையில், தாழ்த்தப்பட்டவர்களை ஹரிஜன் என்றார். சேரிகளில் தங்கி, சேவை செய்தார். எளிய வாழ்க்கையை மேற்கொண்டார். இயந்திர நாகரிகத்தை ஒதுக்கினார். இராட்டையை விடுதலைப் போருக்கான படைக்கலன் ஆக்கினார்.

உண்மை, இன்னா செய்யாமை, பிரம்மச்சரியம் ஆகிய மூன்று நெறிகளைக் கருவிகளாக, கோட்பாடுகளாகக் கொண்டு, தன் வாழ்க்கையை சுயபரிசோதனைக்கான களம் ஆக்கிக் கொண்டார். தன்னைத் தானே கடுமையான சோதன்னைகளுக்கு உட்படுத்திக் கொண்டார். தன்னோடு தன்மனைவி முதலிய பலரையும் இந்தச் சோதனையின் பகுதியாக்கிக் கொண்டார். தனது சோதனைகளுக்கு தடையாக யாரும் எதுவும் இருக்க முடியாது என்றார்.

காங்கிரஸ் இயக்கமோ பிரிட்டிஷ் அரசோ தடைகளாகக் கூடாது. பிரிட்டிசாரை வெளியேற்றுவதுகூட இத்தகைய சோதனைகளுக்காகத்தான். சுதந்திர வெளியை விரிவுபடுத்திக் கொள்வதற்காகத்தான் என்று கூறினார்.

கிராமத்தின் தன்னிறைவு முதலிய நோக்கங்களை உள்ளடக்கிய கிராம-ராமராச்சியத்தை ஏற்படுத்துவதற்காக, பிரிட்டனை வெளியேற்றுவது

தேவைஎன்று தொடக்கம் முதலே அவர் கருதினார். அவரது சிந்தனை, செயல் முதலிய அனைத்தையும்சமயம், குறிப்பாக இந்துசமயச் சார்பில் வைத்து நாம் பார்க்க முடியும். அரசியலை சமயப்படுத்த அவர் முயன்றார் என்ற மதிப்பீடு சரியானதுதான்.

திரும்பவும் சொல்லலாம். காந்தியின் இந்து சமயம் அவரது பிரதிதான். காந்தியை அவர்கால, இக்கால மதபீடங்கள் முற்றாக ஏற்கமாட்டார்கள். காந்தியை இவர்கள் மறுக்கவும், முந்துவார்கள். இந்து சமயம் பற்றிய .பன்மைப்பார்வையை காந்தி, இராதாகிருஷ்ணன், முதலியவர்களை முன்னிறுத்தி நாம் உறுதிப்படுத்த இயலும். நேருகூட இந்து சமய எல்லைக்குள் இருப்பவர்தான். இந்து சமய எல்லைக்குள் கிறித்துவம், இஸ்லாம் முதலியசமயங்களையும் வைத்துப் பார்க்க இயலும். இந்துசமயம், இப்படித்தன்னை விரித்துக் கொள்ளத் தவறியதற்கு மதபீடங்களைத் தான் காரணமாக்க முடியும். கபீர், துக்காராம் முதலியவர்களை எப்படி நாம் வேறுபடுத்தி பார்க்க முடியும்? இராமகிருஷ்ணரை எங்கே வைப்பது? காந்தியை விமர்சனம் செய்வது, காந்திக்கு எதிரான கண்ணோட்டம் கொள்வது, நமக்கு மிக எளிய செயல். காந்தியைப் புரிந்து கொள்வது அரியசெயல்தான். காந்தியின் சர்வோதயம், மார்க்சியம் கூறும் பொது உடமைக்கு நெருக்கமாக இருக்க முடியும். இராமராச்சியம் என்ற தொடரில் இராமனின் பெயர் நமக்கு வெறுப்பைத் தருகிறது. கிராமராச்சியம் என்ற தொடரில், கிராமம் என்ற சொல்லைப் பலர் விரும்பவில்லை.

இன்னும் எத்தனையோ அம்சங்களில் காந்தி விமர்சனத்திற்கு உரியவராகத் தெரிகிறார். காந்தி என்ற ஒருவரை முன்வைத்து அல்ல. இராமகிருஷ்ணர் முதலிய பலரை முன்னிறுத்தியதாக நம் பார்வை விரிய வேண்டும்.

## 17. கடவுளும், பிசாசும்

கடவுள் என்ற உடனேயே
பிசாசுக்கும் நியாயம் கிடைக்கிறது.

எபிகியூரஸ், டெமாக்ரடீஸ் பற்றிய ஒப்பீட்டு ஆய்வுரையில் மார்க்ஸ் முன்வைத்த ஆய்வுமுறை, சமயம் பற்றிய ஆய்வுக்குக் சிறப்பாகப் பொருந்துகிறது. மாற்றுக் கருத்தியலோடு விவாதம் நடத்தும்போது அந்த மாற்றுக் கருத்தியலின் எல்லைக்குள் நாம் நுழைந்து விடுகிறோம். மாற்றுக் கருத்தியலின் பின்னடைவு என்று எதை நாம் விமர்சனம் செய்கிறோமோ, அதனை நாம் உள்வாங்கிக் கொள்கிறோம். இப்படிச் செல்கிறது மார்க்சின்அணுகுமுறை.

உலகியலை மெய்யியல் மயப்படுத்துவதும், மெய்யிலை உலகமயப்படுத்துவது பற்றியும் ஆகிய இரு வேறு எதிர்ச் செயல்கள் பற்றி.

மார்க்ஸ் குறிப்பிடுகிறார். அதாவது உலகம் புறப்பொருள் என்ற உலகியல் கூறு ஒருபக்கம். கருத்து-சிந்தனை என்பது இன்னொரு எதிர்ககூறு. எங்கல்ஸ் விளக்கம் கூறிய பொருள் முதல்வாதம். கருத்து முதல்வாதம் என்ற வகைப்படுத்தலோடு இதைப் பொருத்திக் காணலாம். கருத்து முதலியலுள் பொருட்கூறும், பொருள் முதலியலில் கருத்தின் கூறும்இயல்பாகவே உள்ளடங்கியுள்ளன என்ற புரிதல் இங்கு நமக்குத் தேவை.

விவாதத்தின்போது கருத்து முதலியல் தன்கருத்தியல் கூற்றில் இறுகித் தன்னை முழுமைப்படுத்திக் கொள்ளும். அதன் விளைவாகப் பொருளியல் கூற்றை முழுவதாக தவறவிடுவது அல்லதுமறைத்துக் கொள்ளுவதும் நேர்கிறது. அதுபோலவே பொருள் முதலியல் தனக்குள்ளிருக்கிற கருத்துக்கூற்றை முற்றாக ஒதுக்கி/மறைத்துவிட்டு முற்றான பொருளியலாகத் தன்னை இறுக்கிக் கொள்கிறது. இது ஒரு கட்டம். விவாதம் வெளியில் மட்டும் அல்லாமல், தனக்குள்ளும் தொடர்கிறது. விவாதத்தின் இன்னொரு கட்டத்தில் கருத்து முதலியலுள் மறைந்து இருக்கும் பொருட்கூறு வெளிப்பட்டு தன் ஆதிக்கத்தைக் காட்டுகிறது. அதேபோல பொருள் முதலியலுள்ளிலிருந்து கருத்தியல் கூறு வெளிப்படுகிறது. இம்முறையில் உலகியல் மெய்யியலாக திரிபு அடைவதும், மெய்யியல் தன்னை உலகியலாக்கிக் கொள்வதும் விளங்கிக் கொள்ளுவதற்குரியவை. மார்க்ஸின் இந்தக் கூற்றின் இன்னொரு அம்சமும் நம் கவனத்திற்கு உரியது. ஹெகல் உலகியலை அறவே தனக்குள் சுருக்கி மெய்யியலாக உருவாக்கினார். மார்க்ஸ் அதனைப் புரட்டிப்போட்டு உலகியலாக மாற்றினார். மார்க்சியத்தில் ஹெகல் பதுங்கி வாழ்கிறார் என்பதைப் போலவே ஹெகலியத்திற்குள் பொருள் முதல்கூறும் இருக்கிறது / இயங்குகிறது என்பதையும் நாம் கூர்ந்து பார்க்க முடியும். இந்த உண்மை நமக்கு சரியாய்ப் புரியுமானால் மெய்யியலைச் சரிவர நம்மால் படைக்க முடியும். சரியான புரிதல் இல்லாத நிலையில் எதிர்மறைக் கூறு நமக்குள் பதுங்கியிருந்து நம்மைக் கடுமையாகப் பாதிக்கும் - அழிக்கும் - எதிரியை நமக்குள் வைத்திருந்து நாம்அழிவோம் என்பது மாதிரி இது ஆபத்தானது. இத்தகைய ஆய்வுமுறைதான் இயங்கியல் நெறி என்று சொல்வதும் தகும்.

எங்கல்ஸ் மெய்யியலைக் கருத்து முதலியல் என்றும், பொருள் முதலியல் என்றும் வகைப்படுத்தியதோடு, மெய்யியல்களுக்கு இடையேயான போராட்டம் என்பது,இவற்றுக்கு இடையேயான நிரந்தரமான போராட்டம்தான் என்று விளக்கினார். மெய்யியலை இவ்வாறு இரண்டு வகை என்று முற்றாகப்பகுக்க முடியும் என்று கூறியவர், ஃக்யூம், கான்ட் ஆகியவர்களின் மெய்யியலை, மேற்கூறிய இருவகைகளுக்கு இடையில் வைத்தார். இதன் மூலம் எங்கல்ஸின் கருத்துக் குழப்பம் வெளிப்படுகிறது. தவிரவும்அது சரியான இயங்கில முறையாகவும் இல்லை.

சங்கரர் பௌத்தத்தோடு நடத்திய விவாதத்தின்போது பௌத்தரின் சூன்யத்தை உள்வாங்கினார். பவுத்தரும், சமணரும், வேத ஆத்திகத்தோடு போராடும்போது அவர்களின் இறைக்கோட்பாட்டை உள்வாங்கினர். இவர்களைப் போலவே, சாங்கியமும் மற்றவர்களும் இறைவனை ஏற்றனர். சங்கரர் என்னதான் பிரம்மம் என்றாலும் உலகியல் அவருக்குள் ஓர் எதிர்மறையாக ஒளிந்திருந்து அவரைப் பிளந்தது. அதேபோல நம் ஆய்வு பலதிசைகளிலும் விரிவு பெறலாம்.

சிந்தனை மனிதனைப் பற்றும்போது, அது பொருளியல் சக்தியாகிறது என்று மார்க்ஸ் கூறியதை இம்முறையில்தான் விளங்கிக் கொள்ள முடியும். இயந்திர / வறட்டு / பொருள் முதலியல், வளமான மெய்யியல் கருத்தியலை வெல்ல முடியாது என்று லெனின் கூறினார்.

பெரியாரிய நாத்திகவாதம், தனக்குள் முழுமையடையந்த நிலையில் கருத்து முதலியலாகிவிடுகிறது. மார்க்சியமும் இப்படி மாறிவிட முடியும். திருத்தல்வாதமும் சார்பியல் வாதமும்இப்படி தமக்குள் முழுமைபெற முடியும். விலகிச்சென்று எல்லை கடக்கும்போது முன்னைய நிலைப்பாட்டுக்கு எதிர்நிலையாக மாறுவது பற்றியும் நாம் அறிந்திருக்கிறோம்.

சித்தாந்தமும் அறிவியலும் இத்தகைய இயங்கியல் உறவு உடையதுதான். எதிர்நிலைகளில் ஒன்று மற்றதிற்குள் ஊடுருவியிருக்கிறது என்றும் எதிர்நிலைக்கூறு இல்லாமல் தனக்கு வாழ்வில்லை என்பதும் விளங்கிக் கொள்ளத்தக்கவை முரண்பட்ட கருத்தியல் / மெய்யியல் இல்லாத நிலையில் இயக்கம் இல்லை, வளர்ச்சி இல்லை என்பதைக் கருத்தில் வைக்க வேண்டும். கடவுள் என்ற உடனே பிசாசுக்கும், நியாயம் கிடைப்பது இம்முறையில்தான். நன்மை, தீமை முதலிய வேறுபடுத்தலும் இத்தகையதுதான். இருவழிப்பாதை என்பது அரசியலுக்கு மட்டுமல்ல. கலை இலக்கியம், கலாச்சாரம், நாகரிகத்திற்கும் உரியது. இயங்கியலின் முற்றமைவிதி என்று இதனைக் கூறலாம். இந்த இயங்கியல் ஆய்வுமுறையை நமது மெய்யியலுக்கு குணா மிகச்சிறப்பாகப் பயன்படுத்தியிருக்கிறார்.

எதிர்நிலைகளில் நாம் சிலகாலம் வாழலாம். நிரந்தரமாக வாழ இயலாது. ஊடுருவல் மிக முக்கியம். உரையாடல் இதில்தான் சாத்தியம். **Dialougism** சிறப்பான கோட்பாடு.

## 18. புரோகிதம்

நிறுவனப்படுத்தலுக்கு
புனித நூல், உரைவிளக்கம், புரோகிதர் தேவை.

பொருள் வகை உலகம், வாழ்க்கை என்பதிலிருந்து ஆய்வைத் தொடங்குவதற்கு மாறாக, சமயவாதிகள் சிந்தனையிலிருந்து தங்கள் ஆய்வை-விளக்கத்தைத் தொடங்குகிறார்கள்.

சமய அனுபவம் என்ற அம்சம் இத்தகைய - இதற்கான நுண்தேவையை அவர்களுக்குத் தந்திருக்க வேண்டும். அனுபவங்கள் புறக்கணிக்க இயலாதவை. இறைவனிலிருந்து உலகம் மனிதன் என்பனவாக விளக்கத் தொடங்குகின்றனர்.

நுண்பொருட்களிலிருந்து பருப்பொருள் தோன்றுகின்றன என்ற முறையில்தான் புலனுணர்விலிருந்து புலன்களும், பூதங்களும் தோன்றுகின்றன என்கிறார்கள். இறைவன் தனக்குள் பிரிவுபட்டால் ஒழிய பிரபஞ்சம் முதலியனவாக விளக்க முடியாது. இந்தப்பிரிவு-விலகல் - பருப்பொருள் முதலியவை எப்படித் தோன்றின, ஏன் தோன்ற வேண்டும் என்பதில் இவர்கள் ஆழ்ந்து விடுகின்றனர். இறைவன்இவற்றை எளிதாகச் செய்கிறான். ஆகவே இது - லீலை விளையாட்டு என்பது ஒரு கோட்பாடு.

தன்னிலிருந்து எல்லாவற்றையும் விளக்கும் முறை - அத்வைதம். உலகிலிருந்து தொடங்கும் முறையில் இருமை, மும்மைக் கோட்பாடுகள் எழலாம். இறையுணர்வு என்ற அனுபவத்தினுள் முற்றாக மாட்டிக்கொண்டதன் இன்னொரு விளைவு. இவர்கள் குறைந்த அளவுக்குக்கூட அறிவியல் பக்கம் திரும்புவதில்லை. ஒரு செடி விதையிலிருந்து எப்படி பரிணமிக்கிறது. ஒருவிலங்கு எப்படி பிறந்து-வளர்கிறது என்ற ஆய்வில் இவர்கள் தம்பார்வையை ஊன்றுவதில்லை. இத்தகைய அனுபவம் இவர்களை வியப்புக்குரிய முறையில் பாதிக்கும். இத்தகைய பாதிப்பில் இவர்கள் தம்மை உட்படுத்திக் கொள்ள விரும்புவதில்லை. போலித்தனமாக அறிவியலையும், ஆன்மீகத்தையும் இணைக்கும் முயற்சியில் இவர்கள் காட்டும் ஆர்வம் வியக்கத்தக்கதொரு வேடிக்கை. இந்தியாவில் சாங்கியம் உலகைப் பருப்பொருட்களாகப் பிரித்து ஆய்வைச் செய்தது. இதிலும் சிந்தனை-உணர்வுகளுக்கு முதன்மை தரும் போக்கு இருந்தது. உணர்விலிருந்து - புலன்கள் என்ற போக்கு - அதற்கு இறைவன் இல்லை புருடன் என்ற உயிர்த்தளம் இருந்தது. இதன் வழியாக பிற்காலத்தில் இறைவன் புகுந்துவிட முடியும். இறைவன் புகுந்த நிலையில் அப்புறம் இறைவனுக்கே முதன்மை என்ற போக்கு தவிர்க்க இயலாமல் ஏற்பட்டுவிடும்.

புரோகிதர்கள் சமயத்தின் உயிர்த்தன்மையைக் குலைத்தவர்கள். புரியாவிட்டாலும் செய்-என்பது இவர்களின் முறையியல். ஆண் சொல்கிறபடி பெண் செய்யவேண்டும். ஆசிரியர் கூறுகிறபடி மாணவன், அரசன் கூறுகிறபடி மக்கள் இது ஒருவகையான வாழ்வியல் கூறு. செயல்ஈடுபாடு, செயல்திறம், மனிதனின் ஆற்றல்மிக்ககூறு புரோகிதம்தான் இன்றுவரை சடங்குகளை ஊக்குவிக்கிறது. வாழ்வுக்கு திருமணம், கல்வி, தொழில், பதவி, பதவி உயர்வு, அதிகாரம் என்பன புரோகிதத்தின் ஆற்றல்மிக்க கூறுகள். கட்சிக்காரர்களின் ஊர்வலம், உண்ணாவிரதம் என்பவை இதன் கூறுகள். சிந்தனையில் முற்றான ஈடுபாடும் புரோகிதம் ஆகிவிடலாம். செயல்குறித்த மனிதனின் உயிரியக்கம் உடற்பயிற்சி கூட இதன்விளைவு. வேறுஎப்படி இதனை, புரோகிதத்தை விளக்க முடியும்.

நிறுவனப்படுத்தல் ஒரு தொடர்ச்சியான செயல். இதற்கு விரிவான கட்டமைப்பு-விதிமுறைகள், தர்க்கம் தேவை. வடிவம்-வண்ணம் தேவை. இதற்குள் ஒரு பெரும் கோட்பாட்டுத் தொகுப்பு- புனிதநூல்-பெரியநூல்-கூடவே உரை விளக்கம் புரோகிதர். திரும்பத் திரும்ப இதனை நியாயப் படுத்த வேண்டும். சமுதாயத்தை நிலைப்படுத்துவதுபோலவே, சமயத்தையும் நிலைப்படுத்த வேண்டும். கேள்வி எழும்பொழுது, அதிகாரம் கட்டமைப்பு உறுதிப்படுகிறது. உருக்குலைவை மறைக்கிறது.

எல்லாச்சமயங்களும், தன் அடிப்படைகளை நோக்கித்தான் தம் அனுபவங்களைப் பொருள்படுத்துகின்றன. இந்த அடிப்படைகள் கேள்விக்கு உள்ளாக்கப்படும்பொழுது சமயத்தின் உட்பிரிவுகள்-மாற்றுச் சமயங்கள் எழுகின்றன. கடுமையான போராட்டச் சூழலில்தான் புதிய பிரிவுகள் மற்றும் சமயங்கள். மனிதப் பிறப்பே பாவம் என்ற சிந்தனை, இந்தியாவில் எழவில்லை. புலன்கள் இங்கு வெறுக்கப்படவில்லை. இல்வாழ்க்கை, முற்றாக ஒதுக்கப்படவில்லை. உலகியலை, உடலியலை இந்தியச் சமயம், ஏற்பதாகவே கருதமுடியும். துன்பம், மரணம் ஏன் என்ற கேள்வியை முதன்முதலில் புத்தர்தான் எழுப்பினார். மரணம் பற்றிய கேள்வி, தொன்றுதொட்டே இருந்து வருவதாகத்தான் கருத முடியும்.

கோடிக்கணக்கான உழைக்கும் மக்களைச் சமயத்தினுனள் எப்படிக் கொண்டுவர முடியும். எனினும் இதைச் செய்தார்கள். உயிர் என்றால் என்ன? கனவு எப்படி வருகிறது? என்பன போன்ற கேள்விகள் மூலம் மக்களை மருட்ட முடியும். மணிமேகலையில் சாதுவன் செயல் இதற்கு உதாரணம். இத்தகைய காவிய/இலக்கிய நிகழ்ச்சிகளைத் தொகுத்துப் பார்க்க வேண்டும்.

தலைவன்-தலைவி-சந்திப்பு உறவு எப்படி நேர்ந்தது? விதிவசத்தால் என்ற கருத்து, சங்க இலக்கியத்தில் இருக்கிறது. பிரிவு - விதி என்ற சிந்தனை இல்லை.

பரத்தை உறவு விதியால் என்பது இல்லை. புறத்தில் இக்கருத்தின் ஆதிக்கம் எப்படி?

## 19. பகவன்கீதை - சமதர்ம நோக்கு

ஆயர்குலப் பெண்கள் தனியுடமை ஆக்கினார்கள்.
கண்ணன் கவர்ந்து பொதுவுடைமையாக்கினான்.

அ.கி.நாயுடு 1968 ல் எழுதி வெளியிட்ட விநோதமாகத் தோன்றக்கூடிய அரிய ஆய்வுநூல்-பகவன் கீதை.

ஆதிபகவன் என்ற குறள் தொடரில் பகவன் பயன்படுத்தப்படும் பொருளில் பகவன்கீதை என்கிறார். தமிழ் உணர்வும் சமதர்ம-பொருளியல் உணர்வும் மிக்கவர் தம்நோக்கில் விரிவாக ஆராய்ந்திருக்கிறார்.

புராணங்கள் பற்றிய இன்றைய ஆய்வுமுறை வேறு பெரியாரியர் முன்பு செய்த ஆய்வு முறை வேறு. புராணக்கதையில் அறிவுக்கு ஒவ்வாத கூறுகளைக் களைந்து மூலக்கதை- மூலமாகிய வரலாற்றைக் கண்டு பிடிக்கும் நோக்கில் இத்தகைய பகுத்தறிவு ஆய்வுமுறை செயல்பட்டது. சமதர்ம நோக்கும் சேர்ந்த நிலையில் அ.கி.நாயுடு அவர்களின் ஆய்வு-செயல்படுகிறது.

பகவன்கீதை சொன்னவர் கண்ணன். போர்க்களத்தில் 700 சுலோகங்களும் சொல்லியிருக்க முடியாது. போர்க்களச் சூழலில் ஞானம், யோகம், பக்தி பற்றிச் சொல்வதற்கு அர்த்தமில்லை. பாரதம்கூட, முதலில் 24000 சுலோகங்கள். இடைச்செருகல்கள் நிறையச் சேர்ந்திருக்கின்றன. பகவன் கீதையில் உள்ள 18 இயல்களில் 2,3 ஆகிய இயல்கள்மட்டுமே கண்ணன் கூறியிருக்க முடியும். மீதி 16 இயல்கள் இடைச்செருகல்கள்-என்கிறார் ஆசிரியர்.

இடைச்செருகல் என்ற கருத்து திலகர் முதலிய பலருக்கும் இருந்திருக்கிறது. இராசாசி, காந்தி முதலியவர்களும் இடைச்செருகல் பற்றி அவரவர் நோக்கில் கூறினர். சங்கரர், இராமநுசர், மத்துவர் முதலியவர்களின் வேறுபட்ட நோக்கிற்கு ஏற்ப, பாடல்கள் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும். ஒரேநூல் மாறுபட்ட பலரது கருத்துக்களையும் கூறுவதாக இருக்க முடியாது. போர் செய்ய அர்ச்சுனனைத் தூண்டும் நோக்கில் கர்மம் பற்றிக் கூறும் பகுதிதான் கண்ணன் கூறிய பகவன்கீதை.

கண்ணன் அரசன் அல்லது மனிதன்தான். இவன் அவதாரமல்ல. இந்தக் கருத்தில் கண்ணன் அவதாரம் கூறும் பாகவதக் கதைகளை அ.கி.நாயுடு ஆய்கிறார். மூலக்கதை ஆய்வு இங்கு விரிவாகத் தொடர்கிறது.

வேதத்திலிருந்து நாம் அறியும் ஒரு செய்தி, இநதிரனுக்கும்

கண்ணனுக்கும் பகைஇருந்தது. இந்திரனுக்கு உரிய யாகங்களைக் கண்ணன் மறுத்தான். பசுமாடுகளை நேசித்தவன் கண்ணன் யாதவர் - இடைக்குலத்தைச் சேர்ந்த கண்ணனுக்கு, பசுமாடுகளை கொன்று செய்வதாகிய வேள்விமுறை பிடிக்கவில்லை. ஆகவே, வேள்வியைத் தடுக்கும்முறையில் பசுக்கூட்டத்தைக் கோவர்தன மலைக்குக் கூட்டிச் சென்றான். கடுமையான மழை பெய்தபோது குகை முதலிய இடங்களில் பசுக்களை சேர்த்துப் பாதுகாத்தான்.

கம்சன் கொடுங்கோலன். பழங்கால முறைப்படி, மக்களின் உடமைகளைக் கொள்ளையிடுபவன். தனி உடமையாளன். இவனைக் கண்ணன் கொன்றது தகும். ஆயர்குலப் பெண்கள் பசுமாட்டின் தயிர், நெய் முதலியவற்றைத் தனி உடமை ஆக்கியபோது, அவற்றைக் கவர்ந்து பலருக்குத் தந்தான் கண்ணன். கண்ணன் ஒரு மனைவியைத் தான் மணந்து கொண்டான்.

பதினோராயிரம் மனைவிகள் என்பது கட்டுக்கதை. அவதாரக் கதைகள் பொய். பன்றி, மீன் என்ற முறையில் இறைவன் அவதாரம் எடுத்தான் என்பது அருவருப்பான செயல். இறைவன் என்பவன் இல்லை. பழங்காலச் சூழலில், பெரும் செயல் செய்தவருக்குள் இறைமையைக் கண்டனர். அவர்களை வழிபட்டனர். புரோகிதர்கள் இந்த வழிபாட்டு முறையைப் பயன்படுத்திக் கொண்டனர். மூடநம்பிக்கைக் கதைகள், புராணங்களைப் படைத்தனர். மூலமாகிய வரலாற்று நிகழ்வுகள் புராணக் கதைகளால் மறைக்கப்பட்டன. வரலாறு புராணத்தால் புதைக்கப்பட்டது. இன்று புராணத்திலிருந்து வரலாற்றை விடுவிக்க வேண்டும். பொய்மை நிலைபெற கதைகள் நிறையச் சேர்க்கப்பட்டன. ஆதிச்சமூகம், சமதர்மச்சமூகம் ஆதிச்சமூகத்திற்கு எதிரானது. தனியுடைமை / அரசுச்சமூகம், காவியம் அல்லது புராணத்தின் நாயகர்களாக மாற்றப்பட்டவர்கள் ஆதிச்சமூகத்தின் சமதர்ம நோக்கில் செயல்பட்டவர்களாகத்தான் இருக்க முடியும். இவர்களைச் சுற்றித்தான் அற்புதங்களைப் புனைய முடியும்.

அ.கி.நாயுடு அவர்களின் நோக்கை நாம் மேற்கூறிய முறையில் புரிந்து கொள்ள முடியும். பகவத் கீதையைச் சமயநூலாக, ஆதிக்கத்திற்கு அரண் சேர்ப்பதற்கு மாறான கலைப்புச் செயல் வரவேற்கத் தக்கது. விவேகானந்தர் முதலியவர்களின் கூற்றுக்களை இதற்கு ஆதாரமாக்கிக் கொள்வது தேவை. அ.கி.நாயுடு அவர்களின் தமிழ்நடை சிறப்பாக, இந்த ஆய்வில் பயன்பட்டிருக்கிறது.

தொல்காப்பியரும், திருவள்ளுவரும் சமதர்ம நோக்கிகள், புத்தரின் நோக்கு வேறாக இருக்க முடியாது. சங்கரர், இராமானுசர், மத்துவர் முதலியவர்களே மக்கள் சார்பினராகிய ஆதிப்பொதுமை நோக்கை

முன்வைத்து, விவாதித்து அவர்களின் வழியே இந்தப் போக்கை மேம்படுத்த முடியும். வள்ளுவர், தொல்காப்பியர், இவர்களோடு விவாதித்து, தம்நெறிக்கு அவர்களைத் திருப்புகிறார். பகவன்கீதை ஆய்வு முற்று பெறுகிறது. ஆங்கிலத்தில் இந்தநூல் மொழிபெயர்க்கப்பட்டு வெளிவந்திருக்க வேண்டும். தமிழர்கள் தம்மை முன்னிலைப் படுத்தாததன் விளைவை இன்று பார்க்கிறோம்.

பகுத்தறிவு ஆய்வின் ஒரு போக்காக இந்த ஆய்வைக் கருத முடியும். தமிழகத்தில் பகுத்தறிவு ஆய்வு சிலவகையில் விரிவு பெறவில்லை. பகுத்தறிவும், சமதர்மமும் இவ்வாறு இணைந்திருக்க முடியும். சமதர்மமும், பகுத்தறிவும் எதிர்திசையில் சென்ற நிலையில் சமூகத் திரட்சி சிதைந்தது. பார்ப்பனிய எதிர்ப்புக் கூச்சலே மிகுந்தது. சமதர்மம் பார்ப்பனியக் கருத்து என்று கூறப்படவில்லை. பகவத்கீதை முதலிய சமய நூல்களை, நம்வழிக்குத் திருப்பத்தான் வேண்டும். பொருள்கோள் என்றமுறை இதற்குப் பயன்பட முடியும். மார்க்சியரின் வரலாற்றியல் பகவத்கீதையை மக்கள் நோக்கில் திரட்டுவதற்கு எதிராகவே சென்றிருக்கிறது.

தமிழர்களின் அறிவாற்றலை மேம்படுத்திக் கூறியவர்கள், கண்டவர்களில் அ.கி.நாயுடு அவர்களின் பங்களிப்பு காணப்படவில்லை.

அவருடைய திருவள்ளுவர், தொல்காப்பியர் முதலிய ஆய்வுகள் பற்றி இன்று நாம் மீள்பார்வை செலுத்தத்தான் வேண்டும். பெரியார், ஜீவா முதலியவர்களோடு இவருக்கு தொடர்பு இருந்திருக்க வேண்டும்.

## 20. மார்க்சிய மெய்யியல்.

ஒற்றைப் பரிமாண மனிதர்களால்
கலவரங்களே அதிகரிக்கும். இவர்களைக் கொண்ட
தேசத்தின் வரலாறு சாரமற்றது.

1979 ல் தமிழில் மொழியாக்கம் செய்யப்பட்ட அபுசையத் அயூபின் கட்டுரை மார்க்சியம் பற்றிய விரிவான ஆய்வை முன்வைக்கிறது. சமயம் பற்றி ஆய்வு செய்கையில் சமயத்தின் புறப்பொருள், அகப்பொருள் என்று பகுத்துக் கொள்கிறார். புறம் என்பதில் கோயில், வழிபாடு, உடமை, அதிகாரம் முதலியவற்றை சேர்த்துப் பார்க்கலாம். அகம் என்பதனுள் சமய அனுபவம்,இறைவன்,அருள்,பக்தி முதலியவற்றை உள்ளடக்கலாம். மார்க்சைப் பொறுத்தவரை சமயத்தின் புறப்பொருளைத்தான் கடுமையான விமர்சனத்திற்கு உள்ளாக்குகிறார் என்று அயூப் குறிப்பிடுகிறார். சமயத்தின் அகம் பற்றி மார்க்ஸ் எதிர்மறையான கருத்துக் கூறியிருக்க மாட்டார் என்கிறார்.

மார்க்ஸ் இப்படிப் பகுத்துக் கொள்ளவில்லை என்ற போதிலும், இத்தகைய பகுப்பின் தேவையை நாம் புரிந்து கொள்ள முடியும். இதயம் அற்ற உலகின் இதயம் என்றெல்லாம் மார்க்ஸ் கூறியதைச் சமயத்தின்அகம் பற்றிய கருத்தாக் கொள்ளலாம். கம்யூனிஸ்ட் அறிக்கையில் வெளிப்படும் கருத்துக்கள் சமயத்தின் புறம் பற்றிய விமர்சனங்கள் என்று உறுதியாகக் கூறலாம். மேற்கூறிய பகுப்புமுறை மார்க்சியத்திற்கு முற்றாகப் பொருந்துமா என்ற கேள்விக்கு இடம் உண்டு. மார்க்சின் ஒரு ஆய்வுரையை எடுத்து அயூப் விளக்குவது வியப்புத்தருகிறது. இதுவரையிலான பொருள் முதலியல் என்பது சிந்தனை - **contemplation** மூலம் பெறப்பட்டதாக இருந்தது எனக்கூறி, செயல்முறையில் பெறப்படும் பொருள் முதலியற் கருத்தின் அவசியத்தை எழுதுகிறார் மார்க்ஸ். செயலின் பகுதி, சிந்தனை என்று இங்கு பொருள்படுகிறது.

ஜான் டியூவி கருத்தின் கருவித்தன்மை பற்றி விளக்கினார். டியூவியின் கருவித்தன்மை இங்கு மார்க்ஸ் சிந்தனைப் பற்றிய கருத்தமைவுகளுக்குப் பொருந்துகிறது என்கிறார் அயூப். ஒரு கருவியை வைத்து பல பொருட்களை நெகிழ்த்தி, உடைத்து, பிரித்து ஆய்வு செய்து பொருளின் இயல்பு அறிகிறோம். ஒரு கருத்தை உருவாக்கி, அதைப் பயன்படுத்தி உலகம், மனிதன், வரலாறு, சமயம், கலை, இலக்கியம் என்று பலவற்றினை ஆய்வு செய்கிறோம்.

சுத்தி பயன்படாத இடத்தில் சம்மட்டி, கடப்பாறை, வெடிமருந்து என்பனவற்றைப் பயன்படுத்துகிறோம். சமயத்துறையிலும், இறைவன் முதலியவை கருத்தாக்கங்கள். உலகம் வாழ்க்கை என்பதைப் புரிந்து கொள்ள முயற்சி செய்கிறோம். இவை பயன்படவில்லை என்றால் இவற்றை விட்டுவிடுகிறோம். கருத்து, உலகைப் பிரதிபலிக்கிறது என்பதும், திரிக்கிறது என்பதும் புரிந்து கொள்ளக்கூடியவை. அதுபற்றியும் அயூப் நிறையவே பேசுகிறார். கருவி முதலிய படைப்புக்கள் மூலம்தான் தன்னையே மனிதன் பார்த்து, மதிப்பிட்டுக் கொள்கிறான் என்று மார்க்ஸ் குறிப்பிடுகிறார். மனிதன், உலகம், கருத்து, செயல் என்பனவற்றுக்கு இடையிலான உறவு, இயங்கியல் முறையிலானது என்று கொண்டால், நமக்கு கூடுதலான தெளிவு ஏற்பட இயலும்.

சமய அனுபவம் என்பதைச் சமயஏற்புக்கு முதன்மையான ஆதாரமாக இராதாகிருஷ்ணன் கொள்கிறார். மார்க்சுக்கு இது முற்றான உடன்பாடாக இருக்கவும் முடியாது. கடவுள் பற்றிய அனுபவ உணர்வு, கடவுள் உண்டு என்பதற்கான சான்று ஆவதில்லை. கடவுள் கருத்து ஒரு கருவி போல வாழ்வுக்குப் பயன்படுகிறது என்ற உண்மையை நாம் மறுக்கவில்லை. கடவுள் கருத்து நம்மை ஏமாற்றவும் செய்கிறது. கடவுள்

கருத்துப் போலவே, சமயம் சார்ந்து பல்வேறு நம்பிக்கைகளும், - கருத்துக்களும்.

அயூபின் கட்டுரை வேறுசில வகைகளிலும், முக்கியத்துவம் உடையது. அடித்தளம், மேற்கட்டு ஆகியவற்றை மார்க்ஸ் விளக்கும்பொழுது கட்டடக்கலைச் சொற்களைப் பயன்படுத்தியிருக்கிறார். இவை ஒவ்வொன்றினுள்ளும் பற்பல பகுதிகள் இருக்கின்றன. இவை அனைத்தும் இயக்கத்திலும் இருக்கின்றன. எந்நேரமும் இயக்கத்தில் இருக்கும் ஒன்றை இயங்காததாகிய கட்டடக்கலைச்சொல் விளக்க இயலாது என்கிறார் அயூப்.

இயங்கியல் உறவை வெளியிட-இயங்காவியல் பயன்படாது. உயிரியல் கலைச்சொல் பயன்படலாம். இம்முறையில் வொயிட்ஹெட் நமக்குப் பயன்படலாம். இயங்கியல் பற்றி விரிவாக ஆயும் அயூப் வரலாறு மற்றும் சமூக நிகழ்வுகளின் புரிதலுக்கே இயங்கியல் பொருந்துகிறது என்கிறார். இயற்பியல் முதலிய களங்களில் இயங்கியலின் பொருந்தாத் தன்மையை அறிவாளர்களின் மேற்கோள்கள் மூலம் விளக்குகிறார். பெர்னால், ஹால்டேன், ஹெர்மன் லெவி முதலியவர்களின் கூற்றுக்களைத்தருகிறார். எங்கல்சைக் குறைகூறுகிறார். சார்த்தர் இத்தகைய விளக்கத்தைக் கொண்டிருந்தார் என்பதை இங்கு நாம் நினைவு கொள்ளலாம். இயங்கியல் விதிகளின் பொருந்தாத் தன்மையைக் காட்டிலும் பொருந்தும் தன்மைதான் அற்புதமானது என்பதை நாம் புரிந்து கொள்ள முடியும். அரிஸ்டாட்டில் காலம் முதல் தொடரும் தர்க்கவியல், இயக்கத்தை விளக்குவதற்குப் பொருந்தவில்லை என்றும், இயக்கத்தை விளக்க இயங்கியலே சிறப்பானது என்றும் எங்கல்ஸ் கூறுகிறார். தர்க்கவியல் கொண்டே இயக்கத்தையும் விளக்கலாம்என்கிறார் எங்கல்ஸ். இயங்கியல் தரும் ஒளியை நாம் அனுபவிக்க முடியும்.

பொருள் பற்றிய புரிதலை, அயூப் விரிவாக விவாதிக்கிறார். பொருள் பற்றிய லெனினின் வரையறையின் குறைபாடுகளை எடுத்துரைக்கிறார். பொருள் பற்றிய லெனினின் வரயறை மெய்யியல் சார்ந்தது என்றுதான் லெனின் கூறினார். அறிவியல் ஆய்வில் பொருளின் நுட்பங்கள் மேலும் மேலும் விரிவு பெறலாம் என்றும் லெனின் நம்பினார்.

பொருள் பற்றிய புரிதலை நாம் எவ்வாறு பெறுகிறோம் என்பது மிகச்சிக்கலான நிகழ்வுமுறை. பொருள் பற்றிய கருத்துக்கள் பிரதிபலிப்பா, குறியா என்றெல்லாம் நாம் விவாதிக்கிறோம். சிந்தனை என்பதும், பொருளின் மிகமிக நுண்ணிய இயக்கம் என்று காண வேண்டியிருக்கிறது. பொருள் என்பது சக்தி என்று ஆகிறபோது பிரச்சினை மேலும் சிக்கலாகிறது

நா்மும் பொருள்வகை, நமக்குள் பொருள் பிரதிபலிக்கிறது என்ற முறையிலும் சிக்கல். தெகார்டே, மனம், பொருள் என்று பாகுபடுத்தினார். இந்தப் பிரச்சனை மேற்கத்திய மெய்யியல் உலகைப் பெரும் அளவில் பாதித்தது. அடுத்து வந்த பலரும் பொருளுக்கும் மனத்துக்கும் உள்ள உறவு பற்றிப் பலவாறு ஆய்ந்து கூறினர். மனத்தினுள் பொருள்களை அடக்கும் தீவிர முயற்சியும், பொருளுக்குள் மனத்தை அடக்கும் தீவிர முயற்சியும், இரண்டையும் பிரித்தே வைக்கும் முயற்சியும் நடைபெற்றன. இரண்டையும் இணைப்பவர் பரம்பொருளே என்ற கருத்தாக்கமும் ஏற்பட்டது. பெர்க்கிலி, பிரெஞ்சு மெய்யியலாளர், கான்ட் முதலியவர்களை எடுத்துரைக்கிறார். அயூப் ஹெகலின் விளக்கத்தை மார்க்ஸ் தனக்கான முறையில் மாற்றினார் என்றும் விளக்குகிறார்.

மார்க்சில் பிரச்சினை தீர்வுபெறுவதாகக் கூறுவதற்கில்லை. எங்கல்ஸ் இவற்றைப் பிரித்துத்தான் போட்டார். எங்கல்ஸ் செய்த குறைபாட்டுக்கு மார்க்சைக் குறைகூற முடியாது என்றும் கூறுகிறார் அயூப். இயற்பியல், வேதியியல், உயிரியல் ஆகியவற்றிற்கு இடையில் மட்டங்கள் வேறுபடுவதையும், உயர்மட்டத்தின் இயக்கத்தை, தாழ்நிலை மட்டம் கொண்டு விளக்க முடியாது என்றும் எங்கல்ஸ் கூறியதை நாம் ஏற்க முடியும். அண்மைக்காலத்தில் இயற்பியலுக்குள்ளேயே வேதியியலையும், உயிரியலையும் அடக்கும் முறையில் ஆய்வுகள் உள்ளன என்கிறார் அயூப்.

மார்க்சியம் பற்றி நானும் நிறைய படித்திருப்பதாகத்தான் நம்புகிறேன். ஆனால், என்னால் சமாளிக்க இயலாத பல சிந்தனைத் தொகுப்புகள் மார்க்சியத்தில் நிலவுகின்றன. அயூப் கட்டுரை இப்படிப் பல செறிவான நுட்பங்களை முன் வைக்கிறது. மார்க்சியத்தின் - பொதுவாக சிந்தனை மற்றும் வாழ்வின் ஒருமுனையைத்தான் நம்மால் பிடித்துக் கொண்டு தொங்க முடிகிறது. அதுவே முழுமை என்ற கருத்திலும்.

மார்க்சியத்தைப் பொறுத்தவரை சமயத்தின் நிறுவனச் சார்பு-அரசு-மற்றும் முதலாளியச் சார்பு, தனி உடமைச் சார்பு ஆகியவற்றில் மட்டும் கவனம் வைத்து விமர்சனம் செய்தால் போதும். சமயத்தின் தத்துவச் சார்புக்குள் ஆழம் தெரியாமல் நுழைய வேண்டியதில்லை. பொருள் பற்றிய ஆழ்ந்த புரிதல் இல்லாத நிலையில் கவனத்தோடு பொறுமையாக இருப்பது நல்லது. இதன் காரணமாக கடவுள் இருக்கிறார் என்பதெல்லாம் உண்மையாகிவிடாது. வாழ்வை நிர்ணயிக்கும் அம்சங்களில் பொருளியல், அரசியல் முதலியவற்றுக்கு இருக்கும் முக்கியத்துவம் இருக்கிறது. பண்பாடு முதலியவை சமயம் என்பதும் ஓர் அம்சம். இதன் எல்லை பொருளியலுடன் உறவு உடையது என்பதாலேயே இதைப் பொருளியலே நிர்ணயிக்கிறது என்று முடிவு செய்ய வேண்டியதில்லை.

அர்த்தமுள்ள வாழ்க்கை என்பதுதான் மையம். வாழ்க்கை எத்தனையோ உறவுப் பிணைப்புகளோடு இயங்குகிறது. பிணைப்பு முக்கியம். எல்லாருடைய வாழ்விலும் பிணைப்பின் முழுநிறைவு இல்லை.

சிற்சில பகுதிகளோடு கூட ஒருவர் வாழ்ந்துவிட முடியும். விரிவான-ஆழமான புரிதல் தேவைஎன்பதை நாம் புறக்கணிக்க வேண்டாம். சிலவற்றில் அழுத்தம் கொள்ளும்போது சில மங்கிமறைந்து விடுகின்றன. முழுப்பரப்பில் வாழ முடியாது. வாழ்வின் ஒருமுனைதான் ஒருசமயத்தில் முன் நிற்கிறது. வாழ்வின் முனைகள் பல. எல்லா முனைகளும் நமக்கு வசமாவதில்லை. கூடுதலான முனைகளில் வாழ்பவன் வாழ்வு, செறிவான வாழ்வு. இத்தகைய மனிதர்கள்தான் ஒரு சமுதாயத்தை மேம்படுத்த முடியும். ஒற்றைப் பரிமாண மனிதர்களால், கலவரங்களே அதிகரிக்கும். இவர்களைக் கொண்ட தேசத்தின் வரலாறு சாரமற்றது. இன்றைய தமிழ்ச் சமூகத்தின் வாழ்வு-இப்படிப்பட்டதுதான். இதனால்தான் இதை அழிவுச் சமூகம் என்று கூற வேண்டியுள்ளது.

## 21. எது முதலில்? வாழ்வா? இறைவனா?

இறைவன் என்ற கருத்தாக்கப் பின்னலை
கலைத்துப் போட்டு
நம்மை மீட்டுக் கொள்வோம்.

பொருள்வகை உலகிலிருந்து சிந்தனைக்குச் செல்லுதல் என்பது பொருள் முதலியல் அணுகுமுறை. எத்தகைய பொருளியல் சூழல், கடவுள் முதலிய கருத்தாங்களுக்குக் காரணமாகிறது என்று பார்க்க வேண்டும். சிந்தனையின் எதிர்வினையை இதன் காரணமாக நாம் மறுக்கவில்லை. பொருள்வகை உலகின் தூண்டுதல்-ஆதிக்கம், சிந்தனையின் வலிமையைக் காட்டிலும் ஆற்றல் மிக்கதாகத்தான் இருக்கிறது. இறைவன் என்ற உணர்வுக்குள் உலகை, வாழ்க்கையை முற்றாகத் திணிக்க முடிவதில்லை என்பதையும் இங்கு கவனிக்க வேண்டும். பொருள்வகை உலகோடுதான் நம் வாழ்வின் பெரும்பகுதி உறவுடையதாக இருக்கிறது. மண்ணும், நீரும், காற்றும் என்று தொடங்கி நம் வாழ்வுக்கு ஆதாரமான பலவகைப் பொருளியல் சக்திகளைக் குறிப்பிடலாம். நிலத்தில் விளைச்சல், பருவகாலம், மலை, ஆறு, கடல் - இவை சார்ந்த தொழில்கள், வணிகம், அரசு, பொருளியல் முறைகள், உணவு, உறவு, திருமணம், பெண் உறவு, குழந்தைகள், கல்வி, மருத்துவம் என எத்தனையோ பொருளியல் கூறுகளோடுதான் நம்வாழ்வு உறவுடையதாக இருக்கிறது. வரலாறு, தொழில்நுட்பம், அறிவியல் என்பனவற்றின் பொருளியல் பண்பும் கவனத்திற்கு உரியவை. பொருள் வகை உலகை, காலந்தோறும், நம்

தேவைகளுக்கு ஏற்றபடி மாற்றத்திற்கு உள்ளாக்குகிறோம். தொழில் முதலிய ஆதாரங்களில் புதுமை படைத்தலில் நாம் ஊக்கம் பெறுகிறோம். போரிடுகிறோம். எதிரிகளை அழிக்கிறோம். நண்பர்களை ஆக்கிக் கொள்கிறோம். புலன்களை நுட்பமாக்கிக் கொள்கிறோம். வாழ்வின் எல்லைகளை விரிவுபடுத்திக் கொள்கிறோம். எல்லாவற்றையும், புலன்கள் மூலம் நுகர்கிறோம். நம் அறிவு, பண்பு முதலியவை புலன் வழியே உலகோடு உறவு கொள்வதன் மூலமே நமக்கு உரியவையாகின்றன. பொருள் என்பது அணுத்திரள் என்பது இயற்பியல் உண்மை என்றாலும், அணுக்களோடு - அவற்றின் இயக்கத்தோடு நமக்கு நேரிடையான உறவு இல்லை. வானத்தின் நீலநிறம், மலர்களின் வண்ணங்கள் முதலியவை, அவற்றின் படைப்பில் எத்தகைய அருவம் சார்ந்தனவாக இருந்தபோதிலும், அவற்றையும் நாம் பருண்மையாகவே பார்க்கிறோம். நுகர்கிறோம்.

பொருளியல் உலகிற்கு அழுத்தம் கொடுத்த முறையிலான வர்ணனைகள் மேற்கூறியவை. இவற்றிலிருந்து நம் உணர்வுகள் முதலியவற்றை, எவ்வளவுதான் நாம் அருவப்படுத்தினாலும், ஆன்மீகப்படுத்தினாலும், எந்த இடத்திலும் பொருள்வகை உலகியல் - உடலியலிலிருந்து நாம் விடுபட்டவர்களாக இல்லை. இறைவனாகவே நம்மை உணர்கிறபோதும், நமது நாடி நரம்பு மூளை ஆகியவற்றின் வழியேதான் இத்தகைய உணர்வில் நிறைகிறோம்.

தொகுத்துப்பார்த்தால், நாம் புரிந்து கொண்டாலும், புரிந்து கொள்ளவில்லை என்றாலும் பொருளா முதலியல் அணுகுமுறையைத் தான் நாம் கடைப்பிடிக்கிறோம். புத்தர், சூன்யத்தை உண்ண முடியாது. சுவாசிக்க முடியாது. சங்கரர், உண்மையில் பிரமத்திற்குள் நெடுங்காலம் மூழ்கியிருக்க முடியாது. இசை என்பது பறவை முதலியவற்றின் இசை நயத்தின் இயக்கத்தின் நீட்சிதான். நம் அடிமனம் முதலியவை உலகியலோடு ஆழமான உறவு உடையவைதான். வரலாற்றின் வழியே, தொல் நெடுங்காலத்தோடும் நாம் உறவு கொண்டிருக்கிறோம். பிரபஞ்சம் நமக்குள் வந்து போகிறது.

சமயமோ, கலையோ முதன்மைப் படுத்துவதாகத் தோன்றும். அக உலகம் என்பது, புற உலகத்தோடு பொருள்வகை உலகத்தோடு, பலநூறு கண்ணிகளில், இழைகளில் இணைக்கப்பட்டதாகத்தான் இருக்கிறது. இறைவனையோ, இசையையோ, நாம்தான் நமக்குள் எழுப்பிக் கொள்கிறோம் இறைவனை நாம்தான் படைக்கிறோம். ஆன்மா, மேலுலகம், நரகம், பாவம், நல்வினை, தீவினை ஆகியவை நம்மோடு உறவுடையவை.

நாம்தான் இவற்றைப் படைத்துக் கொண்டோம். திரும்பவும் சொல்லலாம். நாம் என்னதான் மறுக்க விரும்பினாலும், பொருள் முதலியல் பார்வையில்தான் நாம் வாழ்ந்திருக்கிறோம். இதற்கு மாறாக கருத்து முதல்வாதத்தை முன்வைப்பது யார்? எதற்காக என்று நாம் சிந்தித்தால் நமக்கு அதிர்ச்சியாக இருக்கும். மதவாதிகள், மன்னர்கள், முதலிய ஆதிக்கவாதிகள்தான் கருத்து முதல் வாதத்தைக் காலம்காலமாக முன்வைக்கிறார்கள். பொருளியலோடு நம்மைக்காட்டிலும் ஆழமாகப் புதைந்திருக்கும் இவர்கள்தான், இறைவன், ஆன்மா, மோட்சம், அறம் முதலியவற்றை நம் முன் வைக்கிறார்கள். இவ்வகைக் கருத்தாக்கங்கள் வழியே, இவர்கள் தம் ஆதிக்கத்தில் நம்மைப் பிணிக்கிறார்கள். இவர்கள் இறைவனை முற்றாக நம்புகிறார்கள் என்று சொல்லவும் முடியாது.

நமது பார்வை என்னவாக இருக்கிறது, இருக்க வேண்டும் என்று நாம் சிந்திக்கத் தவறியிருக்கிறோம். நமக்குப் பதிலாக இவர்கள் சிந்தித்திருக்கிறார்கள். நமது சமூகத்தை இவர்களின் நலன்களுக்கு ஒத்தமுறையில் கட்டமைத்திருக்கிறார்கள். இந்தக் கட்டமைப்பு செயல்படுகிறபோது இவர்கள் நலன்களுக்கு ஏற்ற சிந்தனைகள், உணர்வுகள், தாமாக நமக்குள் எழுகின்றன. நமது புலன்களை இவர்களின் தேவைகளுக்காக நாம் எப்படிச் செலுத்தியிருக்கிறோம். இவர்களின் இறவைன் நம்மை ஆட்சி செய்கிறான். நமது அறிவை, இவர்கள் தீர்மானிக்கிறார்கள். நம்மை வசப்படுத்தியபோது, நம் கலை உணர்வு முதலியவற்றையும் விரைந்துபறித்துக் கொண்டார்கள். நமது கலையை அவர்களின் விருப்பதிற்கு உகந்ததாக, நாமே மாற்றியமைத்தோம். அவர்களுக்காக நாம் சிற்பங்கள், கட்டிடங்கள். உருவாக்கினோம். அவர்களின் உலகில், தேசத்தில், வரலாற்றில், கலைகளில், அறிவியலில் எவை நம்முடையவை? எவை நமக்கானவை? எவற்றை நம்மால் மீட்டுக் கொள்ள முடியும்? எவற்றை நம்மால் மாற்றிக் கொள்ள முடியும்? என்று நாம் இன்று சிந்திக்கிறோம். இவர்களின் அரண்மனைகள், கோயில்கள், பொழுதுபோக்குகள், அறிவியல் சாதனங்கள் அப்படியே அதே வடிவில் நமக்குப் பயன்படுமா? அவர்களின் இறைவன் நமது தேவைக்கு ஒத்தவராக இருப்பானா? என்று சிந்திக்கிறோம். நம்மிடமிருந்து நம்மைக் கொண்டே அவர்கள் அபகரித்துக் கொண்ட உலகை, இப்பொழுது அவர்களிடமிருந்து மீட்டுக் கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம். இவர்கள் விட்டுக் கொடுக்க மாட்டார்கள். நாம், நம்மை, நம் வாழ்வை, நம் உலகத்தை அவர்களிடம் விட்டு வைத்திருக்கவும் முடியாது.

கருத்து முதல்வாதம் அவர்களுக்கு வெற்றி வாய்ப்புக்களைத் தந்திருக்கிறது. கடவுள் இல்லை. சமயங்கள் பொய். மேலுலகம் 'மாயை

என்றெல்லாம் நமக்குச் சிந்திக்கத் தெரியாமல் அவற்றில் மாட்டிக் கொண்டோம்.

இப்பொழுது நாம் செய்ய வேண்டியது என்ன? நமக்குள் உள்ள இறைவனுள்-இறைவன் என்ற கருத்தாக்கத்தினுள், எத்தகைய பின்னலில் நமக்குள் வசப்பட்டிருக்கிறோம் என்பதைப் பிரித்துப்போட்டு ஆதிக்கத்தின் பின்னல்களைக் களைந்து நமக்கான பகுதிகளை மீட்டுக் கொள்வோம். இறைவனை நம்முள் வைத்து நமது உயரத்திற்குக் கொண்டு வருவோம். நம் தேவைகளுக்கு நம்திறன்களுக்கு நெருக்கமாகக் கொண்டு வருவோம். நமது இறைவனுக்குப் பெரிய ஆலயங்கள், நிலங்கள், மடங்கள், பூசைகள், தேவையில்லை. இறைவனை நமக்குள் திளைக்கச் செய்வோம். ஆதிக்கச் சக்திகளிடமிருந்து விடுபட்ட நிலையில், இறைவனை நமக்குள் ஐக்கியப்படுத்திக் கொள்வோம். நமக்குள்ளிருந்து எழுந்த இறைவன் நமக்குள் சங்கமமாகிறான். இவனது அழகிய உலகம் நமக்கான உலகம்ஆகிறது.

## 22. எது நம் பார்வைக்கோணம்?

எங்களை அடிமைப் படுத்தியதில்
உங்கள் கடவுளுக்கும் பங்குண்டு
உங்கள் கடவுள் இதை அறிவாரா?

இறைவனிலிருந்து உலகம், மனிதவாழ்க்கை என்ற அணுகுமுறை, பெரும் குழப்பத்திற்கும், சிக்கலான கருத்து முதலியலுக்குமே நம்மைக் கொண்டு சேர்க்கிறது. இதற்கு மாற்றாக உலகம், வாழ்க்கை என்பதிலிருந்து இறைவன் என்ற கருத்திற்கு, அதாவது பொருளியல் வாழ்க்கையில் இருந்து இறைவனுக்கு-ஏற்ற அணுகுமுறை பலவகைச் சிக்கல்களையும் தீர்க்கக் கூடியது. இந்த நிலையில் இறைவன், ஆன்மா முதலிய கருத்தாக்கங்கள் மனிதனின் தேவைகளை ஒட்டி எழுந்த கருத்துக்கள். இங்கும் வரலாற்றுச் சூழல், மனிதச் சிந்தனையின் பரிமாணங்கள் என்றெல்லாம் பேசவேண்டியிருக்கும். இவற்றை இப்பொழுது தவிர்த்துக் கொள்ளலாம். மனிதன் வாழ்வின் ஒருகட்டத்தில் பிரபஞ்சம், இயற்கை, வரலாறு, சமூகம் ஆகியவற்றின் இயக்கத்தைத் தனக்குள் காண்கிறான். இவற்றை உட்கொண்ட இயக்கமாகத்தான் தன் வாழ்க்கையும் இயங்குகிறது என்று கருதுகிறான். இது அத்வைதப் பார்வை. இயற்கை முதலியவற்றின் இயக்கம், ஆக்கம் ஆகியவற்றிலிருந்து தன்னைப் பிரித்துப் பார்க்காத பார்வை சாத்தியமில்லை. முற்றான ஒருமையில் மனிதன் வாழ முடியாது. தன்னைத்தானே தின்ன முடியாது. சுவாசிக்க முடியாது. இந்நிலையில், தான்வேறு, இயற்கை வேறு, தனக்கும் இயற்கைக்கும் உறவு இருப்பதுபோலவே பிரிவும் இருக்கிறது.

வாழ்வின் பரிமாணம், பன்மைத் தன்மை உடையது. இவ்வாறு கருதும் பொழுது இப்பார்வையை துவைதம் - இருமை என்று கூறுகிறோம். இத்துடன் மேலும் ஒருகூறு. இயற்கை நமக்குள் இருப்பதுபோலவே, இயற்கைக்குள் நாமும் இருக்கிறோம். இணைவும் பிரிவும் தவிர்க்க இயலாதவை. இவ்வகைச் சிந்தனை விசிஸ்டாத்வைதம். இது ஒருவகையில் இயங்கியல் பார்வை. மேலும் ஒன்றை நாம் கவனிக்க வேண்டும். ஒருமனிதனுக்குள்ளேயே ஒருசமயத்தில் ஒருமைப்பார்வையும், பன்மைப்பார்வையும் செயல்பட முடியும்.

இந்நிலையில் பொருள் முதலியலும் உண்மை. கருத்து முதலியலும் உண்மை. மெய்யியல்கள் நூறுவகை என்றால் எல்லாவற்றுக்குள்ளும் மனிதன் சென்று வருகிறான். மெய்யியல் வகை ஒவ்வொன்றும் வாழ்வின் ஒரு கோணம் என்றால், 8/16/32/64 என்று கோணங்களை வகைப்படுத்துவது சாத்தியம். வட்டத்தில் 360 கோணங்கள் இருக்கின்றன. கலையே முதன்மை என்று கருதும் கலைஞன். வாழ்வின் பிற இயக்கங்களை, கலையின் அளவுக்கு முக்கியத்துவம் இல்லாதவை என்று கருதுகிறான். இவனது வாழ்க்கையில் முதன்மைப்பட்டிருப்பது கலைக்கோணம். இதன் தளத்தில் நின்று கொண்டே வாழ்வை மதிப்பிடுகிறான். சமயவாதிக்கு இறைவனும் முதலாளிக்கு இலாபமும் முதன்மைக் கோணங்கள். சிலரிடம் பாலுணர்வு மேம்படுகிறது. சிலரிடம் நுகர்வியம். பெண்ணிற்கு ஆணின் உறவு - அதிகாரிக்குத் தன் ஆதிக்கம் - இவ்வாறு அவரவர்க்கான கோணங்களுக்கு முதன்மை கொடுத்து வாழ்கின்றனர். கோணங்களில் மாற்றமும் நேரத்தான் செய்யும்.

நம்மையும், நம்மைச் சூழ உள்ள மனிதர்களையும், விலங்குகள் முதலியவற்றையும் புரிந்து கொள்வதற்கான பார்வை இது என்று கூறலாம். வ்ரலாற்றுப் பார்வை, மெய்யியல் பார்வை என்பதும் இப்பார்வைக் கோணங்களில் அடங்கும். வரலாற்றுக்காலம் முழுவதும் பல்வேறு சூழல்களில் வாழும் மனிதர்களை வேறு எப்படிப் புரிந்து கொள்வது? திரும்பவும் பிரச்சினையின் முதற் கட்டத்திற்குச் செல்லலாம். உலகம் - உயிர்வாழ்க்கை என்பதன் ஆதாரத்திலிருந்து பார்க்கிற போதுதான் சமயத்தின் இயக்கம் தெளிவுபடுகிறது. வரலாற்றின் அம்சங்கள், நூற்றுக்கு மேற்பட்டவை. இவற்றினுள் சில/பல கூறுகள், சில/பல மனிதர்களிடம் மேம்படுகின்றன. மனிதர்களை வைத்து, பயன்படுத்தி, அடிமைப்படுத்தி வாழ்கிற மனிதர்களால் சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வு - பொருள் ஆதிக்கம் - என்ற நிலவரங்கள் ஏற்பட்டன. இவற்றிற்கு ஏற்றவாறு வாழ்க்கைப்பார்வை உருவாகிறது. ஆதிக்கமும் பலவகைகளில் உருவாகிச் செயல்பட்டது/ செயல்படுகிறது. ஆதிக்கவாதி தனக்கான பார்வை அல்லது கோணத்தைப்

படைத்துக் கொள்கிறான். தனக்குச் சேவை செய்யவைக்கும் முறையில் பலருக்குள் தனது பார்வையைச் செலுத்துகிறான். ஏற்கச் செய்கிறான். பார்வைக் கோணங்கள் சுதந்திரமாக ஏற்பட்டவை போலத் தோன்றினாலும், வரலாற்றில் வர்க்கங்கள், ஏற்றத்தாழ்வுகள், ஆதிக்கம், அடிமைத்தனம், ஆணஆதிக்கம், சாதிவேற்றுமைகள் என்றெல்லாம் மாற்றங்கள் நேர்வதை ஒட்டி பார்வைக் கோணங்கள் உருவாகின்றன. இறுக்கமாகின்றன. இவற்றில் சமயமும், சமயங்களும், வாழ்க்கைப் பார்வையைப் படைக்கின்றன.

மனிதவாழ்க்கை பலகூறுகளோடு செயல்படுகிறது. இவை இல்லாமல் வாழ்க்கை இல்லை. அரசனும், வணிகனும், கைவினைஞனும், உழவனும், அறிஞனும் என்று பலரும் சேர்ந்து / முரண்பட்டு இயங்குவதாகத்தான் வாழ்க்கை அமைகிறது. இவர்களில் ஒவ்வொரு வகையினரையும், நெருக்கமாக அணுகிப் பார்த்தால் இவர்களில் ஒவ்வொரு வகையினருக்கும் ஏதோ ஒரு அளவில் முழுமையாகவோ / முழுமை அற்றதாகவோ வாழ்க்கைப் பார்வை இருக்க முடியும். உழவன் வாழ்வில் இறைவன் இடையில் வந்துபோகிறவன். இறைவன் காலடியில் உழவன் குந்த முடியாது. மேலுலகம், நரகம் என்ற உணர்வுக்குள் முற்றாகத் தன்னை ஆழ்த்திக் கொள்ள முடியாது. இறைவன் உலகைப் படைத்தான் என்ற கருத்து, இவன் வாழ்க்கைக்கு அடித்தளமாக இல்லை. உழவனின் பார்வை போலத்தான் வணிகன் முதலிய பிறரது பார்வைகளும்-இவர்களுடைக்கிடையில் புரோகிதன் இருக்கிறான். சமயவாதி இருக்கிறான். இவர்களுக்குத்தான் இறைவனும், சடங்குகளும் முதன்மையானவை. இவற்றின் வழியேதான் இவர்கள் உலகைப் பார்க்கிறார்கள். இவர்கள் தரும் முக்கியத்துவத்தை இவர்களைப் போல மற்றவர்களும் தருவார்கள் என்றால், உணவு உற்பத்தி -விநியோகம் என்பவை நடைபெற இயலாது. வாழ்வின் மையம் இவ்வாறு வேறுபடத்தான் செய்யும். சமயவாதி, இறைவன் முதலிய கருத்துக்களைக் கிளப்பிவிட்டாலும், இவற்றைப் பிற சமூகப்பிரிவினர், வாழ்வின் ஒட்டுமொத்தமான இயக்கத்தில், அவரவர்களின் இடத்திலிருந்துதான் உள்வாங்கிக்க கொள்கின்றனர். இந்த இயக்கத்தில் சமயவாதியை முதன்மைப்படுத்துவதுகூட, ஒருவகையில் பார்வைக் கோளாறுதான். சமயம் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்துவிடும்போது, சமயம் தவிர வாழ்வின் வேறுகூறுகள், நம்மை விட்டு விலகிச் செல்கின்றன. சமயம் பற்றிய புரிதலுக்கே கூட இதுதடை. ஒட்டுமொத்தமான வாழ்வு இயக்கம் என்ற தளத்திலிருந்து சமயத்தை / சமயங்களை மதிப்பிடுவதான பார்வைதான் சமயம் பற்றிய பலவகைக் குழப்பங்களையும் தீர்க்கும். வரலாறு, வாழ்க்கை என்ற உலகியல் தளம்தான் சமயத்தைப் பார்ப்பதற்கான மையம்.

நம் வாழ்க்கையை உருவாக்கிய சக்திகள் பல. இவற்றின் வழியேதான் நமக்கான வாழ்க்கை நமக்கு வாய்த்திருக்கிறது. வாழ்வை உருவாக்கியதில் நமக்கும் பங்கு உண்டு என்பது உண்மைதான். என்றாலும் நம்மீது ஆதிக்கம் செய்யும் சக்திகள், நமக்கான வாழ்க்கையை நமக்குக் கட்டமைத்து நிச்சயிக்கின்றன.

ஒழுக்கம், அறிவு, பண்பாடு, கலை, தொழில், மருத்துவம், தேசம், மொழி என்றெல்லாம் இவற்றின் வழியே இவர்கள் தமது ஆதிக்கத்தை நம்மீது செலுத்துகிறார்கள். இவர்களின் இறைவன் நம்மை ஆள்பவனாகின்றான். இவர்களின் இறைவனை நமக்குள் ஏதோ ஒரு இடம் கண்டு - அதில் பொருத்திக் கொள்ளுகிறோம். வரலாற்றில் உள்ள பொதுச்சூழல் காரணமாக இது நேர்வதாகக் கருதலாம்.

இன்றைய நிலையில், எல்லாவற்றையும் ஒரு முற்றான ஆய்வுக்கு உட்படுத்த விரும்புகிறோம். நாடு, தேசம், மொழி, வாணிகம், அரசு, கலை, குடும்பம், மதம் முதலிய அனைத்தையும் எடுத்து இவற்றின் கட்டுகள் தளர்த்தி ஆய்வு செய்கிறோம். இவற்றினுள் நாம் எங்கே இருக்கிறோம்? எந்த எந்த இடத்திலிருந்து தொடங்குகிறோம்? இறைவன், சடங்கு, கோயில் வழிபாடு, குருமார் ஆகியவர்களுக்கு எங்களோடு என்ன உறவு? என்று சிந்திக்கிறோம். இவற்றின் தேவை என்ன என்றும் கேட்கிறோம். நமக்குத் தேவையான உலகை உருவாக்கிக் கொள்வது நமது நோக்கம். நமது உலகை இதுவரை பிறர் பறித்துக் கொண்டிருந்தார்கள். தமது ஆளுகைக்கு வசதியாக நமக்கு அறிவு, ஒழுக்கம், நம்பிக்கை முதலியவற்றைக் கற்பித்தார்கள். நமது வாழ்க்கையைக் கட்டமைத்துக் கொண்டதில் நம் பங்கு குறைவுதான். இவர்கள் தந்த நெருக்கடியின்போது, அதற்கேற்றவாறு நமக்குள் நம்மைச் சரிப்படுத்திக் கொண்டோம். நம்மிடமிருந்து பறித்துக் கொண்ட உலகில் நம்மைப் பொருத்திக் கொள்வதாக நமது வாழ்க்கை இருந்தது. எல்லாவற்றையும் கூடிய அளவு முழுமையான ஆய்வுக்கு உட்படுத்த வேண்டிய சூழலில்தான், சமயம் பற்றியும் சிந்திக்கிறோம்.

சமயம் பற்றிய சரியான சிந்தனைக்கும், மதிப்பீட்டுக்கும் இதுதான் சரியான அணுகல்முறை. இந்தத் தெளிவோடு மேற்செல்வோம்.

ஒருவகையில் தனது பார்வைக் கோணத்தையே முழுமைப்படுத்த முயன்றதன் மூலம், அதற்குள்ளேயே சமயவாதி மாட்டிக் கொள்பவன் ஆகிறான. இதில் அவனுக்கு நேர்ந்துள்ள அவலம் யாது என்றால், இப்படி மாட்டிக் கொண்டிருப்பது அவனுக்குத் தெரியாது என்பதுதான். தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருப்பவன், ஊரை அழைக்கிறான். தன்னைக் காப்பாற்ற அழைக்கிறான். பிறரையும் தன்னை நோக்கி இழுக்கிறான். சில

சந்தர்ப்பங்களில், அவர்களையும் இழுத்துக் கொண்டு இவன் மூழ்குகிறான். சமயம் இப்படியும் செயல்பட முடியும். பிறரோடு சேர்ந்து செயல்படுவது இன்னொரு வகை. மன்னர்களோடு, உடமையாளர்களோடு, அரசோடு, உயர்சாதியோடு, சமயவாதி சேர்ந்து கொள்ளவும் செய்கிறான். உழைக்கும் மக்களோடு அரிதாகத்தான் இணைகிறான். இதுவரை விளக்கி வந்த பார்வை மார்க்சியருக்குத்தான் சாத்தியம். இவர்களிடம்தான் வரலாறு பற்றிய விரிவான பார்வை இருக்கிறது. மனிதன், மார்க்சியப் பார்வை பெறுவதற்குப் பலநூறு ஆண்டுகள் காத்திருக்கத்தான் வேண்டியிருக்கிறது. இன்றுதான் இப்பார்வை சாத்தியம். விடுதலைக்கான வழி, இன்று திறக்கிறது.

இப்பொழுது நாம் கேட்கலாம். உங்கள் கடவுள் எங்கள் விடுதலைக்கு உதவ வருமா? எங்களை அடிமைப்படுத்தியதில் உங்களுக்கும் - உங்கள் கடவுளுக்கும் பங்கு உண்டுஎன்பதை இப்பொழுது அறிகிறீர்களா? உங்கள் கடவுளுக்கு இது தெரியுமா? எங்கள் விடுதலைக்கு உடன்வராத கடவுள் எங்களுக்குத் தேவையில்லை. வழிவிலகி நிற்பதே உத்தமம். கடவுளுக்கு எதற்கு உடமை. ஆதிக்கம்? எதற்கு குருமார் - புரோகிதர், எதற்கு அரசோடும் - சாதியோடும் உறவு? கடவுள் சுதந்திரமானவரா? இவரும் சிறைக்குள்தான் இருக்கிறாரா? கடவுளை விடுவிக்க நாம் துணை நிற்கிறோம். கடவுள் தன்னை ஆதிக்கவாதிகளிடமிருந்து விடுதலை பெற்று எங்களுடன் ஐக்கியப்படட்டும் எங்களைத் தண்டிக்கும் கடவுளை, நாங்கள் தண்டிப்போம்.

## 23. சமயம் - இராகுலர் பார்வை

மதவாதி கருத்து முதல்வாத மாயைக்குள்
இறைவனோடு முடங்கிக் கிடக்கிறான்
இவனுக்கு விடுதலை இல்லை.

சமயம் பற்றிய ஆய்வில் இராகுல சாங்கிருத்தியாயன் அவர்கள் பொருள் முதலியல் அணுகுமுறையைக் கறாராகவும், தீவிரமாகவும் கடைப்பிடிக்கிறார். அவர் பவுத்தர் என்ற போதிலும், கருத்து முதல் வாதத்திற்கு எதிராக, மார்க்சியரின் இயங்கியல் பொருள் முதலியல் அணுகுமுறையைத்தான் நம்புகிறார். பவுத்தரின் ஆய்வுமுறையை, இயங்கியலுக்கு ஏற்கும் முறையில் மட்டும் ஏற்கிறார். தவிர தத்துவம் பற்றிய ஆய்வில், தனது பிரச்சார நோக்கத்தை உறுதியாகக் கடைப்பிடிக்கிறார். 1942ல் ஹிஜிராபத் சிறையில் இருந்த காலத்தில் தத்துவ நூல்கள் பலவற்றை எழுதுகிறார்.

இந்தியத் தத்துவம் அல்லது சமயம் பற்றி எழுதும்போது, இராதாகிருஷ்ணனைக் கடுமையாக விடாப்பிடியாக விமர்சனத்திற்கு

உள்ளாக்குகிறார். இவரது விமர்சனம் சில சமயங்களில் இராதாகிருஷ்ணனைப் பற்றிய கேலிச்சித்திரம் தீட்டுவதாக மாறுகிறது. காந்தியைப் பற்றியும் இதே அணுகுமுறை. சமயம் பற்றிய விமர்சனத்தின் போது, இவர் தத்துவத்தின் பக்கம் நிற்கிறார். இவரே சமயத்தின் குரலைத் தத்துவம் சார்ந்து பேசும்பொழுது சமயத்தின் தாதி என்று தத்துவத்தை ஏசவும் தொடங்குகிறார்.

மேற்கு உலகில் காண்ட், வைட்ஹெட் முதலியவர்கள் இறைவனை ஒப்புக் கொள்கிறார்கள். அறிவியல் முறையிலான இவர்களது ஆய்வுகளுக்குள் இறைவன் புகுந்து கொள்கிறார். இப்போக்கைக் கடுமையாகச் சாடுகிறார்.

காரண காரியத்தொடர்பு என்ற விதியை அழுத்தமாகக் கடைப்பிடிப்பதன் மூலம் இறைவன் இல்லை என்பதில் தொடங்குகிறார். இந்த விதியின் வழியே, இயங்கியல் பொருள் முதல்வாதம் பற்றிய இவரது விரிவான விளக்கங்கள் மிகச் சிறப்பாக அமைகின்றன. பொருள் முதலியலுக்கு அழுத்தம் தரும் முறையிலான இவரது சமயம் பற்றிய விமர்சனம் ஆழ்ந்து பார்க்கத் தக்கதாகத் தெரிகிறது.

வாழ்வின் ஆதாரம் பொருளாகத்தான் இருக்கிறது. நிலத்தில் உழைத்து பயிர் செய்து, வீடுகட்டி, உடை உடுத்து, உறவுகளைப் பெருக்கி மனிதர் வாழ வேண்டியிருக்கிறது. பொருளியல் வாழ்வைச் சிறப்பாக அமைத்துக் கொள்வதன் மூலமே, மக்கள் வாழ்வில் அமைதியும் இன்பமும் மேம்பட முடியும். ஆனால் மக்கள் வாழ்க்கை இம்முறையில் செல்லவில்லை. அரசாங்கமும், வணிகர்களும், மதவாதிகளும் குறுக்கே வருகிறார்கள். இறைவன் என்றும், ஆன்மா என்றும் மேலுலகம் என்றும் மதவாதிகள் மக்களைக் குழப்புகிறார்கள். பொருளியல் வாழ்வை நெறிப்படுத்துவதிலிருந்து மக்களைக் குழப்புகிறார்கள். பொருளியல் வாழ்வை நெறிப்படுத்துவதிலிருந்து மக்களைத் திசைதிருப்புகிறார்கள். பிரபஞ்சத்தை இறைவன்தான் தோற்றுவித்து,செயல்படுத்துகிறான் என்கிறார்கள். இறைவனுக்கு உரியதாக இந்த உலகை, நம் வாழ்வை ஒப்புக் கொடுக்க வேண்டும் என்கிறார்கள். புலன்களின் இன்பத்தைக் குற்றம் என்கிறார்கள். பொருள் வகையின் வாசம் கூடாது என்கிறார்கள்.

தொடக்கம் முதலே, மதவாதிகளின் கருத்து முதல்வாதம், உடமையாளருக்குச் சாதகமாகத்தான் இருக்கிறது. இவர்களின் சமயம், பொருள் முதலியலை இகழ்ந்து உரைக்கிறது, ஏசுகிறது, குற்றப்படுத்துகிறது. பொருள் வகை உலகத்தை, உடற்சார்பை மக்களிடமிருந்து பிரிப்பதே

இவர்களது நோக்கம். இம்முறையில் மதவாதிகள், ஆளும் வர்க்கச் சார்பிலேயே செயல்படுகிறார்கள்.

இந்த அணுகுமுறையை இராகுல சாங்கிருத்தியாயன் விடாப்பிடியாகக் கடைப்பிடிக்கிறார். தொடக்கம் முதலே, பவுத்தர்கள்-பிராமணர்களையும், இந்து மதத்தையும் கடுமையாக விமர்சனம் செய்தார்கள். பிரம்மம், இந்துமதம் பற்றிய இயங்கியல் வகையிலான பொருள் முதல்வாத அணுகுமுறையை இவர் உறுதியாகக் கடைப்பிடித்திருந்தால், பவுத்த மதச்சார்பைத் தன்னிலிருந்து இராகுலர் விடுவித்துக் கொள்வதற்கு வாய்ப்பாக இருந்திருக்க முடியும். மக்கள் மனத்தில் துயரங்கள் நிலவுவதற்கு என்ன காரணம் என்ற கவுதமசித்தார்த்தனின் அடிப்படையான கேள்வி, இராகுலரை மார்க்சிய ஆய்வு நோக்கி உந்தியிருக்க முடியும். தீவிர கடவுள் மறுப்பை முன்வைக்கிற தர்ம கீர்த்தியை இவர் பொருள் முதல் நோக்கில் விமர்சனம் செய்கிறார்.

சமயத்தை எதிர்க்கும் நோக்கில் தத்துவத்தின் சார்பு எடுக்கிற இராகுலர், சமயத்தைத் தாங்கும் முறையில் தத்துவம் செயல்படாதபோது தத்துவம் சமயத்தின் தாதி எனச் சாடுகிறார். இந்த அணுகுமுறை எங்கல்ஸின் அணுகுமுறைக்கு ஏற்றதாக இருக்கிறது என்று கருத வேண்டியிருக்கிறது. தத்துவம் பற்றிய இராகுலரின் பார்வை. நமக்கு உடன்பாடில்லை. சமயம், அறிவியல் முதலியவற்றின் உள்ளும் நுழைந்து தத்துவம் பார்க்க முடியும். மார்க்சியம் மற்றும் மார்க்சியரின் பொருள் முதலியல் இறுகிவிடாமல் இருக்க வேண்டுமானால், தத்துவம் தன்னை ஆழப்படுத்திக் கொள்ள வேண்டும். நத்துவத்தின் முகத்தில் சில சமயம் வந்து படியும் சமயத்தின் கறையைத் துடைக்க வேண்டும். துடைக்க முடியும்.

இறைவன், ஆன்மா என்ற கருத்தாக்கங்களைப் பழங்காலச் சூழலில், சிலர் முன்வைத்தபோது, இவ்வகைக் கருத்துக்களில் மெய்மையும் இருந்தது. மாயையும் இருந்தது. இயல்பான உலகம், உயிர்களின் வாழ்க்கை ஆகியவற்றைப் புரிந்து கொள்ளும் நோக்கம், இவ்வகைக் கருத்தாக்கங்களில் இருந்தது. உலகாயத வாதிகள்,அக்கால நிலைகளில் - அறிவியல் வளர்ச்சி இல்லாத நிலையில் பிரபஞ்ச இயக்கம் முதலியவற்றைச் சரியாக விளக்கத் தெரியாதவர்களாகவே இருந்தனர். அரசு, தனி உடமை என்பன கூட வரலாற்றின் வளர்ச்சிக்குத் தேவையாகத்தான் இருந்தன. கவுடில்யர் இறைவன் என்பதை நம்பவில்லை. கோயில்களை ஏற்படுத்துவதன் மூலம் அரசுக்கு வருமானத்தைப் பெருக்குவதோடு மக்களைக் கட்டுப்படுத்துவதற்கு, இறைவனைப் பற்றிய பொய்யான கற்பிதங்களைப் பரப்ப வேண்டும் என்று கருதினார். இறைவன் முதலியவற்றில்

நம்பிக்கையைத் தெரிவித்தவர்கள், கவுடில்யர் போலத் தெளிவு உடையவர்களாக இல்லை.

இறைவன் முதலிய கருத்துக்களில், பிரமைகளில் இந்தச் சமயவாதிகளும் மாட்டிக் கொண்டுதான் இருந்தார்கள். இறைவன் முதலியவை கருத்தாக்கங்கள் என்றும், இவற்றின் வழியே பிரபஞ்சம், உயிரியக்கம் முதலியவை பற்றி இவர்கள் பார்வை செலுத்திக் கொண்டிருந்தார்கள் என்றும், இன்னொரு சந்தர்ப்பத்தில், பிரபஞ்ச இயக்கத்திற்கு இறைவன் காரணம் அல்ல என்பது இவர்களுக்கே புலப்படக்கூடும் என்றும், இத்தகைய அணுகுமுறையைத்தவிர சிக்கலான வரலாற்றுச் சூழலில் நமக்கு வேறு வழியில்லை என்றும், நம்பஇயலுமானால் இராகுலர் ஆய்வு முறை வேறுதிசையில் சென்றிருக்கக் கூடும்.

கவுதமர் பற்றியும், சங்கரர் பற்றியும் இராகுலர் விளக்கும்போது, அவர்கள் வாழ்ந்த 7, 8 ஆம் நூற்றாண்டில் அராபியர், இஸ்லாமியர் படையெடுப்புக் காரணமாக, இந்தியாவில் அரசுகள் தகர்ந்து குழப்பங்கள் கடுமையாக அதிகரித்தன என்று இராகுலர் கூறுகிறார். உலகியல் வாழ்க்கை நம் கைகளிலிருந்து எட்ட இயலாத தொலைவில் செல்லும் நிலையில், வாழ்வுக்கு ஆதாரமான ஒரு தளத்தைக் கண்டு பிடிக்க வேண்டும். இம்முறையில், பிரம்மம் என்ற கருத்துத் தோன்றுகிறது.

மனவெளியின் உயரத்தில் அமைத்துக் கொள்ளும் ஒரு தளம் பிரம்மம். இந்த உயர்வெளியில், சங்கரரும், நெடுநேரம் அமர்ந்திருக்க இயலாது. கீழ் இறங்கிப் பொருள் தளத்திற்கு வந்து தீரவேண்டும். சங்கரர் வந்திருக்கிறார். ஒருமைத்தத்துவம், தவிர்க்க இயலாத நிலையில் தன் உள் முரண்களில் மாட்டிக் கொண்டிருக்கிறது. இப்படிப் பார்வை கொள்ள இயங்கியல் நமக்கு உதவியாக இருக்கிறது. இராகுலருக்கு இந்த உண்மை புலப்படவில்லை. பவுத்தரிடமிருந்து சூன்யத்தைச் சங்கரர் திருடினார் என்ற விமர்சனத்தோடு இராகுலர் நிறுத்திக் கொள்கிறார்.

பிரபஞ்சம், மற்றும் உயிர்களின் இயக்கம், இன்னும்கூட முழுஅளவில் புரியாத நிலையில்தான், பெர்க்சன், வைட்ஹெட், ஸ்பென்சர் முதலியவர்கள் தமது இறை நம்பிக்கையை விட்டுவிட இயலாதவர்களாக இருக்கிறார்கள். டார்வின் தனக்குள் முதலாளியச் சார்பைக் கண்டிருக்க இயலுமானால், பரிணாமம் பற்றிய கோட்பாட்டில் மேலும் தெளிவு பெற்றிருக்கக் கூடும். அறிவியலாளர்கள் பற்றிக் கூறுகிறபோது எங்கல்ஸ், இவர்கள் தத்துவம் பற்றித் தெரிந்திருப்பார்களேயானால், சில தவறுகளைச் செய்திருக்க மாட்டார்கள் என்று கூறுகிறார். இறைவன், ஆன்மா என்ற கருத்தாக்கங்களைப் பழங்காலச் சூழலில், சிலர் முன்வைத்த போது,

இவவகைக் கருத்துக்களில் மெய்மையும் இருந்தது. மாயையும் இருந்தது. இயல்பான உலகம், உயிர்களின் வாழ்க்கை ஆகியவற்றைப் புரிந்து கொள்ளும் நோக்கம், இவ்வகைக் கருத்தாக்கங்களில் இருந்தது. உலகாயத வாதிகள், அக்கால நிலைகளில் - அறிவியல் வளர்ச்சி இல்லாத சமயத்தைக் களைந்து கொள்ள முடியுமா? தீவிரமான சிந்தனை இதற்குப் பயன்படும் என்பது உண்மைதான். சமூகச்சூழலில் உள்ள சிக்கல், தீவிரச் சிந்தனைக்குத் தடையாக இருக்க முடியும். அத்துடன், வர்க்கச் சார்பை எப்படிக் களைந்து கொள்ள முடியும்?

நியூட்டனுக்கு முதல் உந்துவிசையாக இறைவன் தேவைப்பட்டான். பிரபஞ்ச இயக்கத்தின் திட்டமிட்ட முறையிலான அற்புதம் ஐன்ஸ்டீனுக்குள் இறையுணர்வைக் கிளறியது. இதேபோலத்தான் பெர்க்சனும், வைட்ஹெட்டும்.

சமயத்திற்குத் தத்துவம் துணை போகிறது என்ற கூற்றை நாம் முற்றாக மறுக்கவும் இயலாது. அதேசமயம், சமயத்தின் பிடியிலிருந்து தத்துவம் தன்னை விடுவித்துக் கொள்ளவும் முயற்சி செய்கிறது என்பதையும் நாம் பார்க்க முடியும். தத்துவத்தின் தேவை இன்னும் முடிந்துவிடவில்லை. வர்க்க வேறுபாடுகள் அற்றுப்போன நிலையிலும், முரண் இயக்கம், தத்துவப் பார்வையை வேண்டியே நிற்கும். நெருக்கடி மிக்க சூழலில் - சமயம் இதயம் அற்ற உலகின் இதயமாக இருக்கிறது. இயற்கை அறிவியல் ஆய்வின் உச்சத்தில் தத்துவம் மறைந்து போகாது இருக்கும்.

மார்க்சியனுக்குள் அரசியல் நோக்கம் தீவிரப்படுகின்ற நிலையில், தத்துவ நோக்கு பின்னுக்குப் போகிறது. இப்பொழுது அரசியலின் பகுதி தத்துவம். அந்நியமாதல் என்ற பார்வையின் தொடர்ச்சியாக மார்க்ஸ் கூறும் பொழுது, பாட்டாளி வர்க்கம் தன் விடுதலையைச் சாதிக்க வேண்டுமானால், முதலாளி வர்க்கத்திற்கும் சேர்த்தே போரிட வேண்டும் என்றார். முதலாளிகளோடு இங்கு மதவாதிகளையும் இணைத்தே நாம் பார்க்கலாம். சமயத்தின் பிடிக்குள் மதவாதிகளும்தான் மாட்டிக் கொண்டு உள்ளனர். அவர்களுக்கும்தான் விடுதலை வேண்டும். வர்க்கப் போராட்டத்தின் இறுதி இலக்கு வர்க்கம் இல்லாத சமுதாயம்தான். அதுதான் கம்யூனிச சமுதாயம் என்ற புரிதல், தத்துவப்பார்வை. முதலாளிகளிட மிருந்து, அரசு அதிகாரத்தைப் பாட்டாளி வர்க்க நலன்கள் கருதி, கட்சி கைப்பற்றிக் கொள்வது என்பது அரசியல் பார்வை. இந்த அரசியல் பார்வைக்குள் அதிகாரம் செயல்படுகிறது. அரசு இருக்கும்வரை மதமும் இருக்கும் என்ற மார்க்சின் கருத்தை முன் வைத்துப் பார்க்கும் போது இந்த உண்மை தெளிவுபடும். வர்க்கமற்ற சமூகம் நோக்கியதாக அரசியல் இருக்கவேண்டும்.

இயற்கையிலிருந்தும், சமுதாயத்திலிருந்தும், இறுதியாகத் தன்னிலிருந்தும் மனிதன் அந்நியப்பட்டிருக்கிறான் - அந்நியமாக்கப்பட்டிருக்கிறான் என்பது மார்க்சின் பார்வை. தன்னிலிருந்தும் அந்நியப்பட்டிருக்கிறான் என்பதற்குள் இறைவன், வழிபாடு, சடங்கு முதலிய அனைத்தும் அடங்கும். தான் யார் என்று தெரியாமல், தனது இலட்சியங்கள் ஆர்வங்கள், தேவைகள் ஆகியவற்றின் மிகைப்பட்ட உருவமாக இறைவனை மனிதன் படைத்து அதன்முன் தன்னை மனிதன் கிடத்திக் கொள்கிறான். இறைவனை இவன் வழிபடுவது என்பது தன்னுணர்வின்றித் தன்னைத்தானே வழிபடுதலும் ஆகிறது. பயர்பாக் விளக்கியதுபோல, இறைவன் மனிதனின் பதிவு. மனிதப் படிவத்தில்தான் இறைவன் படைக்கப்பட்டிருக்கிறான். மனிதனை விடத்தாழ்ந்தவன் இறைவன். மனிதன்தான் முதல்வன். இறைவன் இரண்டாமவன். ஆனால் இறைவனை எல்லாம்வல்ல முதல்வன் ஆக்கி, மனிதன் அவன்கீழ் மண்டியிடுகிறான். இறைவனுக்குள் இவன் ஏற்றி இருப்பது, பயர்பாக் கூறியதுபோல, மானுட இனத்தின் சாரம். மார்க்ஸ் விளக்கியது போல, குறிப்பிட்ட வரலாற்று நிலைமைகளில் மனிதன் இவ்வாறு இறைவனுக்குள் தனக்குத்தானே சிறைப்பட்டிருக்கிறான்.

சிந்தனை முறையில், தான் அவனைக் கண்டு அறிந்ததாகக் கருதிக் கொள்கிறான். இறைவன், செயல்வகைப்பட்ட வரலாற்றுச் சூழலின் விளைவுதான். இந்தச் சிந்தனைத்திறனும் வரலாற்றின் வழியேதான் மனிதன் பெற்றான். இறைவனுக்குள் ஏற்றி வைத்திருக்கும் அன்பும், அறிவும், விருப்பங்களும், வரலாற்றின் வழியே இவன் சேகரித்தவைதான். தன்னுணர்வு அற்ற மனிதன், சூழலின் விளைவு, சூழலைத் தன் தேவைகளுக்கு ஏற்றவாறு மாற்றிக் கொள்பவன் மனிதன். இத்தகைய செயல்பாட்டின் விளைவாகவே, இவன் மனிதனாகியிருக்கிறான். இத்தகைய மனித ஆதிக்கத்தின்போது, இவன் சேகரித்துக் கொண்டவையே, இவனது அறிவும், அன்பும், திறன்களும். இறைவனைப் போலவே ஆதிக்கச் சக்திகளிடம் இவ்வாறுதான் மனிதன்/உழைப்பாளி தன்னை விட்டு வைத்திருக்கிறான். தனது உழைப்புத் திறன்தான் முதலாளியை உருவாக்கி வைத்திருக்கிறது என்ற உண்மை இவனுக்குத் தெரியவில்லை. தெரியாததன் விளைவே, இவனது அடிமைத்தனம். தன்னுணர்வு பெற்றவன் தன்னை விடுவித்துக் கொள்வான். உலகத்தை மாற்றுவதன் மூலம் மனிதன் தன்னைப் புரிந்து கொள்ள முடியும். இயற்கையோடு செயல்படும் பொழுது, இயற்கையை மாற்றும் பொழுதுதான் மனிதன் தன்னைப் படைத்துக் கொள்கிறான். தன் உணர்வு பெறுகிறான். செயல்படாவிட்டால் வெற்றுச் சிந்தனையின் மூலம் உலகையும், தன்னையும் புரிந்துகொள்ளவும் இயலாது.

படைத்துக் கொள்ளவும் முடியாது. அந்நியமாதல் என்ற பார்வையின் வழியேதான் நாம் மதத்தையும் புரிந்து கொள்வது சாத்தியம்.

இயற்கையோடு செயல்படும், உழைக்கும் மனிதன் பொருள் முதல்வாதப் பார்வைக்கு நெருக்கமானவன். இவனுக்குள் பொருள் முதற்பார்வை இயல்பாகச் செயல்படுகிறது. இதனை இவன் புரிந்து கொள்ளாத நிலையில்தான் மதவாதியின் கருத்து முதல் பார்வைக்கு வசப்படுகிறான். செயல்பாட்டோடு உறவு இல்லாத மதவாதி, கருத்து முதல் வாதத்திற்குள் முடங்கிக் கொள்கிறான். இவனுக்குள் உணர்வு ஏற்ற உற்சாகம் தோற்றுவிக்க - இவனுக்கு இறைவன் தேவைப்படுகிறான். தனக்குள் உற்பத்தி செய்து கொள்ளும் மாயையை சுகமாகக் காண்கிறான். இவனுக்கு விடுதலை இல்லை.

## 24. ''மதம் மக்களுக்கு அபின்''

மதம் மக்களுக்கு அபின் - என்ற
ஒற்றைப்பரிமாணப் பார்வை
மதத்தை விளக்காது. மற்றும் அழிக்காது.

வர்க்கப் போராட்டம் என்ற மார்க்சியத்தின் ஆதாரக் கருத்தை மதம் பற்றிய விளக்கத்திற்குப் பயன்படுத்த இயலும். எல்லாவற்றிற்குள்ளும் வர்க்கப் போராட்டம் நிகழ்கிறது என்பது மார்க்சிய விதி. கட்சிக்குள்ளும் இருவழிப்பாதை என்றார் மாவோ. குடும்பம் முதலிய பல்வகை அமைப்பினுள்ளும் இதன் செயல்பாட்டைக் காண முடியும். சமயத்திற்குள்ளும் வர்க்கப்போராட்டத்தை ஏன் காண முடியாது? சமயம் எப்பொழுதும் ஆளும் வர்க்கச் சார்புடையது என்ற ஒற்றைப் பரிமாண விளக்கம் பொருந்துவதில்லை. சமயப்போர்கள் அல்லது சமயத்தின் வழித்தெரியும் போர்கள் என்பன வர்க்கப்போராட்டம்தான் என்று எங்கல்ஸ் விளக்கினார்.

தேவர்களுக்கிடையில், அதாவது தெய்வங்களுக்கிடையில் நடைபெறும் போர்கள் கலவரங்கள் என்பன ஆழ்ந்து பார்த்தால் மக்களுக்கிடையிலான போராட்டங்கள்தான் என்றார் மார்க்ஸ்.

நிறுவனப்படுத்தப்பட்ட சமயம் தன் அதிகாரத்தையும், உடைமைகளையும் காப்பாற்றவும் வளர்த்துக் கொள்ளவும் அதிகாரத்தை, அரசைச் சார்ந்திருப்பதை நம்மால் எளிதாகப் புரிந்து கொள்ள முடியும். அரசு அதிகாரத்தின் பகுதி என்ற முறையில் கூட சமய நிறுவனங்கள் செயல்படுகின்றன என்றும் கூறலாம். ஆனால், இவ்வகை விளக்கம் சமயத்தின் தோற்றம், சமயத்தின் உடைசல், புதிய சமய ஆக்கம், தவிர

மக்கள் மத்தியில் இன்றுவரை சமயம் பெறும் இடம் ஆகியவற்றை விளக்க முடியாது. சமயம் எப்பொழுதும் மூடத்தனத்தின் பகுதிதான் என்ற பகுத்தறிவுப் பார்வை இந்த அம்சத்தை விளக்க முடியாது.

சமுதாயத்தின் பொருள் வகைச் சிக்கல்கள் அதிகரிக்கும் சூழலில், அன்றியும், மக்களின் முற்றான விடுதலைக்கான வாய்ப்புக்கள் இல்லாத நிலையிலும், மக்கள் தம் ஆறுதலுக்காகவும், தம்மை விடுவிக்கும் சக்திகளை எதிர்நோக்கியும், நம்பியும், கடவுளை/சமயத்தை நாடுகின்றனர். மார்க்சின் புகழ்பெற்ற வாசகங்களை வேறு எந்த முறையிலும் விளங்கிக் கொள்ளஇயலாது.

மதம் ஒடுக்கப்பட்ட மக்களின் ஏக்கப் பெருமூச்சு என்றும் அதே வேளையில் ஒடுக்கப்பட்ட சூழலுக்கு எதிரான கலகம் என்றும் மார்க்ஸ் கூறுகிறார். கடவுளே, உனக்குக் கண் இல்லையா? என்று மக்கள் புலம்பும்பொழுது, இக்குரலில் தமக்கு நேர்ந்துள்ள நெருக்கடியை மக்கள் வெளிப்படுத்துவதோடு அல்லாமல், கடவுளுக்கு எதிரானதாகவும் இக்குரலில் அர்த்தம் வெளிப்படுகிறது. சூழலுக்கு எதிரான குரலாகவும் இதனை நாம் காணமுடியும். உலகம் திரிபுபட்டதாக, வர்க்க ஏற்றத் தாழ்வுகளால் வாழ்வு திரிபுபட்டதாக இருக்கிறது. திரிபுபட்ட உலகம் மாயைகளைத் தோற்றுவிக்கிறது என்பதும் மார்க்சின் கருத்து. இந்த மாயைகளுள் ஒன்று கடவுள். இந்த மாயை தற்காலிகத் தேவையாகவும் அமைகிறது. இந்த நோக்கில்தான் ஏக்கப் பெருமூச்சு, கலகம் என்ற வாசகங்களை அடுத்துத் தொடரும் வாக்கியத்தைப் புரிந்து கொள்ள முடியும்.

மதம் - இதயமம் அற்ற உலகின் இதயம். ஆன்மா அற்ற உலகின் ஆன்மா என்கிறார் மார்க்ஸ். ஆங்கிலத்தில் இருக்கும் வாசகங்களை, மென்மைப் படுத்தும் முறையில், உயிரற்ற உலகின் உயிர், உணர்வற்ற உலகின் உணர்வு என்றெல்லாம் இந்த வாசகங்கள் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளதையும் நாம் கவனிக்க வேண்டும். மேற்குறிப்பிட்டட அனைத்து வாசகங்களின் சாரத்தையும் முற்றாக உள்ளடக்கும் முறையில் மார்க்ஸ் முடிக்கிறார். மதம் மக்களுக்கு அபின் போதை தருவது - உணர்வுகளை மங்கும்படியாகச் செய்வது என்பது மட்டுமல்ல - அபின் என ஆங்கிலத்தில் தரப்படுவதாகிய ஜெர்மன் மூலச்சொல் இன்னொரு அர்த்தத்தையும் உள்ளடக்கியதாக இருக்கிறது என்கிறார் பிக்கு பரேக் என்ற பேராசிரியர். அதாவது கடுமையான தீக்காயங்களால் பாதிக்கப்பட்ட ஒருவருக்கு, தற்காலிகமாக - வலிநிவாரணி - மார்பியா தேவைப்படுகிறது. இந்த அர்த்தத்தையும் அந்த ஜெர்மன் சொல் கொண்டுள்ளது என்கிறார் அந்தப் பேராசிரியர். மார்க்சின் தொடர்ச்சியான கூற்றுக்கு முத்தாய்ப்பாக

வரும்-மதம் மக்களுக்கு அபின் என்ற 'வாசகத்திற்கு இந்த இரு அர்த்தங்களும் சரியாகப் பொருந்துகின்றன.

மதம் மக்களுக்கு அபின்தான் என்ற முறையில், லெனினின் ஒற்றைப் பரிமாண வாசகம் அமைகிறது. இந்த வாசகம், பெரியாரியத்திற்கு-பகுத்தறிவியத்திற்குச் சரியாகவே பொருந்தும். இந்த ஒற்றைப் பரிமாணப் பொருள்-மக்கள் துயரத்தை விளக்காது - மக்கள் துயரத்தைப் புரிந்து கொள்ளாதது இந்தப்பார்வை. மூடத்தனம் தான் மதத்தை - கடவுளைத் தோற்றுவித்தது என்ற புரிதலின், புரியாமையின் விளைவு இந்த அர்த்தப்படுத்தல், குறிப்பிட்ட வரலாற்று, பொருளியல் சூழலில்தான் எந்தச் சிக்கலையும் வைத்து ஆய்வு செய்வது என்பது மார்க்சிய முறை. சமயம் மட்டும் அல்லாமல் வேறு எதனையும் கலை, இலக்கியம், தொழில்நுட்பம், சாதி முதலிய அனைத்தையும் இவற்றின் தோற்றம், வளர்ச்சி, அழிவு ஆகிய - எதனையும் குறிப்பிட்ட வரலாற்றுச் சூழலில் வைத்துத்தான் ஆராய்ந்து புரிந்து கொள்ள முடியும். சமயம் அல்லது கடவுள் கருத்தையும் இப்படித்தான் விளக்க முடியும்.

கடவுள் என்பது ஒரு கருத்தாக்கம். கடவுள் என்பது பொருளியல் சக்தி அல்ல என்பதை மார்க்சியம் விட்டுக் கொடுக்க இயலாது. கடவுள் என்ற கருத்தாக்கம் வரலாற்றின் குறிப்பிட்ட காலச் சிக்கல்களிலிருந்து தோன்றிய ஒரு கருத்தாக்கம். தன்னைச் சுற்றிலும் நடைபெறும் பருவமாற்றம். மழைப் பொழிவு, கதிரவன் இயக்கம் முதலிய பல்வேறு நிகழ்வுப் போக்குகளைப் புரிந்து கொள்ள மனிதன் முயற்சி செய்கிறான். தான் வாழ்வதற்கு மிக நெருக்கமாக உள்ளவை இந்த நிகழ்ச்சிகள். இவற்றைப் புரிந்து கொள்ளாமல் மனிதன் வாழமுடியாது. கேள்வி எழுந்த பிறகு விடைதேடி தனக்குள்ளும் புறத்திலும் அலைகிறான் மனிதன். இத்தேடலில் கிடைத்த ஒரு கருத்து கடவுள். இந்தக் கருத்து மூலம் தனக்குள்ளும் புறத்திலும் நடைபெறும் பல்வேறு இயக்கங்களை, இந்தக் கருத்தை ஒரு திறவுகோல் மாதிரிப் பயன்படுத்திப் புரிந்து கொள்கிறான். இந்த முயற்சி பல ஆயிரம் ஆண்டுகள் தொடர்கிறது. இந்தக் கருத்துப் பற்றிய ஐயங்கள் எழுகின்றன. வரலாற்றுச் சூழல் வேறுபட்ட நிலையில், அறிவியல் வளர்ச்சி பெற்றநிலையில், கடவுள் என்பது பொருளியல் சக்தி என்பதைக் கைவிடுகிறான். கடவுள் இல்லை என்ற முற்றான பகுத்தறிவுக் கொள்கைக்கும் செல்கிறான். கடவுள் என்பது ஒரு கருத்தாக்கம். ஒரு திறவுகோல் - ஒரு கருவியாக இது பயன்படுகிறது என்பதை நிதானமாகவே புரிந்து கொள்ள இயலும். இந்தக் கருவியை - கருவி என்பதை - கருத்து என்பதை மறுத்து இது ஒரு பொருள்தான் என்று நிலைநிறுத்துவதில் விடாப்பிடியாக நிறுவனச் சமயங்கள் தொடர்ந்து முயற்சி செய்கின்றன. கருத்து மனிதனைப் பற்றிக் கொள்ளும்போது ஒரு

பொருளியல் சக்தியாகச் செயல்படுகிறது என்ற மார்க்சின் கூற்று ஆழமுடையது என்பதையும் நாம் இங்கு கவனிக்க வேண்டும்.

மேலும் மதம் பற்றிய ஆழமான புரிதலுக்கு ஜான் லெவிஸ் என்ற பிரிட்டிஷ் மார்க்சியர் - புரோகிதர், தீர்க்கதரிசி என்ற இருவேறு கருத்துக்களைத் தக்க முறையில் பயன்படுத்துகிறார். சமய நிறுவனச் சார்புடையவன் புரோகிதன். மக்கள் சார்பில் செயல்படுபவன் தீர்க்கதரிசி / ஞானி.இவன் இடைவிடாத தேடலில் இருப்பவன். சமூகக் கொடுமைகளுக்குக் காரணமான உடமை, அரசு, அதிகாரம், சமய நிறுவனம், சாதி-இறுதியாக மதம் ஆகியவற்றைத் தோலுரிப்பவன். கிருத்துவ சமயத்தல் இந்தத் தீர்க்க தரிசிகள்-இறைவாக்கினர் எனக் கொண்டாடப் படுகின்றனர். இயேசுவும் ஒரு தீர்க்க தரிசியாகக் காணப்படுகிறார். தமிழ்ச் சமூகத்தில் சித்தர்கள் இவ்வகையினர். சைவம் நிறுவனப் படுத்தப்படுவதற்கு முந்திய நாயன்மார்கள், குறிப்பாக நால்வரை இம்முறையில் நாம் வைக்கலாம். ஆழ்வார்களும் இம்முறையில் மதிக்கத் தக்கவர்கள்.

அந்நியமாதலின் ஒரு முக்கிய வடிவம் சமயம் என்ற மார்க்சின் கருத்து. நமக்கு இன்றும் ஆழ்ந்த புரிதலை வழங்க இயலும். இயற்கையோடும், சமுதாயத்தோடும், தன்னோடும் பிரிவுபடாத முறையில் ஆதிப்பொதுமைச் சமூகத்தில் மனிதன் வாழ்ந்தான். வர்க்கச் சமூகம் தோன்றிய நிலையில் தனி உடமை, அரசு முதலியவை தோன்றிய நிலையில், மனிதன் இயற்கையிலிருந்தும், சமுதாயத்திலிருந்தும், இறுதியாகத் தன்னிலிருந்தும் அந்நியமானவன். இத்தகைய குரூரங்களுக்கு மத்தியில் அந்தப் பழைய ஆதிச்சமூகம், தனக்குள் கனவாக, உணர்வாகத் தங்கியரப்பதைக் காண்கிறான் மனிதன். இயற்கையோடும், சமுதாயத்தோடும், தன்னோடும் பிரிவுபடாத அந்தப் பேருணர்வைத் திரும்பவும் வேண்டுகிறான். இவனுக்குள்ளே இப்பொழுது எழுகிறது. இறைவன் என்ற கருத்து இயற்கை, சமுதாயம் ஆகியவற்றின் அங்கம் மனிதன். இயற்கையும், சமூகமுமே இவனுக்கு உயிரையும், உணர்வையும், அன்பையும், ஆற்றலையும் வழங்குகிறது. இவற்றோடு இந்த உணர்வுகளோடு தன்னை முற்றாக ஐக்கியப்படுத்திக் கொள்வதன் மூலமே தனது வாழ்வின் நிறைவைக் காண முடியும்.

அந்நியமாதலை முற்றாகக் களைந்து கொள்வதற்கான ச கச் சூழல் பொதுவுடைமைச் ச கத்தில் தான் நேரும் என்கிறார் மார்க்ஸ். அத்தகைய சமூகத்தில், மீண்டும் மனிதன் தனக்குள் முழுமையை, நிறைவான வாழ்வைப் பெறுவான். இறைவன் இப்பொழுது இவனுக்குள் நிறைவான். புறத்தில் இறைவன் இவனுக்குத் தேவையில்லை. கிருத்துவம் முன்வைக்கும்

நிறைவாழ்வு, இறையாட்சி ஆகிய தொடர்களை இவ்வகையில் நாம் அர்த்தப்படுத்துவது சாத்தியம் மட்டுமல்ல, தேவையும் கூட.

ஆதிப்பொதுமைச் சமூகத்திலிருந்து விலகிய நிலையில், அந்தச் ச கப் பொதுப் பண்புகளின் நிறைவான இறைவனை மனிதன் தனக்குள் தாங்கினான் என்பதை நாம் இவ்வாறு புரிந்து கொள்ளும் அதே சமயம், இறைவன் என்பதற்கு தரப்படும் பற்பல இலக்கணங்கள் பற்றியும் கவனிக்கத்தான் வேண்டும். பல கடவுட் கோட்பாடு, ஒரு கடவுட் கோட்பாடு, கடவுளுக்கு வழிபாடு, கோயில் முதலிய பல்வேறு செயற்பாடுகள், அவ்வக்காலச் ச க நிலவரங்கள் முதலியவற்றை ஒட்டியே ஏற்படுவதையும் பார்க்க முடியும். இவை பற்றிய விளக்கங்கள், மார்க்சியப் புரிதலோடு நடைபெற்றுள்ளன.

இறைவன் மனிதவாழ்வுக்கு மையம் ஆகிவிட்டான். இறைவன் மூலமே இனி எதுவும் சாத்தியம் என்ற நிலை. மனிதன்தான் கடவுளைப் படைத்தான் என்று பயர்பாக் விளக்கினார். மனிதனின் இனப்பண்புகள்-அறிவு, அன்பு, விருப்பம், ஆர்வங்கள் எனப்பலவற்றைப் புறத்தில் செலுத்தி, இறைவனுக்குள் செலுத்தி இறைவனைப் படைத்த மனிதன், நாளடைவில் இறைவனை இலட்சியப்படுத்தி பேருணர்வு பேராற்றல் ஆகியவற்றின் வடிவமாக்கி, தன்னைத் தாழ்த்தி, அதன்முன் தன்னைக் கிடத்திக் கொண்டதை பயர்பாக் விளக்கினார். இந்த விளக்கம் மார்க்சுக்கும் உடன்பாடாக இருந்தது. வெறும் தனக்குள்ளான சிந்தனை அல்லது தியானம் **Contemplation** என்ற முறையில் மனிதன் இக்கருத்தாக்கத்தைப் பெறவில்லை என்று மார்க்ஸ் கண்டார். இது பொருள் வகைக்சூழலில் செயல்படும் மனிதனின் உணர்வாக எழுந்த கருத்து என்பதைத்தான் மார்க்ஸ் விளக்கினார். பயர்பாக்கின் பொருள் முதல்வாதத்தை மார்க்ஸ் ஆய்வுக்கு உட்படுத்துகிறார், தான் முதல்வன் என்பதை மறந்த மனிதன் இறைவனை முதல்வனாக்கினான் என்றார் பயர்பாக்.

மீண்டும் மனிதன் தனக்குள் அவனை ஐக்கியப் படுத்திக் கொள்ள வேண்டும். ஏசுவின் மூலம், வெளிப்படும் அன்பு மனித அன்பு. இம்முறையில் அன்பின் சமயத்தை பயர்பாக் படைத்தார் என்கிறார் மார்க்ஸ். வரலாற்றுச் சூழலை மாற்றுவது பற்றி பயர்பாக் சிந்திக்கவில்லை. இதுவரை தத்துவவாதிகள் உலகை விளக்கினார்கள். இனி நாம் செய்ய வேண்டியது, உலகை மாற்றுவது என்ற மார்க்ஸின் முடிவை. இவ்வாறு நாம் விளங்கிக் கொள்ள முடியும். பயர்பாக் இறைவனை விளக்கினார். இறைவனை நமக்குள் ஐக்கியப்படுத்திக் கொள்ள, இறைவன் தேவைப்படாத சூழலைத் தோற்றுவிக்க சமூகத்தை மாற்ற வேண்டும். அரசு இருக்கும்வரை,

அந்நியமாதல் - மதம் இருக்கும் என்றும் மார்க்ஸ் கூறியிருக்கிறார்.

மனிதனின் கைகளைப் பிணைக்கின்ற சங்கிலிகளை மறைக்கும் அழகிய மலர்கள் என்று மதம் பற்றி மார்க்ஸ் கருதியதையும், நாம் புரிந்து கொள்ள முடியும். பொருளியல் சங்கிலிகளால் மனிதன் தளைப்பட்டுள்ளான். சமயம், இறைவன், இந்தச் சூழலில்தான் மாய உணர்வுகளின் வழியே மனிதனை மயக்குகிறது. இவை அழகிய மலர்கள். அழகானவை, கண்ணுக்குக் குளிர்ச்சியானவை. இந்த இன்பத்தில் கவர்ச்சியில், மனிதன் எந்நேரமும் மூழ்கியிருக்க முடியாது. மனிதன் நனவுலகிற்கு வரவேண்டும். சமயம் பற்றிய விமர்சனம் இந்த அழகிய மலர்களை - விலக்கி உள்ளே மறைந்திருக்கும் பொருளியல் தளைகளை மனிதனுக்குக் காட்ட வேண்டும் என்றார். கருத்தியல் வகைப்பட்ட விமர்சனம், ஆயுதங்களைக் கொண்டதான விமர்சனமாக மாறவேண்டும் என்றார்.

பகுத்தறிவுப் பார்வையிலான விமர்சனம் தன் நோக்கில் பொருளியல் பற்றிய விமர்சனமாக உருப்பெற வேண்டும் என்பதைப் பகுத்தறிவாளர்களால் புரிந்து கொள்ள முடியும். பார்ப்பனர் செய்த சதி, முட்டாள்தனம் என்பதோடு இந்த விமர்சன நோக்கை நிறுத்திவிட முடியாது. ஆழத்திலுள்ள பொருளியல் தளைகளை மக்களுக்குச் சுட்டிக்காட்டுவது மிக முக்கியம். பகுத்தறிவாளர்கள் இதைச் செய்ய, மார்க்சின் பொருளியல் பற்றிய பார்வையைக் கற்க வேண்டும், கற்கத்தான் வேண்டும்.

தமிழகச் சூழலில், மார்க்சியருக்குள்ளும் முடமாகிவிட்ட பகுத்தறிவுப் பார்வையைத்தான் காண்கிறோம். சரியான புரிதலோடு, சமயம் பற்றிய விமர்சனம் பகுத்தறிவு வாதிகளையும், மார்க்சியரையும் இந்தத் தளத்தில் இணைக்கும். இத்தகைய பொருளியல் சூழல் நிலவும் காலம் முழுதும் சமயங்கள் புதிது புதிதாகத் தோன்றிக் கொண்டே இருக்கும். தமிழகச் சூழலில், இன்று புதிய புதிய சமயவழித் தோன்றல்கள் பலரை-பற்பலரைப் பார்க்கிறோம். சூலை மாற்றுவதற்கானத் தேவை அதிகரிக்கிறது என்பதையும் இதன்மூலம் நாம் புரிந்து கொள்கிறோம். சூழலை மாற்றுவதுதான் சரியான விமர்சனம் என்கிறார் மார்க்ஸ்.

டால்ஸ்டாயினிடம் முழுநிறைவான அன்பைக் கிருத்துவ அன்பாகப் பார்க்க முடியும், இதையும் சமயம் என்று விமர்சனம் செய்தார் லெனின். 1905, இல் புரட்சி தோற்ற நிலையில் பாக்டனோவ், கார்க்கி போன்றவர்கள் புதுக்கடவுளைத் தோற்றுவிக்க முனைந்ததையும், லெனின் கடுமையான விமர்சனத்திற்கு உள்ளாக்கினார். அன்பு என்பதுதான் அவர்கள் தோற்றுவிக்க முனைந்த புதுக்கடவுள். வர்க்கங்களுக்கிடையில் சமரசமாக, இந்த அன்பு வெளிப்படுகிறது என்பது லெனினியப் புரிதல். கடவுளை

மறுத்த நிலையிலும் சமயம் செயல்பட முடியும் என்பதை வரலாற்றில் நெடுக நாம் காண்கிறோம். சமயத்தை, அதன் நிறுவன வடிவில் ஒதுக்கிய - ஒழித்த பிறகும், சமயம் வாழ்கிறது. இம்முறையில் சமயத்தையும் ஒழித்துவிட்டுத்தான் ஓய்வோம் என்று பகுத்தறிவாளர்கள் கூறலாம். மார்க்சியரைப் பொறுத்தவரை, இந்த எல்லைக்குச் செல்ல வேண்டியதில்லை. பொருள்வகைச் சூழலை மாற்றுவது என்பது சமய நிறுவனங்களை ஒழிப்பது என்பதையும் உள்ளடக்கியதுதான். இத்தகைய சூழலை உருவாக்குவதன் மூலம் சமயத்தின் ஆதிக்கத்தை அழிக்க முடியும்.

பிரபஞ்சம் முதற்கொண்டு, உடலியல், உளவியல் பற்றிய எல்லாப் புதிர்களும் விடுவிக்கப்படும் காலம் வரை, சமயம் ஏதோ சில வடிவங்களில் இருக்கத்தான் செய்யும். கம்யூனிச சமூகத்தில் கலை, இலக்கியத்திற்குள், இசைக்குள் பொதுமை தங்கிய சிந்தனை முறைக்கும் தேவைஇருக்கத்தான் செய்யும். கம்யூனிச சமுதாயமும் முரண்பாடுகள் அற்றதாக இருக்க முடியாது. பகைமுரண்களுக்கு இடம் இல்லை. நட்பு முரண்கள் செயல்படத்தான் செய்யும்.

தனக்குள், மார்க்சியன் இறுக வேண்டியது இல்லை. தனிமனிதனை-அவனது சுதந்திர உணர்வை மார்க்சியன் மறுக்க முடியாது. உளவியல் ஆய்வுகளுக்கு வழிதிறந்து வைப்பதுபோல - மெய்யியல் முதலிய ஆய்வுகளுக்கும் கம்யூனிச சமுதாயம் வழிதிறந்து வைக்கும். சமயத்தோடு நம் பகை முற்றுப் பெறுவது போதுமானது. மார்க்சியம் தனக்குள்ளிருக்கும் பகையை விட்டுவிட முடியும்.

## 25. பெரியாரியம், சீக்கிய மதம், இஸ்லாம்

### *1. பெரியாரியம்*

நேற்றுமாலை (18.2.96) நண்பர் செந்தூரம் ஜெகதீசுடன் பெரியார்தாசன் அவர்களைச் சந்தித்தேன். அவருடன் நடத்திய உரையாடலிலிருந்து அவரது அழகிய முகம், வித்தியாசமான முகம் தெரிந்தது. இதுபற்றி எனக்கு யாரும் இதுவரை கூறவில்லை.

தத்துவத்துறையில் பேராசிரியராக அவர் பணியாற்றுகிறார். பெரியார் பற்றி விரிவாகப் பேசினார். பெரியார், தமிழகச் சூழலிலிருந்த வரலாற்றுக் கடமையை நிறைவேற்றிய அதே வேளையில், அவரிடமும் குறைகள் இருந்தன என்கிறார். சாதிகூடாது என்று தொடங்கி, அதற்குத்தடையாக மதம், கடவுள் அப்புறம் இவற்றைக் கட்டிக்காக்கும் பார்ப்பனர் என்ற முறையில் அவரது விமர்சனங்கள் இருந்தன என்ற வரலாற்றை எடுத்துரைக்கிறார். பெரியார், ஆய்வு அறிஞர் அல்லர்.

அனுபவத்திலிருந்து பலவற்றை எடுத்துரைத்தார். அவர் காலத்திலேயே அவரது தொண்டர்கள் அவரைக் கற்றுத் தெளியவில்லை. அதன் விளைவாக, சாதி,மதம், பார்ப்பனர் பற்றிய விமர்சனங்கள் அவரிம் இறுகிக்கிடக்கின்றன. இன்றைய திராவிட இயக்கம், இதன் தொடர்ச்சிதான்.

இன்றும் தி.க.வினர், சாதியப் பற்றிலிருந்து விடுதலை பெறவில்லை. அமைப்பில் தாழ்த்தப்பட்டவர்களைச் சேர்ப்பதில்லை. சாதிபற்றிய ஆய்வில் அம்பேத்கார் அளவுக்குப் பெரியார் இல்லை. சாதிகூடாது என்பதில் உறுதியாக இருக்கவேண்டுமானால், இடஒதுக்கீட்டை மறுத்தாக வேண்டும். பிறப்பு, கல்வி, பதவி, திருமணம், இறப்பு ஆகியவற்றோடு சாதி செயல்படுகிறது. ஒன்று இரண்டில் சாதியை அனுமதித்தால் பிற எல்லாவற்றிலும் சாதி செயல்படும். சாதியின் தோற்றம் பற்றிப் பெரியார் கவலைப்படவில்லை. மதம் பற்றியும் இதே அணுகுமுறைதான். மதத்திலிருந்து மீட்டுக் கொள்ள வேண்டிய கூறுகள் உண்டு. அழகியல், அறவுணர்வு பற்றிப்பெரியார் கவலைப்படவில்லை. பார்ப்பனியத் தோற்றம், நிலை பற்றியும் பெரியார் கவலைப்படவில்லை.

பெரியாரைக் கடந்து செல்ல வேண்டும் என்கிறார் பெரியார்தாசன். புத்தமதத்தில் அறவுணர்விற்கு அழுத்தம் இருந்தது. இந்துமதத்தில் கடவுளுக்கு நிகரான அழுத்தம். அதேபோல, கலை உணர்வு, அழகியல் உணர்வு என்பது வாழ்வில் அடிப்படை உணர்வு, கடவுளைக் கைவிட்டால் அந்த இடத்தில் அறத்தையும், அழகியல் உணர்வையும் வைத்திருக்க வேண்டும். எதிர்மறைத் தத்துவம் பயன்படாது. பெரியாரின் பகுத்தறிவு இம்முறையில் கடுமையான குறை உடையது. இன்று வீரமணியின் செயல் கடுமையான விமர்சனத்திற்கு உரியது. பெரியாரின் திறனாய்வு முறையிலிருந்த குறைகள் காரணமாக, தமிழகத்தில் தத்துவம் புறக்கணிக்கப்பட்டது. தமிழ் இலக்கியவாதிகளுக்குத் தத்துவம் இல்லை. மார்க்சியரிடமும் இவை இல்லை. பெரியாரியத்தின் விளைவு இது. மார்க்சியம் பற்றித் தனக்குப் படிப்பறிவு உண்டே தவிர, ஆய்வு இல்லை என்கிறார் பெரியார்தாசன். மார்க்சிய நோக்கு, பெரியார் பற்றிய அவரது பார்வையை மேலும் வளப்படுத்த முடியும். சமதர்மம் என்ற மையத்தில் பெரியாரியத்தைக் குவிப்பதன் மூலம், பெரியாரியத்தை வளப்படுத்த இயலும். அறம் என்பது தன் ஆழத்தில் இன்று சோசலிசம்தான். சோசலிசப் பார்வையோடு கூடிய அழகியல்தான், வலுவான-வளமான அழகியல் உடைமை வர்க்க அழகியல் நம்மைச் சுருங்க வைக்கும்.

பெரியார்தாசன், முனைவர் பட்டத்திற்கான ஆய்வுப்பொருள், கணிணியின் தத்துவார்த்தப் பிரச்சனைகள் என்பது. கணிணி எத்தனையோ வகைகளில் மனித உழைப்பைக் குறைக்கும் என்ற போதிலும், மனிதனுடைய

அழகியல் உணர்வை அழித்துவிடும் என்பது அவரது முடிவு. கணிணிப் பயன்பாட்டின் விளைவாக மனிதனுக்கு மனப்பயிற்சி, சிலருக்கு உரியதாகவும் பெரும்பாலானவர்களுக்கு இல்லாத நிலையில், இவர்கள் மந்தபுத்தி உடையவராவார்கள். இதன் விளைவு இவர்களை அதிகாரத்தில் உள்ளவர்கள் கையாள்வது மிக எளிதாகிவிடும். பெரியார் இருந்திருந்தால் கணிணியைப் பெரிதும் வரவேற்றிருப்பார் என்கிறார் பெரியார்தாசன். பெரியாரிடமும் குறைகள் இருந்தபோதிலும், அவரது பார்வை வீச்சு, வியக்கத்தக்க முறையில் விரிவு பெற்றதாக இருந்தது. பெரியாரின் தத்துவம் வளர்க்கப்படவில்லை என்கிறார் பெரியார்தாசன். தேவாரத்திலிருந்து ஒரு பாடலைக் கூறுகிறார். பெண்ணாகிய பெருமான் இந்தத் தொடர் எவ்வளவு சிறப்பாகப் பெண்ணியப் பார்வையைப் புலப்படுத்துகிறது என்று வியக்கிறார். பாரதிதாசனிடம் அழகியல் உணர்வு செயல்பட்டது பற்றிக் குறிப்பிடுகிறார். திருக்குறளைப் பலர் உச்சிமேல் வைத்துக் கொண்டாடியதன் விளைவாக, பெரியார் குறளையும் விமர்சனம் செய்தார் என்கிறார். குறளில், ஆதிபகவன் என்ற தொடருக்கு அர்த்தம் கூறுகிறார்.

பெரியார்தாசனின் துணைவியார் வாசுகி உடன் இருக்கிறார். காண்ட்டில் அவர் ஆய்வு செய்கிறார், எழுதுகிறார். காண்ட் அடிப்படையில் ஒரு விஞ்ஞானி. தத்துவத் துறையில்அவர் தற்செயலாகவே ஈடுபட்டார். அவருக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை. அறிவின் மூலம், கடவுளைக் கண்டறிய இயலாது என்பதை விரிவாக எழுதினார் காண்ட். கடவுள் உண்டு என்பதையும் மெய்ப்பிக்க இயலாது. இல்லை என்பதையும் அறிவால் மெய்ப்பிக்க இயலாது. இப்படிக் காண்ட் கருதியதற்கு காரணம், கடவுள் இல்லை என்று அவர் கூறியிருந்தால், புருனோ முதலியவர்களுக்கு நேர்ந்த கதி அவருக்கும் ஏற்பட்டிருக்கும்.

அவர் காலத்தில் ஜெர்மனியில் பேரரசர்-பிரடரிக் இருந்தார். மதத்தை அவர் விரும்பவில்லை. மதவாதிகளை அவர் ஒதுக்கினார். அறிவியல் ஆக்கத்தை அவர் வரவேற்றார். இத்தகைய பேரரசின் ஆதரவு காண்ட்டுக்கு கிடைத்தது. காண்டின் ஆய்வு குறிப்பிட்ட திசையில் இயங்கியதற்குக் காரணம், பிரடரிக் பேரரசர் என்கிறார் வாசுகி. புறஉலகம், அகஉலகம் ஆகியவற்றுக்கு இணைப்பு கடவுள் என்று காண்ட் கூறுவதாக மற்றவர்கள் கூறுவது உண்மையல்ல என்கிறார். காண்ட் Idealist அல்ல என்றும் கூறுகிறார்.

### *(2) சீக்கியம்*

சீக்கியம் பற்றிப் பேராசியர் முத்துமோகன் மொழியாக்கம் செய்த நூல் படிக்கிறேன். சமயம் பற்றி வியக்கத்தக்க சில பார்வைகளைச் சீக்கிய

சமயம் கொண்டிருக்கிறது.

இந்து சமயத்தின் எல்லைக்குள்தான் சீக்கிய சமயம் இருக்கிறது என்று வைத்துக் கொண்டால், இந்து சமயம் எதிர்கொண்டு - தீர்க்கத்தவறி - இதனால் சில முரண்பாடுகளுக்குள் மாட்டிக் கொண்டு - தத்துவ வளர்ச்சியற்று இந்துசமயம் விழிப்பதைப் புரிந்துகொள்ள முடியும். இந்து சமயத்தில் சாதி வேறுபாடு பிரிக்க முடியாத அம்சம். சாதியமைப்பின் உச்சத்தில் பார்ப்பனர். இவர்கள் தரும் தொல்லைகள் சகிக்க இயலாதவை. சீக்கியம் தனக்குள் சாதியத்தை முற்றாக அங்கீகரிக்கவில்லை. தவிர சாதிப்படிகளில் தாழ்ந்தவர்கள்தான் இந்தச் சமயத்திற்கு ஆதாரமானவர்கள். சாதி அறவே கூடாது என்ற கொள்கையில் சீக்கியசமயம் உறுதியாக இருக்கிறது.

சமத்துவம், சகோதரத்துவமும் வளர்க்கும் நெறி சீக்கிய சமயம். சமயத்தின் தலைமையில் உள்ள குரு, தன் தொண்டர்களை வணங்குகிறார் - காலைத்தொட்டு வணங்குகிறார். குருவும் ஊழியர்களும் சமமானவர்கள். ஊழியரும் குருவே.

சீக்கியர்களின் கால்சா என்ற அமைப்பு சீக்கியர்களின் விடுதலைக்கான அமைப்பு. தொடக்கம் முதலே - அரசு ஆதிக்கத்திற்கு எதிரான அமைப்பு. ஆயுதம் தாங்கிப் போராடும் அமைப்பு. இஸ்லாமியருக்கு அடிமைப்பட முடியாது என்ற முறையில் இது தோன்றியது என்பது உண்மைதான் - என்றாலும் - அரசு ஆதிக்கத்தைத்தான் இது எதிர்க்கிறது. மதத்தோடு இதற்கு மறுப்பு இல்லை. இஸ்லாமியரும், சீக்கிய சமயத்தில் இடம் பெறலாம். மொகலாய மன்னர்களுக்கு எரிச்சலூட்டிய அம்சமாக இது இருந்தது. சீக்கிய சமயம் தேசியத்தின் விடுதலைக்கான சமயம். சமயத்தின் தலைவன் குருவும் அரசனும் ஆகிறார். அகத்தில் ஒரு குரு புறத்தில் அரசர். அடிப்படையில் மனிதவிடுதலைதான் சீக்கிய சமயத்தின் குறிக்கோள் - இவ்வாறாக - இந்து சமயம் எதிர்கொண்டு - தீர்க்க இயலாத் பல சிக்கல்களைத் தீர்க்கக் கூடியதாக இருக்கிறது. சீக்கிய சமயம் இதில் சாதியில்லை. பார்ப்பனர் இல்லை. அடித்தளமக்களே இதில் உள்ளனர். அவர்களின் சமுதாயமே, நீதிக்கு உகந்தது. குரு-சீடர் என்ற முரண் இதில் இல்லை. தேசவிடுதலையுடன் இன்றியமையாத உறவு உடையது. இறைவன் மனிதனுக்கு எதிரானவன் இல்லை. மனிதவிடுதலை தான் - சமயத்தின் நோக்கம். இவ்வாறு பேராற்றலைத் தனக்குள் உள்வாங்கிக் கொண்டதாகச் சீக்கிய சமயம் உருவாகியிருக்கிறது.

**3. இஸ்லாமியம்**

இஸ்லாமிய தத்துவம் பற்றிஇராகுல சாங்கிருத்யாயன் நூல் படித்துக் கொண்டிருக்கிறேன். வியப்புக்கு மேல் வியப்பாக இருக்கிறது. நாம் அறிந்த இஸ்லாமியத்திற்கு ஒரு முகம்தான் இருக்கிறது. அது முகம்மது நபியின் முகம் என்று கருதிக் கொண்டிருக்கிறோம். இஸ்லாமியம் இப்படி இல்லை, இதற்குப் பலமுகங்கள் இருக்கின்றன. இஸ்லாமியம் அரபுநாடுகளையும் கடந்து, ஸ்பெயின், டர்கிஸ்தான், சீனா என்று எத்தனையோ நாடுகளில் பரவி, அந்தநாடுகளின் கலாச்சாரத்தோடு சேர்ந்து வளர்ந்திருக்கிறது. அங்கெல்லாம் இஸ்லாமியத்திற்கு வெவ்வேறு முகங்கள் தெரிகின்றன. நபிமட்டுமா இறைத்தூதர்? இல்லை. இயேசு, மோசே முதலியவர்களும் இறைத்தூதர்கள். இஸ்லாமியம் கிரேக்கச் சிந்தனையின் விரிவான பாதிப்புக்கு உள்ளாகியிருந்தது. இதன் காரணமாக பிளேட்டோ, அரிஸ்டாட்டில், சாக்ரடீஸ் முதலியவர்களும் இறைத்தூதர்கள்.

நபிமட்டும்தான் இஸ்லாமியத்தை வெளிப்படுத்தியவரா? விரிவுபடுத்தியவரா? இல்லை. நூற்றுக்கணக்கான அறிஞர்கள் தொடர்ந்து பலநாடுகளில் இஸ்லாமியத்தின் தத்துவத்தை விளக்கப்படுத்தி இருக்கிறார்கள். இஸ்லாமியம் மதம் மட்டுமா? இல்லை. தத்துவமும்கூட இஸ்லாமியத்தில் கருத்து முதல்வாதம் மட்டும்தானா இடம் பெற்றிருந்தது? இல்லை, பொருள் முதல்வாத விளக்கத்திற்கும் இஸ்லாமியம் உட்பட்டது. இஸ்லாமியத்தினுள் எத்தனையோ பிரிவுகள், இவற்றில் சியா, சூஃபி இரண்டு மட்டும் நமக்குத் தெரிந்து இருக்கிறது.

இந்நூலைத் தொடர்ந்து படிக்கும்போது இந்துமதப் பின்னணியோடு கூடிய நமக்கு எத்தனையோ வியப்புக்கள். சங்கரரின் அத்வைதம், இந்தியத் தத்துவப் பரப்பில் கொடிய நஞ்சு, காட்டுத்தீ என்பது போல நம்மவர் பார்க்கின்றனர். இஸ்லாமியத்தில் ஒருமைத்தத்துவம் பெரும்காட்டுத் தீயாகப் பற்றி இருக்கிறது.

அரிஸ்டாட்டிலின் பொருள் தற்சார்பு-தர்க்கவியல் நமக்கு வந்து சேரவில்லை. அல்லது நம்மைப் பாதிக்கவில்லை. தொடக்கம் முதலே அரிஸ்டாட்டிலின் தர்க்கம் இவர்களைக் கவர்ந்திருக்கிறது. அரிஸ்டாட்டிலை விட்டு இவர்களால் விலகமுடியவில்லை.

பிளேட்டோவின் தத்துவமும் இவர்களைப் பாதித்திருக்கிறது. மேலுலகில் தூய கருத்துக்கள் - மண்ணுலகில் இவற்றின் பிரதிபலிப்பாகப் பொருட்கள் மண்ணுலகப் பாதிப்புக் காரணமாக இப்பொருட்கள் குறையுடையவை. இந்தவகை, மிஸ்டிசிசம் இவர்களைப் பாதித்திருக்கிறது.

இவ்வளவுதானா? இல்லை, இதற்கு மேலும் - இறைவனுக்கு உருவம்இல்லை. இருக்க முடியாது. இயற்கைக்குக் கூட உருவம் இல்லை. அது முதலில் அருவமாகத்தான் இருந்தது. இயற்கைக்கு உருவம் தந்தவர் இறைவன். இறைவனுக்கு உருவம், குணம் முதலியவை இல்லை. இறைவன் குணம் அற்றவன். செயலால் பாதிக்கப்படாதவன். அவனுக்கு உலகப் பொருள்களோடு உறவில்லை. நன்மையோடு மட்டும் உறவு உடையவன். நன்மையோடும்கூட அவனுக்கு உறவு இல்லை.

இறைவன், உலகம், உயிர், அநாதியானவை, இறைத்தூதர்கள் மூலம், இவர்களோடு இறைவன், இவற்றோடு உறவு கொள்கிறான். இவ்வாறு ஒன்றிலிருந்து பிறந்து விலகிய எத்தனையோ தத்துவங்கள்.

இந்தியத்தத்துவப் பரப்புக்கு இவையும் நிகரானவை. தவிர, வித்தியாசமானவை. இறைவன் மனிதனை எதுவும் செய்யலாம், தண்டிக்கலாம். கொல்லலாம். அரசனின் கொடுங்கோன்மையை ஆதரிப்பதாகிய இறைத்தத்துவம் இது.

இஸ்லாமியத்திற்கு ஒருமுகம் தேவையில்லை. இந்து மதத்திற்கு மட்டும் ஏன் ஒற்றை முகம்? இந்தியா ஒரு நாடு என்ற முறையில்தான் ஒற்றைமுகம் உருவாக்கப்படுகிறது. இஸ்லாமியம் பலநாடுகளில் பல முகங்களோடுதான் இருக்க முடியும்.

## 26. மதவாத அரசியல்

எதிரியைக் கொல் என்று
எனக்குள் ஒலிக்கும் குரல்
தெய்வத்தின் குரலா? யாருடைய குரல்?

வகுப்புவாதம் பற்றியும், சமயச் சார்பு-இன்மை பற்றியும் விவாதிக்கும் பொழுது, மதம் என்னவாகிறது என்பது பற்றி நாம் பார்க்க வேண்டும்.

அரசியலில் மதத்தைக் கலப்பதுகூடாது. கல்வியில் மதம் குறுக்கே வரக்கூடாது என்பது சமயச் சார்பின்மை. மதத்தைத் தனிநபர் வாழ்வுக்கு உரியதாக வைத்துக் கொள்ள வேண்டும். சமுதாயப்பிரச்சனை, அரசியல் பிரச்சனை என்பனவற்றுள் கொண்டுவரக் கூடாது என்பது சமயச்சார்பின்மை.

பொருளியல் முதலிய சிக்கல்களை நாமாகத தீர்த்துக் கொள்ள வேண்டும். இவற்றில் கடவுளுக்குச் சம்பந்தம் இல்லை. முதலாளி - தொழிலாளி விவகாரம் முதலியவை மனிதர் சம்பந்தப்பட்ட பிரச்சனை.

கடவுளைக் குறுக்கே கொண்டு வரவேண்டாம். மாணவன், உலகியல் பற்றிய கல்வியைத்தான் பெறுகிறான். இவனுக்கு மதத்ததைக் கற்றுத்தருவது, கல்விமுறை நிர்வாகத்தின் வேலையல்ல, கடவுள் நம்பிக்கைதான் கல்வி. வளர்ச்சிக்குத் தேவை, என்று நாம் பேச வேண்டாம். இங்கெல்லாம், கடவுளை, மதத்தை நாம் ஒதுக்கி வைப்பது நல்லது. மனிதர் தொடர்பான பிரச்சனைகளில் கடவுளை குறுக்கே விடுவதன் மூலம், கடவுளை நாம் மலினப்படுத்துகிறோம். மதிக்கவில்லை. இதற்கு என்ன அர்த்தம்? கடவுளைச் சண்டைக்குரிய, விவாதத்திற்குரிய பொருளாக்க வேண்டாம். மதவேறுபாடுகள் மலிந்துள்ள சூழலில், கடவுளைப் பிரச்சனை ஆக்க வேண்டாம். நம் சிக்கல்களைத் தீர்ப்பதில் கடவுளுக்குப் பங்கு இல்லை.

இதற்கு அர்த்தம், கடவுளை நம்பி நாம் நம் சிக்கல்களைத் தீர்க்க முடியாது. நாத்திகத்தை நாம் நெருங்கிக் கொண்டிருக்கிறோம். மௌனமாக நாத்திகத்தைச் செயல்படுத்துகிறோம். இங்கெல்லாம் நிறுவனங்களுக்குள், கருவிகளுக்குள் கடவுளைக் கொண்டுவர வேண்டாம்.

வகுப்புவாதம் பேசுபவர், மதத்தை என்ன செய்கிறார்கள்? மசூதியை இடிக்கிறபோது, இவர்களைத் தூண்டியவர்கள் - கடவுள் எங்கும் இருக்கிறார் என்ற உண்மையைத் தெரியாதவர்களா? அல்லது இஸ்லாமியரது கடவுள் வேறு கடவுள். எங்களுக்கு வேறுகடவுள், கடவுள் பலர் என்ற கருத்து உடையவர்களா? கடவுளைப் பற்றி இவர்கள் சிந்திக்கவில்லை. மசூதி இருந்த இடம், இராமர் இருந்த இடம் எங்களுடையது. இராமருக்கு, அவருடைய இடத்தை நாங்கள்தான் மீட்டுத்தரவேண்டும். அவராக இந்த இடித்தை மீட்டுக் கொள்ள மாட்டார். கோயில் கட்டுவதும் இடப்பதும், மனிதர் சம்பந்தப்பட்ட பிரச்சனை. கடவுளுக்கும் இதற்கும் தொடர்பு இல்லை. எங்கள் அதிகாரத்திற்குள் இந்த இடம் இருக்க வேண்டும். மதம் என்னாவாயிற்று? மதத்திற்கும் இவற்றிற்கும் இன்றியமையாத உறவு இல்லையா? கடவுள் - உடனடியாகச் செயல்படமாட்டார் என்பது சரிதானா? கடவுள் சார்பில் மனிதன்தான் செயல்படவேண்டுமா? கடவுளுக்கும் மதத்திற்கும் உறவு இல்லையா? மதம் எப்பொழுதுமே அதிகாரத்திற்கு அனுசரணையாகத்தான் இருந்தது. ஆதிக்கத்தின் செயல்வகையே இந்த அரசியல். கோயில் சடங்கு முதலியவை, கடவுளை நமக்குள் குடியேற்றுவதில்லை. அரசியல் சக்தியின் பகுதியாக நம்மை இவை மாற்றுகின்றன. வழிபாட்டின் மூலம், நமக்குள்நாம் என்ன ஏற்றிக் கொள்கிறோம் கடவுளா இதைச் செய்கிறார்? நம்மை நாமே சரிப்படுத்திக் கொள்கிறோம்.

இராணுவம் எதிரிநாட்டில் புகுந்து கொள்ளையடிக்கிறது. கோயில்களை இடிக்கிறது. பெண்களைக் கற்பழிக்கிறது. எதற்காக?

எதிரியின் பலத்தை, மன உறுதியை, குலைப்பதற்காக, தகப்பதற்காக, நீண்டகாலம் எதிரிகளை அவன் நினைவில் நிறுத்துவதற்காக, கோயிலைத் தகர்ப்பது இராணுவத்தைப் பொறுத்தவரை - அரசியல். இது கடவுள் மீதான தாக்குதல்கூட அல்ல. மசூதித்தகர்ப்பு இஸ்லாமியருக்கு எச்சரிக்கை, அவர்களின் மனஉறுதியைக் குலைக்கும் முயற்சி, போர்ப்பிரகடனம்.

இந்தியாவில் எத்தனையோ - கடவுள்கள், வழிபாட்டு முறைகள், சடங்குகள், அங்கங்கே அவரவர்களுக்கு உரிய முறையில் வழிபாடு செய்யலாம். செய்தார்கள். எல்லாவற்றையும் - ஒன்றாக ஒருவடிவில் திரட்டி - பலமுகத்தை அழித்து ஒருமுகமாக்கும் முயற்சி - செய்யப்படவில்லை. செய்ய வேண்டியதும் இல்லை. இந்தியா ஒருநாடு என்ற பேச்சு எப்பொழுது எழுந்தது? ஏன் எழுந்தது? இது அரசியலின் குரல் அன்றி வேறுஎன்ன? இந்த அரசியல்தான் எல்லாவற்றையும் ஒன்றுக்குள் திணித்தது. இந்துமதம் என்ன செய்தது? இப்படிச் செய்யவேண்டும் என்ற எண்ணம். ஆயிரம் ஆண்டுகளுக்கு மேல் நம்மவர் மனத்தில் இருந்தபோதிலும்இது செயல்பட்டது அண்மைக்காலத்தில்தான். காங்கிரஸ் கட்சி இப்படிக் குரல் எழுப்பியது. இன்று ஆர்.எஸ்.எஸ்.ன் குரல் எழுந்திருக்கிறது. ஒன்றாகத் திரட்டினால்,கடவுள் மகிழ்ச்சியடைவாரா? கூடுதலாகக் கருணை வழங்குவாரா? இல்லை.

கடவுள், இவர்களிடம் கேவலப்படுகிறார். கடவுள் இல்லை என்பதை இவர்கள் செயல் பிரகடனப்படுத்துகிறது. இந்து மதம் என ஒற்றைப் பரிமாணத்தில் உருவாக்க முயன்றதுதான். பிராமணமதம் - சங்கரர் செய்த முயற்சி. இஸ்லாமியருக்கு எதிரான முயற்சியாகவும் இருக்கக்கூடும். அல்லது பௌத்தத்திற்கு எதிரான முயற்சி என்றும் கூறலாம். எந்த நிலத்தைக் காக்க இந்த முயற்சி?

கோயில் - அரசு அதிகாரத்தை நிலை நிறுத்துவதற்காகத்தான். கோயில் தகர்ப்பும் இதற்காகத்தான். பொருளியல் வாழ்வின் ஓரத்தில் ஒதுக்கத்தில் தான் மதம், கடவுள். பொருளியல் வாழ்வு என்பது மையத்திலும், சாரத்தில் இது. சுரண்டல் மற்றும் ஒடுக்குமுறை வசதியான வாழ்க்கை, அதிகாரத்தை நிலைப்படுத்தல். இவர்கள் - இந்த அரசியல்வாதிகள், ஆதிக்கவாதிகள், கடைந்தெடுத்த நாத்திகர்கள். கோயில்கள் இவர்களது முகமூடிகள். கடவுளர் இவர்களுக்கு அலங்காரப் போர்வைகள், சாதனங்கள். இவர்களின் காவலுக்கு, மனநிம்மதிக்குக் கடவுளை வைத்துக் கொள்கிறார்கள். கடவுள் இவர்களுக்குச் சேவை செய்கிறார். செய்யவேண்டும். கடவுளை வைத்து அதிகாரம் குவிக்கிறார்கள்.

கோயிலைக் காப்பாற்று, கடவுளைக் காப்பாற்று என்று இவனுக்குள் ஒலிக்கும் குரல். இவனுடையதான், பொருளியல் வாழ்வின் நலன்தான். சிறுவயது முதற்கொண்டு இவனுக்குள் சேகரமானது இந்தக் குரல்தான். கடைத்தெருவில் இவன் தனிமனிதனாகி மற்றவரிடம் பறிக்கக்கூடியவன். சமூக இயக்கத்தில் இதுவே இவனுக்குள் இவனைப் போன்ற பலருக்குள் ஒலிக்கும் குரல். இவன் தன்குரல் எங்கிருந்து வருகிறது என்று பரிசீலனை செய்யவில்லை. இவனுக்குச் சுயசிந்தனை இல்லை. அதையாரும் இவனுக்கு கற்பிக்கவில்லை. அரசியல் தலைவரின் நோக்கம் வேறு. அந்தக் குரலின் அர்த்தம் இவனுக்குத் தெரியாது. தெய்வத்தின் குரல்தான் தனக்குள் ஒலிக்கிறது என்று இவன் நம்புகிறான். தெய்வம் பற்றி இவனுக்கு யார் கற்றுத் தந்தார்கள்?

உண்மையான சமயவாதிக்குப் பைத்தியம் பிடித்திருக்கும். இந்தியாவில் யாருக்காவது பைத்தியம் பிடித்ததா? எனக்குள் ஒலிக்கும் குரல் என்னுடையது போலத் தோன்றினாலும் என்னுடையது அல்ல என்பதை எப்படிப் புரிந்து கொள்வது? வரலாறு, சமூகம், பொருளியல் / உளவியல் மெய்யியல் என்று பலவற்றைக் கற்றுத் தெளிந்திருந்தால் ஒழிய, என்குரலின் அர்த்தம் எனக்குத் தெரியாது சமயநம்பிக்கை மிக்கவர்கள் அறிவு குறைந்தவர்கள்தான் ஐயமில்லை.

கடவுள் என்பதுதான் என்ன? கடவுள் என்ற கருத்தாக்கத்திற்குள் பதிந்திருப்பதுதான் என்ன? இந்தக் கலவரச் சூழலில் இதுபற்றிச் சிந்திக்க முடியாது. கடவுள் அன்பின் வடிவமா? கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறானா? எதிரியைக் கொல் என்று எனக்குள் எழும்குரல், தெய்வத்தின் குரல்தான் என்று இங்கு ஒரு சங்கராச்சாரி - கூறிவிடுவார். கடவுளைத் தனக்குள் கண்டதாக அந்த அர்ச்சுனனும் நம்பிவிடுவான். காந்தி இல்லை, காந்தி இருந்தால் செத்துப்போவார். கடவுளைத் துரத்துகிற முயற்சி இந்தக்கலவரம். நாத்திக வாதத்திற்கான தூண்டுதல், மனிதன் தன்னை, தனக்குள் செயல்படும் பொருளியலை முதலாளிலியத்தை அதிகாரத்தை, உணர்வதற்கான தொடக்கம்.

கடவுள் வழியே நாம் காலந்தோறும் கேட்டகுரல் யாருடைய குரல்? எதனுடைய குரல்? - வரலாற்றின் எந்தக் குரல்? பரிதாபத்திற்கு உரியவர் அந்தக் கடவுள். புரோகிதன் தான் வெற்றி பெற்றான். புரோகிதன் கடைந்தெடுத்த பொருள் முதல்வாதி, கள்ளன், அதிகாரி, பொய்யன். தீர்க்கதரிசி என்பவன் - ஏமாளி, மடையன், புரோகிதனுக்குச் சேவை செய்தவன், கடவுள். - கூலிக்காரன், முட்டாள், புரோகிதனுக்குச் சேவை செய்தவன். உடமையாளனுக்கு, அரசாங்கத்திற்கு சேவை செய்தவன் - புரோகிதன். அரசனை வெல்ல முடியாமல் அரசனிடம் ஒதுங்கி காசு

பறித்தவன் புரோகிதன். இவன் தனக்குள் உறுதியில்லாதவன், கோழை, கள்ளன். கடவுள் இவன் கையில் குரங்கு. புரோகிதன், கடவுளை ஆட்டி வைத்தான். காசு பறித்தான். கடவுள் பிச்சை உண்டார். மற்றவர்களுக்கு உண்மை தெரியக்கூடாது என்பதற்காக குரங்கைக் கடவுள் என்றான் புரோகிதன்.

வரலாறு எப்படியெல்லாமோ நலிந்து வளைந்து செல்லுகிறது. கடவுளை, புரோகிதனை, அரசனைக் கண்டுபிடித்து - நமக்குள்ளிருந்தும், வெளியிலிருந்தும் துரத்ததுவதற்காகத்தான் இந்த ஆராய்ச்சி. கடவுள் கதை, புராணங்கள், கோயில்கள், உருவங்கள் - மடங்கள் எல்லாமே பெரிய நாடகங்கள் - நாடகங்கள் வழியே மனிதன் தன்னை அறிந்திருக்க வேண்டும். நாடகமே கூட இவனை மயக்கி - முடமாக்கி விட்டது. மதம் மட்டுமா? வாழ்வு என இவன் வரித்துக் கொண்ட அனைத்தும் மயக்கங்கள்.

## 27. மதத்தின் தர்க்கம்

சூன்யமும்
தேடலின் உணர்வின் ஒரு விளைச்சல்

பிரபஞ்சத்திற்கு மூலமாக முதல்வனாக இருப்பவன் இறைவன். இவன் இல்லாமல் பிரபஞ்சம், உலகம், உயிர்கள் வந்திருக்க முடியாது. இதுதான் மதத்திற்கு மூலவித்து, அப்படி ஒருவன் இருக்க முடியுமா? ஒன்றுமில்லாத பாழிலிருந்து பொருள் வருவது சாத்தியமா? இதைச் சாத்தியப்படுத்தியவன்தான் இறைவன். இப்படித் தன் வாலையே பிடித்துக் கொண்டு சுற்றிச் சுற்றி வரும் சாகசம் தான் மதம். இன்மையிலிருந்து பொருள், குணத்திலிருந்து பொருள், புலன்களிலிருந்து பொறிகள், பொறிகளிலிருந்து பூதங்கள், சத்தியிலிருந்து சிவன், ஆன்மா முதல் - பிறகுதான் உலகம்: இதுதான் மதத்தின் தர்க்கம். தொடக்ககாலச் சிந்தனைமுறை. பொருளா? இயக்கமா? எதுமுதல்? விதையா? மரமா? எது முதல். இது இறைரகசியம். இது மனிதர்களுக்குத் தரப்படவில்லை. இதை - இந்தத் தர்க்கத்தை எப்படி மனிதருக்குள் விதைப்பது? நிலைநிறுத்துவது?

இதற்குத்தான் பக்தி, நம்பிக்கை, இறைவனைச் சந்தேகிக்கக்கூடாது. தியானம் செய். கடவுள் தட்டுப்படுவார். கட்வுள் ஒளிமயமானவர். கதிரவனுக்கு ஒளிகொடுத்தவர். நீருக்குத் தன்மை தந்தவர். நெருப்புக்கு வெப்பம் தந்தவர்-கடவுள். நம்பு - நம்பினால் உனக்கு நல்லகதி. இந்த நம்பிக்கையைத் திணிப்பதுதான் மதம். அறிவியல் ரீதியில் - பலதுறை நுட்ப அறிவைச் செரிப்பது கடினம். பக்தி - எளிது. இனியது. நம்பினால் எதுவும் உண்மையமாகிவிடும். இதற்கும் ஒருதர்க்கம் இருக்கிறது. தர்க்கத்தின் வழியேதான் நம்பிக்கையும் விதைக்கப்படுகிறது. நம்பெற்றோர் -

மூதாதையர் அறிவு அற்றவரா? நம்புவது சுகம். நம்பினால் - சித்திகிட்டும். நம்பினால் பார்க்க முடியும். கேட்க முடியும். - வேறு என்ன வேண்டும்?

இயற்கை நமக்குப் பரவசம் தருகிறது. புத்துயிர்ப்பைத் தருகிறது. காற்று, வெயில் நமக்குப் புத்துயிர்ப்புத் தருகிறது. இயற்கை, நமக்கு உணவு தந்து உயிர் வகையீந்தது. வானம், கதிர், மதியம்-நம்வாழ்வுக்கு ஆதாரங்களை வழங்குகின்றன. இவற்றால் நாம் தழைக்கிறோம். வாழ்கிறோம். இவற்றோடு ஒரு தர்க்கம். இவற்றின் வழியே இறைவன் நமக்குள் ஊடுருவுகிறான். நம்மை வாழவைக்க, இவற்றின் வழியே இறைவன் செயல்படுகிறான். வானமாகவும், ஒளியாகவும், உணவாகவும், உயிராகவும் இருப்பவன், இயங்குபவன், இறைவன்.

இது மதத்தின் தர்க்கம் / நமக்குள் சுகத்தோடு வந்து நிறையும் தர்க்கம். இயற்கை, நமக்கு உணர்வைத் தருகிறது. அறிவைத் தருகிறது. அற உணர்வைத் தருகிறது. இயற்கையின் வழியே இறைவன் இயங்குகிறான். பிரபஞ்சம் பேராற்றல்மிக்கது. இதுபேராற்றல் - இயற்கையின் ஒழுங்கு - அறம் இந்தக் கயிற்றை அறுக்க முடியாது. வெட்டிக் கொள்வதுகூடத் தற்காலிகமானதுதான். எல்லோரும் சேர்ந்து முழங்கும் பாடலிலிருந்து எப்படித் தப்பிச் செல்ல முடியும்? காரணம்-காரியம் என்ற விரிவான விவாதம் கடவுளை மறுத்துவிடும். பொருளிலிருந்து இயக்கத்தைப் பிரிக்க முடியாது. உலகம் அநாதி, இடமும் காலமும் அநாதியானவை. இது பொருள் முதல் வாதமாகிறது. இறைவனுக்குக் காரணம் இல்லை. இறைவனே முதல் - முழுமுதற்காரணம். இப்படித் தர்க்கம் இந்தக்கடவுளுக்கு நாம் அடக்கம். கடவுளுக்குள் இன்னொரு கடவுள் இருக்க முடியாது.

தலைக்குள் எதையாவது செருகிக் கொள். தப்பித்துக் கொள்வாய். அறிவு ஒரு சுமை, சிக்கல், பக்தி-சுகமானது கூட்டத்தோடு சேர்ந்து கொள்ள வசதியானது. அறிவின் தர்க்கத்தை விட்டுவிடு. பக்தியின் தர்க்கத்தை ஏற்றுக்கொள். உலகில் ஏன் கொடுமைகள், தீமைகள், போர்கள், நிலநடுக்கங்கள், வெயில், மழை, வெள்ளம், கொடுநோய்கள்? உலகில் ஏன் ஏற்றத்தாழ்வு? - இறைவனின் ரகசியம் நமக்குத் தெரியாது. இறைவனிடமிருந்து, மனிதன் விலகி வந்தான். ஆகவே தீமைகள். இப்படித்தான் மனிதன் சுற்றி வளைக்கப்படுகிறான். மதம் இப்படித்தான் திணிக்கப்பட்டது. இந்தத்தர்க்கம் சாகாது. ஆயிரம் வருடம் ஆனாலும் சாகாது. சுகத்தோடு திணிக்கப் படுவது இந்தத் தர்க்கம். இதற்கு எதிர்த்தர்க்கம் சிரமத்தோடுதான் நமக்குள் சேர்கிறது.

இறைவன் எல்லையற்றவன். நம் அறிவு, எல்லைக்கு உட்பட்டது. எல்லைக்கு உட்பட்ட அறிவால், மனிதன் எல்லைக்கு அப்பாற்பட்ட

இறைவனை அறிய முடியாது. இதுகடுமையான தர்க்கம். இறைவன்தானே வந்து தன்னை அறிவிக்கிறான். மனித எல்லைக்கு வந்து அறிவிக்கிறான். இது இறைவனுக்கு சாத்தியம். பொருள் வகை உலகத்தோடுதான் மனிதன் இருக்கிறான். பொருள்கள் வழியேதான் இறைவன், மனிதனோடு உறவு கொள்கிறான்.

மதத்திலிருந்து வெட்டிக் கொண்டால், நமது சமூகத்தோடு, வரலாற்றோடு, பழமையோடு மரபோடு, இயற்கையோடு, உறவு கொள்வது கடினம். நாம் என்னதான் விழிப்புணர்வோடு இருந்தாலும், ஒருகணம் கண் மூடினால் மதம் நமக்குள் வந்துவிடுகிறது. உலகத்தோடு சமரசம் இல்லாமல் வாழ முடிவதில்லை. வள்ளலார், வள்ளுவர், இயேசு, சமரசம் இல்லாமல் இல்லை. சமரசம் செய்து கொள்ளாதவன், காய்ந்து போகிறான். இலக்கியம், கலை உணர்வுகூட இவனுக்குச் சாத்தியம்இல்லை. இயற்கை, அழகு முதலியவற்றோடு சேர்த்து மதம் திணிக்கப்படுகிறது. மதத்திலிருந்து விலகிஇயற்கையோடு உறவு கொள்ள இயலாதா? இயற்கையின் அங்கமாக, இயற்கை நமக்குள் ஊடுருவுவதாக நாம் உணர்வு கொள்ள இயலாதா?

வரலாறு நமக்குள் இயங்குவதாக நாம் உணர்வு கொள்வது சாத்தியம் இல்லையா? சாத்தியம்தான். இந்த உணர்வுக் கலப்பை - ஒன்றிணைப்பை மதம் என்று கூறுபவர்களை நாம் என்ன செய்யலாம் அறிவு, இந்த உணர்வுக்கலப்பை அழித்துவிடுமா? இதுவும் சாத்தியம்தான். உணர்வே கூடாது. உணர்வு அறிவுக்குப் பகை என்ற தர்க்கம் நம்மை வெல்லுமா? வெல்ல முடியாது என்றுதான் கருதுகிறேன். இந்த உணர்வுக்கலப்பை மதம் தனது என்று உள்வாங்கி உரிமைப்படுத்திக் கொண்டது. நாம் மதத்திலிருந்து இந்த உணர்வுக் கலப்பை விடுதலை செய்வோம். காக்கை-குருவி எங்கள் சாதி என்பதுதான் இந்த உணர்வுக்கல்ப்பு.

இது இலேசான மாயை எனினும், சுகமான மாயை. தேவையான மாயை. நாடகம் போல உணர்வூட்டும் மாயை. இதிலிருந்து த்ப்பமுடியாது. மனிதனாக இருக்கும்வரை - தப்ப இயலாது. மனிதன் - இப்படி ஆக்கப்பட்டிருக்கிறான்.

இயல்பாகவே, நம்புலன்கள், உணர்வு என்னும் நீரால் நனைந்திருக்கின்றன. உணர்வின் ஊடுருவல் இல்லாமல் புலன்கள் இயங்க முடியாது. உணர்வைத் தருவது உணவு, காற்று முதலியவை. விளையாடுவது புலன்களுக்கு ஊட்டச் சக்தியைத் தருகிறது. காதல் உணர்வெழுச்சி, உடலுக்கு இயல்பானது. உடல்கள் ஒட்டி உறவாடுவது விளையாட்டு. காதல், காமம், மண்ணோடு, தாவரங்களோடு, இயற்கையோடு உறவு கொள்வதன்

மூலம், உணர்வு கொள்கிறோம். உணர்வின் ஒரு ஒழுங்குமுறைதான் அறிவு. அறிவுத் திரட்சி, தர்க்கம் உணர்வு காய்ந்தால், அறிவும் வறண்டுவிடுகிறது. உலகம் வசப்படுவதில்லை. உணர்வின் ஒருவகை ஆக்கமே, மாயை-பிரமைகள் இதன் தொடர்ச்சியில் மதம் செயல்படுகிறது. உணர்வின் வழியே வாழ்வை, உலகைப் பார்க்கிறோம். உணர்வு மனிதனின் முதல் மூல மொழி. உணர்வின் வழியே ஒத்து இயங்காத தத்துவம் கலைகிறது. கலைக்கப்படுகிறது. உணர்வின் வழியே அறிவியலும்தான் இயங்குகிறது.

உணர்வின் ஒரு கட்டம் இயல்பூக்கம், உயர்கட்டம் கலையும்-தத்துவமும், உணர்வின் வழியேதான் உலகம் வசப்படுகிறது. வசப்படுத்துகிறோம். அறிவும்கூட உணர்வின்ஓர் உயர்கட்ட இயக்கம். கணிதத்தின் மேல்காதல் கொள்ள இயலும். அறிவியல் நமக்குப் பரவசம் தரமுடியும். உணர்வுதான், மனிதனை உலகத்தோடு வைத்திருக்கிறது. பொருள்முதல்வாதம், இதன் படிநிலை. கருத்து முதல்வாதம் இன்னொரு படிநிலை. உணர்வின் இன்னொரு வகை. கற்பனை உணர்வின் குவிதல் தீட்சணியம், திட்பம்/நுட்பம். இதனால் உணர்வுலகம், அறிவு, உலகம் விரிவாகிறது. அறிவால் விரிவுபடுத்தப்படும் உணர்வுலகம் வளமானது, செழுமையானது. உணர்வின் ஓர்எழுச்சி, மாயை, மாயை ஒரு இடைக்கட்டம். இதைக் கடக்கும்போது பேரறிவு பேருணர்வு சாத்தியம். சூன்யமும் தேடலின் உணர்வின் ஒரு விளைச்சல்.

மதம் உணர்வின் ஒரு பின்னலான ஆக்கம். இந்தப் பின்னலில் பற்பல இழைகள், பிரித்துப் பார்க்க இயலாத அளவு பல இழைப்பின்னல், மனிதன் என்றைக்காவது உணர்வை, கருவிகளுக்குத் தந்து தன்னை முற்றாக இழந்துவிடுவானா? கருவிகள் மனிதனை ஆள சாத்தியமில்லை. சாத்தியமும்தான் முடியுமா? மனிதனைக் கட்டுப்படுத்துவது எது? புலன்களைக் கட்டுப்படுத்துவது, அவனது உலகைக் கட்டுப்படுத்துவது முதலாளியம். மதவாதிகள் இன்னொரு வகையில் புலன்களை, மனிதனை, அவனது உலகைக் கட்டுப்படுத்துகிறார்கள். தம்க்கு ஒரு உலகம். அவனுக்கு இன்னொரு உலகம். உலகம் என்றைக்குமே உணர்வின் எல்லைக்கு உட்பட்டதாகவே இருக்கிறது. எனது புலன்களுக்கு எவை எட்டுமோ அது என் உலகம். இதுவும் கட்டுப்படுத்தப்பட்ட உலகம்தான். என் புலன்கள் வழியே மற்றவர் என்னைக் கட்டுப்படுத்துகிறார்கள். தெய்வம் என்று சொல்லியும் தெய்வத்தின் மூலமும் கட்டுப்படுத்துகிறார்கள். எனக்குள் ஒரு தெய்வம் இருக்கிறது. அது என் தெய்வம்தானா? உணர்வின் ஒரு திரட்சி பக்தி, மற்றும் கடவுள். உணர்வின் ஒரு பரிணாமம் அன்பு நேசம்.

மனிதனுக்குச் சுகமான நெருப்பு, ஒரு தண்மை தேவை. உணர்வால் தான் இது கிட்டுகிறது. உணர்வே நெருப்பும், தண்மையும் உணர்வுத்தடைதான் நோய். உணர்வின் அளவான இயக்கம் ஆரோக்கியம்.

## 28. இறைவன் - ஓர் அழகிய பின்னல்

கடவுளைக் களைதல் என்பது
வாழ்க்கை என்ற கட்டமைப்பை
களைதலில் தொடங்க வேண்டும்.

கடவுட் சிந்தனையை மனிதனால் கடந்து செல்ல முடியவில்லை. அந்த அளவுக்கு வாழ்வின் எல்லா அம்சங்களோடும், இதை மாட்டி வைத்திருக்கிறார்கள். உணர்வோடு, மனத்தோடு, அறிவோடு, மண்ணோடு, இசையோடு, கலையோடு, வாழ்வின் அர்த்தத்தோடு என்ற மனிதனின் அனைத்து அம்சங்களோடும் வைத்துப் பொருத்தியிருக்கிறார்கள். வாழ்வின் ஆதாரங்கள், வாழ்வை அர்த்தப்படுத்தும் முயற்சிகள் எதையும் விட்டு வைக்கவில்லை. பிறப்பு விந்தையானது. பிறந்த கால - நிலச்சூழல் விந்தையானது. நீ செய்தவை நன்மை, தீமை என எப்படி நேர்ந்தது? இத்தகைய கேள்விகள் நூற்றுக்கணக்கில்.

மனிதன் வியப்பதற்கு உலகில் ஆயிரம் நிகழ்ச்சிகள் இருக்கின்றன. அதிர்ச்சி கொள்வதற்கு நூற்றுக்கணக்கில் நிகழ்ச்சிகள், வாழ்க்கையை ஏதோ சில கோணங்களில் கட்டமைக்க வேண்டியிருக்கிறது. இங்கெல்லாம் கடவுள் பொருத்தப்படுகிறார். பௌத்தரும், சமணரும் உலகாயதரும் கடவுளை மறுத்தார்கள்-மறுத்து என்ன பயன்? வேறுவகையான அப்பாலைச் சக்திகளோடு மனிதவாழ்க்கை இவர்களால் பொருத்தப்பட்டது. உலகை வாழ்வைப் புரிந்து கொள்ள எண்ணற்றக் கோணம். சிலவகைக் கோணங்கள், போதாது. காலங்கள் சூழல்கள் மாறுகிறபோது, வேறுவகைக் கோணங்கள் தேவை. புரியாதவை, புதிரானவை பற்பல, இவற்றோடெல்லாம் கடவுள் பொருத்தப்படுகிறார். அறிவியல் வளர்ச்சி வேறுபல புதிர்களை வெளிக் கொண்டுவருகிறது. இவற்றோடும் உடனடியாகக் கடவுள் பொருத்தப்படுகிறார்.

ஆயிரம், இரண்டாயிரம், மூவாயிரம் ஆண்டு பயிற்சி, பழக்கம், பல கோடி மக்களின் முடிவுகள், கடவுள் ஆக்கத்தோடு கலந்திருக்கின்றன. அடிப்படையில் வாழ்க்கை என்ற ஆதாரக் கூட்டமைப்போடுதான் கடவுள் பொருத்தப்பட்டு இருக்கிறார். கடவுளைக் களைதல் என்பது வாழ்க்கை என்ற கட்டமைப்பைக் களைந்து-கலைப்பதோடுதான் தொடங்கவேண்டும். மார்க்ஸ் கூறியபடி எல்லாவகை விமர்சனங்களுள் மூல-முதல் விமர்சனம் கடவுள் பற்றிய விமர்சனம்தான்.

மனிதனுக்கு வாழ்க்கை, உடம்பு, மனம், ஆண்பெண் உறவு, குழந்தைப் பேறு, சாவு, குடும்பம், சமூகம், வரலாறு, இன்பம், துன்பம், விளையாட்டு, கொண்டாட்டம், உடலியக்கம், உருவ ஆக்கம், மனப்பயிற்சி, பொருள் படைப்பு, பணிவு, பண்பாடு என்ற நூறுவகை ஆக்கங்களோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. வேறுகிரகத்தில் மனிதன் மாதிரி உயர்வகை உயிரி இருக்குமானால், உலகச் சூழலிலிருந்து வேறுபட்ட அந்தக் கிரகத்தில் வாழ்க்கை வேறுவிதமாகத்தான் இருக்கும்.

மனிதனுக்கே கூட மேலும் சில புலன்கள் வளர்ந்திருக்குமானால், வாழ்க்கை, பார்வை முதலியவை வேறுவகையாகத்தான் இருக்கும். இன்னும்கூட வேறு புலன்கள் செயல்படவும்கூடும்.

மனிதன் அல்லாத விலங்குகள், பறவைகள், தாவரங்கள், நுண்ணுயிரிகள், வாழ்வின் எல்லைக்குள்ளிலிருந்து வேறுவகையாகத்தான் இருக்கும். பிற உயிர்களுக்குத் தேவைப்படாத கடவுள், மனிதனுக்குத் தேவைப்பட்டிருக்கிறார். விலங்கிலிருந்து மனிதனைப் பிரிக்கும் எத்தனைய அம்சங்களோடு கடவுளாக்கமும் இணைந்திருக்கிறது என்றும் இல்லாத கடவுள், எல்லாவற்றிலும் கலந்திருக்கிறார். விலங்குகள் தம் வளர்ச்சி முன்னேற்றம் என்ற முறையில் சிந்திக்கின்றனவா? மனிதன் இப்படிச் சிந்திக்கிறான். நாடு, மொழி, எனச் சிந்தனைகள், ஆக்கங்கள், தேவைகள், இவற்றோடு கடவுள் சேர்ந்திருக்கிறார். இயற்கையின் பரிணாமத்திலுள் மனிதன் வருகிறான். இயற்கை தனது தேவைக்காகத் தான் தன்னைத் தோற்றுவித்திருக்கிறது என்று சிந்திக்கிறான். பெரியதோடு தன்னைப் பொருத்திக் கொள்கிறான். இயற்கைதான், தன் உணர்வுகள் முதலியவற்றுக்கு காரணம். இயல்பூச்சங்கள் தந்தது. புலன்கள், தந்தது இயற்கைதான். இயற்கை, தனக்குப் பத்திரமான வீடு, இயற்கைக் குடும்பத்தில் நான் அங்கம். பிற உயிர்கள் தன்னோடு தனக்காக. அவற்றோடு உறவு தனக்குத் தேவை அவற்றாலும் தான், மனிதன் இவ்வாறு தனக்கு வாய்த்த வாழ்க்கைக்கு நான் காரணமல்ல. தன்கு முன்பே அமைந்தது இந்த வாழ்வு. பறவை, விலங்குகள், தாவரங்களின் தொடர்ச்சி இந்த வாழ்வு. இதில் உயரங்களும், இயற்கையின் தூண்டுதலோடுதான். இயற்கையின் படைப்பாக இல்லாமல் நான் இல்லை. இயற்கையின் கோரங்கள், கொடுமைகள், குழப்பங்கள், அதிர்ச்சிகள் முதலியவற்றிலிருந்து மனிதன் தன் வாழ்க்கையைப் பத்திரமாகப் படைத்துக் கொண்டிருக்கிறான். இயற்கைக்கு எதிராக அல்ல. இயற்கையின் ஒத்துழைப்போடு - இயற்கையிலிருந்து தன்னை படைத்துக் கொண்டான். விலங்குகளை இறைவனுக்குப் பலியிட்டு, தானும் உண்கிறான். மனிதன் தன்னோடு, தனது நலத்தோடு தன்னைப் பிணைத்துக் கொள்ளவில்லை. தனக்கு வெளியில் பிறமனிதர்களோடு, சமூகத்தோடு, அண்டத்தோடு

தன்னைப் பிணைத்துக் கொண்டிருக்கிறான். அண்டத்திற்கு இவன் ஒழுங்கு தருகிறான். அர்த்தம் தருகிறான். அண்டத்தில் செயற்படும் குழப்பங்கள், மோதல்கள், குழப்பங்கள் அல்ல என்கிறான், ஆக்கங்கள் என்கிறான். வாழ்வின் தேவை இவனை இப்படிச் சிந்திக்க வைக்கிறது. பெரிய விஞ்ஞானிகளும் இத்தகையவர். சின்ன மனிதன் என்ன செய்யமுடியும்.

வாழ்வில் வசதி தேவை. வண்ணங்கள் தேவை. புலன்கள் நுட்பமாகும்போது வண்ணங்கள், வடிவங்கள், சுவைகள், கோலங்கள், விரிகின்றன. வாழ்வை விரித்துப் போடுகிறான். தன்னைப் போலக் கடவுளை மட்டுமல்ல-உலகத்தையும் படைக்கிறான். வரலாற்றைத் தன் தேவைக்காகப் படைக்கிறான். அதாவது அர்த்தப்படுத்துகிறான். வளர்ச்சி தேவை. முன்னேற்றம் தேவை. பாதுகாப்பு இன்பம் தேவை. இப்படி இவனுக்குக் கற்பித்தும் வருகிறார்கள். இவனது தேவைகளை, உணர்வுகளை இவனது உலகத்தை இப்படி மற்றவர், மதவாதிகள், அரசு அதிகாரிகள் விரிக்கவும் கூடும், முடக்கவும்கூடும். இரண்டும் வரலாற்றில் நேர்ந்திருக்கின்றன. முடக்கத்திற்கிடையில் திணறல்கள், அவலங்கள், இயற்கையின் பரவசங்கள் மகிழ்ச்சிகள். விரித்தலுக்கிடையில் விரிந்த பரப்போடு உறவை வரித்துக் கொள்ளச் சாத்தியப்படாத நிலையில் தன்னைச் சுருக்கிக் கொண்டானா?

இவன் தன்னைத் தன்னிலிருந்து வரலாற்றிலிருந்து விடுவித்துக் கொள்ள இயலுமா? சாத்தியங்கள் மிகக் குறைவே. பெரும்பாலானவர்களுக்குச் சாத்தியம் அறவே இல்லை. இவர்கள் உலகம். சுருக்கப்படுகிறது. பழைமைகளில் இவர்கள் முடக்கப்படுகிறார்கள். உடலுக்குள் இவர்கள் திணிக்கப் படுகிறார்கள். இதற்கு மதம் பயன்படுகிறது. இவர்களுக்கும் சுகமாகத்தான் இருக்கிறது. இந்த எல்லைக்கு வெளியே செல்வது சிலருக்கே சாத்தியம், பழங்காலத்திலும் இதுதான் உண்மை. இன்றும் இது உண்மை. புதிய உலகம், புதிய வாழ்க்கை, வேறுதளங்களில் வாழ்க்கை தேவை.

வாழ்வின் பலமுனைகளிலிருந்து வரும் தகருதல் காரணமாக அச்சம். அச்சம் இவனை வடிவமைக்கிறது. இன்பம் பாதுகாப்புத்தான். மைய முனைகளில் கட்டப்பட்டவனாக மனிதன் இருக்கிறான்.

## 29. வானம் நமக்கு வசப்படும்.

முதலில் தனக்குள் புதிய உலகம்
பிறகு - புறத்தில் போர்க்கோலம்

தமிழன், தேசம், மதம், இறைவன், கவிதை, அறம் என்றெல்லாம் கூறுகிறபோது, இவற்றின் வழியே ஒரு பொதுத்தன்மை தெரிகிறது.

மனிதனுக்குப் புனைவுகள், கற்பனைகள், கற்பிதங்கள் தேவை. மனிதன் என்பதேகூட ஒரு கற்பிதம், புனைவு, மந்திரம், கவிதை, யதார்த்தம் என்று வரையறை செய்வதும் இதிலிருந்து விலகியது அல்ல. மனிதன் அவனவன் சுற்றி வரும், வலம்வரும், பழகிவரும் வாழ்வை அமைத்துக் கொள்ளும் - உலகம் தனியானது. ஒவ்வொருவருக்கும் தனிப்பட்டது. இந்த உலகத்தோடு தொடர்பு கொள்ள, தொடர்பு கொள்ளும் முறை ஒருவகைப் புனைவுதான்.

மற்றவரின் உலகிலிருந்து ஒருவரின் உலகம் வேறுபடுவது இதனால்தான் என்று உறுதிப்படுகிறது.

வரலாற்றுச் சூழலில் மனிதன் இருக்கிறான். இயங்குகிறான். எடுத்தெறியப்பட்டுள்ளான் என்றும் கூறலாம். தனக்கான வாழ்வை, இந்தச் சூழலில் இருந்து பற்றிக் கொள்ள வேண்டும், பறித்துக் கொள்ளவேண்டும். பலருக்கு இந்த வாழ்வு பிறரால் இடப்படுவது, தரப்படுவது. எல்லோருக்கும் இந்த வாழ்வு கற்பிக்கப்படுகிறது யார் கற்பிக்கிறார்கள்? இவர்கள் எப்படி ஏற்றுக் கொள்கிறார்கள்? என்பது பெரும் சிக்கல். தரப்படுகின்ற, பற்றிக் கொள்கிற வாழ்வு, வரலாற்றுச் சூழலில் சில கூறுகளிலிருந்துதான் கிடைக்கிறது. எல்லாக் கூறுகளும் யாருக்கும் வசப்படுவதில்லை. நூறு கூறுகளில் 10-20 கூறுகள் ஒருவருக்கு வந்து சேர்ந்தன என்றால், இந்த 10 அல்லது 20 -லிருந்து ஒரு முழுமையைப் படைத்துக் கொள்ள வேண்டும். இது புனைவு. கற்பிக்கப்படுவதால் இது கற்பிதம். இந்த அம்சங்களில் சில உடலியல் வகையில் கிட்டியவை. (மண், நிலம், வீடு, உணவு என்பது போல) சில உள்ளத்திற்குக் கிட்டியவை. (விளையாட்டு, வேடிக்கை, பேச்சு, மொழி-கவிதை-கதை என்பன போல) வசப்படாத பிற அம்சங்கள் 70-80 என்னவாயின? அவை தொலைவில் இருக்கின்றன. இவை, 10-20 களில் வாழ்கிற இவனுக்குத் தட்டுப்படுமா? பயணங்கள் இதற்காகத்தான். பிறருடன் ஒட்டுவது, உறவாடுவது, இதற்காகத்தான். தேசம், கவிதைகள் முதலியவை, இதனால்தான் இவை கற்பிதங்கள்தான். தனக்குள்ளிருக்கும் வாழ்விற்கும், தொலைவில் இருக்கிற அவற்றுக்கும் இடையில் ஓர் உறவு, இயக்கம் தட்டுப்படுகிறது. உருவாகிறது. தொலைவில் இருப்பவை கவர்ச்சியானவை. எட்டித் தொட வேண்டும். கைக்குள் வராதது அது. கையில் தாவினால், பற்றிக் கொள்ளலாம். பிடித்துவரலாம். இணைத்துக் கொள்ளலாம். இதுபது அறுபதாகலாம். நூறு ஆகுமா? மனிதன் உறவில்தான் இருக்கிறான். புறத்தோடும், அகத்தோடுமான உறவில் இருக்கிறான். விலங்குகளுக்கு இந்த உறவு வசப்படாதது. இந்த உறவு விலங்குகளால் பதப்படுத்திக் கொள்ள இயலாதது. இந்த உறவு, வரலாற்றால்தான் நேர்ந்தது. வாய்த்தது.

வரலாறு, நீண்டது, பன்முகத்தன்மை உடையது. எட்டாத தொலைவுவரை விரிவு உடையது. நூறு சாத்தியம் இல்லைதான். 10-20

க்குள் வசப்பட்ட நிலை. இது யதார்த்தம். இதிலும் புனைவு உண்மைதான். 10-20 களை எவ்வாறு அடுக்குவது? எவ்வளவு அடுக்குவது? எதற்கு முதன்மை? எதை இறுதியில் வைப்பது? இந்த அடுக்கிலும் புனைவு. எனினும் இவை இல்லாமல் முடியாது. இது யதார்த்தம். இந்த யதார்த்தத்திலிருந்து தாவ வேண்டும். மனம் தாவுகிறது. இசை, கதை, காதல், தேசம், இறைவன் என்பவை இலக்குகள். உறவுதான் - வாழ்க்கை. உறவாடலில்தான் மனிதன். தன்னையே கூட இவன் மயக்கிக் கொள்கிறான். காதல், போதை, இன்னும் சிலருக்கு இறைவன். கட்சி, கோட்பாடு முதலியவை இவை பொய்களா? பிரமைகளா? பிறர் பார்வையில் இவை பொய்கள், பிரமைகள். இவனுக்கு இவை மெய்மைகள், உண்மைகள், உறவின் முனைகள், இலக்குகள் ஒன்றுக்கு மேற்பட்டவை. பல, பற்பல எவ்வளவு? இலக்குகளோடு ஒருவன் தன்னை இணைத்துக் கொள்ள முடியுமா? அதிக எண்ணிக்கையிலான இலக்குகளோடு உறவில் இருப்பவன் வளமானவன், விரிவானவன். இவனுக்கு வாழ்வுதரும் சோதனைகளும், அதிகம், சுகங்களும் அதிகம். மிகத் தொலை தூரத்து இலக்கில், மாட்டிக் கொள்பவர்களும் இருக்கின்றனர். இதனை ஒரு நாடகமாக்கிப் பார்க்கலாம். நாடகத்தில்

***முதற்பகுதி:-***

***காட்சி - 1***

தலைவன் கூறுகிறான்:- நீ போய் காய்கனிகள் தேடிப்பறித்து வா. கூடவே புதிய செடிகள், புதுவகைக் கனி அறிந்துவா (அடுத்தவனிடம்) நீ போய் விலங்குகளை வேட்டையாடு. எந்த விலங்கு எத்தன்மையது. இயல்பென்ன? அறிந்து வா. (இப்படியே இன்னும் பலரிடம், பிறவனக் குழுக்களோடு உறவு, கல்வி எனப் பலவகை அனுபவச் சேர்க்கை) மாலையில் - இரவில் அமர்ந்து கூடி - இருந்து அனுபவங்களைப் பகுத்தல் - தொகுத்தல் - வானம், நட்சத்திரம், மழை, பயிர்கள், குழந்தைகள், கருவிகள் எனப் பல அநுபவங்கள் - காலம் கழிகிறது.

***அடுத்த கட்டம் காட்சி - 2***

மனிதர்கள் வெவ்வேறு இடம் தேடிச் சென்றனர். அங்கங்கே தங்கிவிட்டனர். தனிக்குடும்பம், தனிஅரசு, தனித்தொழில், இவர்களுக்கிடையில் உறவில் நெருக்கம் இல்லை. கூடிப்பேசுவதில்லை. எல்லைகளில் மட்டும் உறவு. அனுபவச் சேர்க்கை (திருட்டுப் போல - ஒற்றர்கள், வணிகர்கள் மூலம்) கணிதம், பிறநாட்டு அறிவுக்கருவிகள், விற்பனைப் பகைமை, அழிவு, நாசம், பல கூட்டங்கள், பல தலைவர்கள்,

உறவாடல் குறைவு இல்லை. நாகரிகம் அழிக்கப்படுகிறது. அறிவு நாசமாக்கப்படுகிறது. இப்படியாக -

***காட்சி - 3***

வாழ்வின் ஆதாரத்தோட்டம், வாழ்வின் ஆதாரங்கள் பற்றிய ஆய்வு - சிலருக்கு மட்டும். தொகுப்பு-குறைவு / இல்லை. பொருளே உலகம். அதிகாரமே உலகம். இராணுவப் பெருக்கம், திரைப்படம், போதைகள், காட்சி சாலைகள், பல்கலைக்கழகங்கள், இயற்கை நாசம். என்னவாயிற்று? - ஆதாரத்தோட்டம் கைவிடப்படுகிறது. பொய்யர்கள், பொய்த்துறவியர், பொய்க் கலைஞர்கள் பெருகிவிட்டனர். எல்லோரும் அதிகாரிகள். வணிகக் கவிஞன். வெறும் கற்பனைகளை உற்பத்தி செய்பவன். விற்பவன், முழுப்பார்வை, யாருக்குத் தேவை? எதற்குத் தேவை? தத்துவவாதிகளைத் துரத்தியாயிற்று. அரசியல்வாதிக்கு உலகம் சொந்தம். மதவாதிகள் கொள்ளையர்கள் இவர்கள்தான் வரலாற்றின் மையத்தைக் கைப்பற்றியவர்கள். இவர்கள் பெரும்பாலான மக்களை ஓரத்திற்குத் துரத்திவிட்டார்கள். ஓரத்திலிருந்து கோபம், வேதனை, அழுகை, விளிம்பில் மனிதர்கள்.

வாழ்க்கை, இப்பொழுது - நூறு வகை, ஒன்றோடொன்று, உரசல், போட்டி, வம்பு, கூச்சல், அவரவர்க்கு அவரவரே முதன்மை வேட்டையாடல், வணிகம், கொலை, கொள்ளை, போதை மயக்கங்கள்.

***காட்சி - 4***

முழுமையான வாழ்க்கையை யார் தேடுகிறார்கள்? யாரோ புதியவர்கள் வந்திருக்கிறார்கள். புதியவர்கள்-புதிய சிக்கல்கள். அணுகுண்டுகளை, இராசயனக் குண்டுகளை, இரசாயனக் கழிவுகளை, எப்படி அழிப்பது? இராணுவத்தை என்ன செய்ய? அதிகாரப் பீடங்களை என்ன செய்ய? அழிவுத் தொழில்களை என்ன செய்ய?

வாழ்க்கையின் மையங்களாக இவர்கள் இல்லை. வாழ்க்கையை அழிப்பவர்கள் மையத்தில் இருக்க முடியாது. இவர்களிடமிருந்து வாழ்வின் ஆதாரங்களைக் கைப்பற்ற வேண்டும். உருமாற்ற வேண்டும். வாழ்வின் ஆதாரம்-இயற்கை-உழைப்பு-பகிர்வு-மகிழ்ச்சி-உறவு-கவிதை என்ன செய்யலாம்?

பொய்யான கவிஞர்களை, துறவிகளை, அரசியல்வாதிகளை, முதலில் துரத்து. இவர்களைத் துரத்தும்போது, முதலாளியச் சக்திகள்,

வெளிப்படுகிறார்கள். மலர்களை நீக்கு, தளைகள் தென்படும் என்றார் மார்க்ஸ்.

அறம்-கவிதை-மெய்யியல்-வாழக்கை-உறவு-உயிர்கள்-இயற்கை-வானம்-ஆண்-பெண்-குழந்தைகள்-உழைப்பாளர்கள்-இணைய வேண்டும். முதலில் தனக்குள் புதிய உலகம் - பிறகு - புறத்தில் கோர்க்கோலம் - புதிய உலகம்.

## 30. சமயம் - என் அனுபவம்

சமயங்கள் என்பவை வாழ்க்கையிலிருந்து விலகியிருக்கும் தன்மையையும், வாழ்க்கைக்கு முரண்பட்டிருக்கின்ற தன்மையையும், சமயத்தை அனுபவித்துப் பார்த்தவர்களல்லாமல், மற்றவரால் சரிவரப் புரிந்து கொள்வதும், புரிந்து கொண்டு வெளியேறுவதும் இயலாத காரியங்கள். தவிர, கவர்ச்சிகரமான இந்திய நாட்டுச் சமயங்களைத் தீவிரமான முறையில்அனுபவித்துப் பார்த்தாலொழிய அவற்றின் உண்மையைப் புரிந்து கொள்வது இயலாது. அனுபவித்துப் பார்த்தாலொழிய அப்பண்புகளை உட்கவர்வது என்பதும் சாத்தியமில்லை. அனுபவமே சமயத்தை அறிவதற்குரிய சரியான உரைகல். இவ்வகையில் எனது சில அனுபவங்களை இங்கு நான் முன் வைக்க விரும்புகிறேன். எனது அனுபவங்களை ஆராய்ந்து பார்க்குமாறு நண்பர்களை கேட்டுக் கொள்கிறேன். அனுபவித்துப் பார்த்தே சமயத்தைவிட்டு வெளியேறினேன் என்பதையும் இவ்வனுபவம் மூலமே சமயத்தின் நல்ல சில அம்சங்களைப் புரிந்துகொண்டேன் என்பதையும் இதற்காகவே நான் எனது அனுபவங்களை எழுதுகிறேன் என்பதையும் நண்பர்கள் நினைவிற் கொள்ள வேண்டும்.

இந்திய நாட்டில் உயர்ந்தவகைத் தத்துவமாக அத்வைதத்தைப் பெரியவர்கள் கூறியிருக்கிறார்கள். அண்டமும், அண்டத்தினுள்ள உயிர்கள் அனைத்தும் மனிதராகிய நாமும் இறைவனும் வேறல்ல. உருவத்தால் வேறுபோலத் தோன்றினாலும் உண்மையை அறிந்தவர்க்கு இவை அனைத்தும் இறைவனே என்பது தோன்றும். இத்தகைய தத்துவம், வேதம், கீதை முதலிய நூல்களால் இந்தியாவில் பிரபலப் படுத்தப்பட்டிருக்கிறது. சங்கரர், பரமஹம்சர், விவேகானந்தர் முதலியவர்களால் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இந்திய நாட்டில் சமயப் பேச்சாளர்கள் பலர் இத்தத்துவத்தை எடுத்து போற்றிப் புகழ்கின்றார்கள். சமயப் பேச்சாளர்கள் இந்த தத்துவத்தை எவ்வளவு தூரம் அனுபவித்துப் பார்த்திருக்கிறார்கள் என்பது தெரியவில்லை. பெரும்பாலானவர்கள் அனுபவித்துப் பாராமலேயே அளப்பவர்கள்தான் என்பதில் ஐயமில்லை. வாயளவில் எடுத்துரைத்து பெருமை, பாராட்டுதல் முதலியவற்றைப் பெறுவதில் கருத்து உடைய இவர்கள் அனுபவித்துப் பார்த்திருப்பார்களானால்

நன்றாகஇருக்கும். அனுபவித்துப் பாராதவர்கள்தான் இத்தத்துவத்தை வானளாவப் புகழ்கின்றார்கள். இத்தகைய இரட்டை மனிதர்கள்தான் இன்று நமக்குச் சமயத்துறையில் வழிகாட்டிகளாகப் பவனி வருகிறார்கள் என்பதை நாம் பார்த்தாக வேண்டும். இந்த அத்வைதத் தத்துவம் இளமை முதலே எனக்கு மிகக் கவர்ச்சிகரமாகத் தோன்றியது. விவேகானந்தர் வாழ்க்கை வரலாற்றின் மூலம்தான் இத்தத்துவம் எனக்கு அறிமுகமாகியது. அந்த மாபெரும் அறிஞர் எனக்கு நெடுங்காலம் வழிபாட்டுக்கு உரியவராக, இனிக்க, இனிக்க மற்றவர்க்கு எடுத்து உரைக்கப்படத் தக்கவராக இருந்தார். அவருடைய நூல்கள் பல தொடர்ந்து என்னால் படிக்கப்படுதற்குரியவையாயிருந்தன. விவேகானந்தரிடம் மிகுதியான ஈடுபாடு கொள்வதற்கு முன்னர், கடவுள் நம்பிக்கை மிகச் சிறு வயது முதலேஎன்னிடம் ஆழமாக இருந்து வந்தது என்பதையும் நண்பர்களுக்கு நான் கூறிக் கொள்ள வேண்டும். நான்காம் வகுப்பில் படிக்கும்போது, நண்பர்கள் சிலர் கூடித்திட்டமிட்டு நாள்தோறும் காலையில் கிணற்றில் குளித்துவிட்டு, விநாயகருக்குத் தண்ணீர்விட்டு வழிபாடு செய்து வந்ததும், ஒருசமயம் பக்தி முற்றி நண்பர்கள் தங்களுக்குள் காசு வசூலித்து ஊரைவிட்டு விலகிய ஓரிடத்தில் நாங்களே சிறியகோயில் ஒன்று எடுத்து கடவுளை நிறுவி, அதற்குச் சிறு விழாக் கொண்டாடியதும் எனது நினைவில் பசுமையாக இருக்கின்றன. கடவுளைக் காண முடியும் என்றும், கடவுளைக் கண்ட ஞானியர் பலர் என்றும் நூல்களும், பெரியவர்களும் கூறிவந்ததை நம்பி, அந்தக் கடவுளை நேரடியாகப் பார்த்துவிட முடிவு செய்து அதற்காகப் பலவகை முயற்சிகளையும் சிறுவயது முதற்கொண்டே நான் செய்து வந்திருக்கிறேன். யாரும் கடவுளைக் கண்டதில்லை, கடவுளைக் கண்டவர் விண்டிலர் என்றும் கடவுளைக் கண்டதாகக் கூறியதெல்லாம் பொய் என்றும் முன்னர்க் கூறியவர்களை மறுத்துப் பலர் கூறிய கூற்றும் என்மனத்திற்குள்ளிருந்தே வந்தது. இரண்டு கொள்கைகளுக்கும் நெடுங்காலம் எனது மனத்தில் பேராட்டம் இருந்தே வந்தது. ஒரு சமயம், நான் உயர்நிலைக் கல்வி முடித்த காலத்தில், கடவுள் நம்பிக்கை பற்றி எனக்குப் பெருநம்பிக்கை ஏற்பட்டு, கடவுள் இருக்கிறார். அவர் விதிகள் இன்னவை என்பதை விளக்கிக் கூறுவதற்கே நான் படைக்கப் பட்டிருப்பதாகக் கூட நான் நம்பினேன். அதே காலத்தில் ஒருமுறை, மாலை வேளையில் வழக்கம்போலக் காற்று வாங்கவும், சிந்திக்கவும் ஆற்றுப்புறம் சென்றுவிட்டுத் திரும்பும்போது மேற்றிசையில் விளங்கிய பிறை நிலாவைப் பார்த்துக் கொண்டே நின்றிருந்தபோது - திடீரென்று அண்டமும் நானும் ஒன்றுபட்டு விட்டது போலவும், என்னைக் கடந்ததொரு சக்தி - அண்டமெல்லாம் ஊடுருவியிருக்கின்ற சக்தியை உணர்ந்து அதன் பகுதியாக நான் ஆகிவிட்டது போலவும் உணர்ந்து, அவ்வானத்து நிலவில் பலமணி நேரம் என்னை மறந்து மகிழ்ந்து ஆடிய காட்சியும் எனக்கு இன்றுவரை

பசுமையாக நினைவில் இருக்கின்றது. தாகூர் தனது இளமை வாழ்வு நிகழ்ச்சிகளில் இத்தகையதொரு காட்சியை விவரித்திருக்கிறார் என்பதைச் சிலநாட்கழித்துப் படித்துப் பெருமகிழ்வுற்றேன். அந்த மாலைவேளை அனுபவம் உடலைப் புல்லரிக்க வைத்தததையும் அப்பொழுது எவ்வளவோ, இரகசியங்கள் யாவும் மனத்திற்குத் தெளிவடைந்ததைப் போலவும் எனது வாழ்க்கையை அது நிர்ணயிக்கக் கூடியதாகவும் எனக்குத் தோன்றியது.

இவ்வாறு எனது 8 அல்லது 9 ஆவது வயதில் தொடங்கிய சமய அனுபவ முயற்சி தொடர்ந்து வளர்ந்து வந்தது. உணர்வை வளர்த்து வந்தபோதே அறிவையும் நான் இடைவிடாமல் வளர்த்து வந்திருக்கிறேன். இத்தகைய முயற்சிகள் நான் கல்லூரியில் படித்த காலை உச்சநிலையை அடைந்தன. அரவிந்தர், சோபன்ஹோவர் ஆகிய இருவர் நூல்களை ஒருசமயம் நான் விரும்பிக் கற்று வந்தது எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. எந்த ஞானியைக் கற்றுவந்த போதிலும் விவேகானந்தரே எனக்குக் குருபோல நான் கருதிக் கொண்டிருந்தேன்.

எனது இருபத்தோராவது வயதில் நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது நான் பெற்ற அனுபவத்தை விவரிப்பதற்கு முன்னுரையாகவே இவ்வளவையும் எழுதினேன். கல்லூரி விடுதியில் எனக்குத் தரப்பட்டிருந்தது தனியறை, பக்கத்து அறை நண்பர் சில உடற்பயிற்சிகளைச் செய்து வந்தார். அவை உடல்நலத்திற்கு நல்லவை என்று கூறியதாலும் அடயோகம் பற்றிய நூல்களைப் படித்திருந்ததாலும் அவற்றை நானும் தொடர்ந்து செய்தேன். தலைகீழாக நிற்றல் முதலிய சிறுசிறு பயிற்சிகள், பிராணயாமம் ஆகியவற்றை செய்து வந்தேன். காலையில் 7 முதல் 8 க்குள் இதனை முடித்துக் கொண்டு தியானத்தில் ஈடுபடுவது என் பழக்கம். விக்கிரகம் ஒன்றை வைத்துக் கொண்டு வழிபடுவதை நான் விரும்பவில்லை. அப்பொழுதுதான் அத்வைதத்தை அனுபவத்தில் பார்க்க வேண்டும் என்ற தூண்டுதல் அதிகரித்தது. அடயோகத்திலும் சமய அனுபவப் பயிற்சியிலும் நல்லாசிரியர் வழிகாட்டுதல் தேவை என்று பெரியவர்கள் கூறியிருந்த பொழுதும், ஆசிரியர் யாரும் கிட்டவில்லையாதலாலும் ஆசிரியரைத் தேடிக் காலத்தைக் கழிக்க வேண்டாம் என்பதாலும் நானே இப்பயிற்சியில் ஈடுபட்டேன்.

ஆரம்பத்தில் தரையில் துண்டை விரித்து அமர்ந்து கால்மேல் காலிட்டமர்ந்து கடவுள் நினைவில் மனத்தை ஒருமுகப்படுத்தி ஈடுபட்டேன். மனத்தை ஒருமுகப்படுத்துவது ஆரம்பத்தில் கடினமானதாக இருந்தது. எத்தனையோ சிந்தனைகள் மனத்தில் கிளைத்துக் கிளைத்து வந்து மனம் ஒருமுகப்படுதலைத் தடுக்கும். சிலமாதங்கள் தொடர்ந்து விடாமல் செய்ததின் பயனாக மனத்தை ஓரளவு ஒருமுகப்படுத்துவது

சாத்தியமானதாகவும், அதுவே இன்பந்தருவதாகவும், மன ஆற்றலைப் பெருக்குவதாகவும் இருந்தது. இச்சமயம் படிப்பது மிக எளிதாகவும் படித்ததை விளங்கிக் கொள்வதும் நினைவிற் கொள்வதும் எளிதாகவும் ஆனமையைக் கண்டேன். தியானம் மனத்தை ஒருமுகப்படுத்துவதுடன் மனஆற்றலை மிகுதிப்படுத்துவதைக் கண்டு மிக வியப்படைந்தேன். மனத்தை ஒருமுகப்படுத்த கண்ணை மூடிக் கொண்டிருக்கும்போது கண்ணுக்குள் முதலில் இருளும், தொடர்ந்து மனம் ஒருமுகப்பட்டிருந்தால் அவ்விருள் விலகி, மத்தியில் மேகம் ஒன்றும் சுற்றிலும் நீலவானம் தோன்றும் ஆகிய காட்சியைக் கண்டேன். தொடர்ந்து அம்மேகத்தையே கவனித்து வந்தபோது அம்மேகம் விலகி, அவ்விடத்தில் கண்ணைப் பறிக்கும் அளவு கதிரவன் ஒளியும் தோன்றுவதைப் பார்த்தேன். சிலசமயம் இவ்வொளியைப் பொறுக்க முடியாமல் கண்ணைத் திறந்து கொள்ள வேண்டியும் இருக்கும். இவ்வாறு ஓர் இரண்டுமாதம் இவ்வொளி வெள்ளத்தில் நான் மூழ்கி வந்தேன்.

இப்பயிற்சிகள் செய்யும்பொழுதெல்லாம் ஆரம்பத்தில் உடலுக்குள் இருக்கும் ஆன்மாவை இறைவடிவம் என்று கருதி, நமக்குள்ளும்இறைவன் இருக்கின்றான். அவ்விறைவனைத் தியானத்தின்போது உணரவேண்டும் என்று கருதியிருந்தேன். ஆரம்பத்தில் உடலுக்குள் நெஞ்சப்பகுதியில் ஏதோ இறையுணர்ச்சி ஏற்படுவதை உணர்ந்தேன். நெஞ்சமாகிய கூட்டுக்குள்ளே இறைவன் உணர்ச்சியுருவில் எழுந்தருள்வதையும், அவன் உடல் எனது நெஞ்சுக்கூட்டின் பக்கங்களில் உராய்வதையும், அதனால் உண்டாகும் பேரின்பத்தையும் உணர்ந்து மகிழ்ந்தேன். இறைவனை உணர்வுருவில் அனுபவிக்க வாய்த்தமைக்கு மிக மகிழ்ந்தேன். இத்தகைய பயிற்சியைத் தொடர்ந்து நடத்தி வந்தேன். இவ்வகைப் பயிற்சிகளால் உடம்பிலும், உள்ளத்திலும் நேர்ந்த சில மாறுதல்களை நான் இடையில் குறிப்பிட்டுக் கொள்ள வேண்டியது தேவை. இரண்டொரு மாதம் இவ்வகைப் பயிற்சியில் ஈடுபட்டபோது முன்னர்த் தொடர்ந்து மலச்சிக்கலால் பாதிக்கப் பட்டிருந்த எனது உடம்பில் மலச்சிக்கல் அறவே அகன்றது. படிப்பதில் அளவற்ற ஈடுபாடு, ஆற்றல் ஏற்பட்டது. சோர்வில்லாமல் இரவு ஒருமணிவரை கூடப் படிக்க முடிந்தது. பல்துறை அறிவையும் எளிதாகப் பெறுவதற்கு இயன்றது. தலையில் எண்ணெய் தடவிக் கொள்ளாமலேயே எண்ணெய்ப் பசை ஏற்பட்டிருந்தது. உடலில் வடியும் வேர்வை தீயநாற்றம் இழந்து நறுமணம் கமழ்ந்தது. இரவில் படுக்கையில் படுத்துக் கண்ணை மூடினால், கண்ணுக்குள் மாறிமாறித் தோன்றிய காட்சி வகைகள் எத்தனை ஆயிரம்! உலகில் உள்ள மலர் வகைகளும் இல்லாத மலர் வகைகளும் கண்ணுக்குள் நொடிக்கு நொடி மாறி வண்ணங்களுடன் வந்தன. பலவகை உருவமைப்புகள் பலவகைக் கோணங்கள் வந்தன. ஓரிரவில் என் கனவில் வந்து இளம்மங்கை ஒருத்தி

என்கையைத் தொட்டாள். அம்மங்கை என்னையைத் தொட்ட தொடு உணர்ச்சி காலையில் எழுந்தபோதும் என்கையில் புல்லரித்துக் கொண்டிருந்தது. அன்று மாலைவரை எனது கை அற்புத உணர்வுகளுக்கு இடமாக இருந்தது. மாலை ஆகஆக அவ்வுணர்ச்சி குறைந்து மறைந்தது.

தியானம் செய்து கொண்டிருக்கும்போது, மூளையின் பின்பகுதியிலிருந்து ஏதோ குளிச்சியான திரவம் இளகி வருவதைப் போல ஆரம்பத்தில் உணர்ந்தேன். மூளையில் இது தேங்கி நின்றது போலத் தோன்றியது. ஆரம்பத்தில் ஓர் அரைமணிநேரமாவது தியானத்தில் ஈடுபட்டிருந்தபோது இந்நிலை ஏற்பட்டது. இச்சமயத்தில யாராவது நண்பர்கள் கதவைத் தட்டி விடுவார்களானால் எனது தியானம் கலைந்துவிடும். பிறகு வெளியில் சென்றேனுனல், யாரைப் பார்த்தாலும், ஆற்றலற்றவராக, அறிவற்றவராகத் தோன்றும். எனது மூளைக்குள் நானே தாங்கிக் கொள்ள இயலாத சக்தி நிறைந்து கிடப்பதைப் போல நான் உணர்ந்தேன். அந்தச்சுமை எனக்கு வேண்டாம் என்றுகூட என் மனம் நினைக்கும். அச்சமயம் ஆசிரியர்களைக்கூட என்னால் மதிக்க முடியாது. மூளையில் தேங்கிய சக்தி அனைத்தும் அறிவாற்றலாக எனக்குத்தோன்றியது. அவ்வாற்றல், நிறையப் படித்துச் சிந்தித்தாலொழியக் கீழிறக்க முடியாது என்ற முறையில் நான் அதிகம் படித்தேன். இவ்வாறு சில மாதங்கள் கழிந்தபின்னர் எனது பயிற்சியில் பெரிதளவு முன்னேற்றம் அடைந்தேன். இச்சமயம், எனது ஆன்மா மட்டும்தான் கடவுளாஆ எனது உடலும் கடவுள் அல்லவா என்ற சிந்தனை ஏற்பட்டது. இதனையும் அனுபவித்தாக வேண்டும் என்ற வேட்கை ஏற்பட்டது. எனது உடலும் கடவுள்தான் என்று எனக்கு நானே பலநாள் கூறிக் கொண்டேன். சில நாட்களுக்குப் பின்னர்ஆன்மாவை இறையென்று உணர்ந்ததுபோலவே ஆன்மாவாகிய இறை உடலில் சிறிது சிறிதாகப் பரவி எனது உடல் முழுமையையும் இறைமயமாக்கியதை உணர்ந்தேன். எனது உடல் இறைமயமாகியுள்ளது. நான் இறைவனாகிவிட்டேன். இது மட்டும் போதுமா என்று எனக்கு அய்யம் ஏற்பட்டது. என்னைச் சுற்றியுள்ள அனைத்தும் நான். எல்லாமே இறைவன் என்ற உணர்வை அடைய மிக விரும்பினேன். தியானிக்கும்நேரம் ஒரு மணிநேரம் வரை நீண்டது.

இறுதியாக இந்நிலையும் ஏற்பட்டது. தியானத்தின்போது எனது உடலைத் தொட்டுப் பார்த்துக் கொள்வேன். இறைவனைத் தொடுவதைப் போன்ற புல்லரிப்பு ஏற்பட்டது. பக்கத்திலுள்ள சுவரைத் தொடுவேன். சுவரைத் தொடும்போது கடவுளைத் தொடுவது போன்ற உணர்வு அறை முழுவதும் கடவுள் நிறைந்திருப்பது போன்ற உணர்வு! வெளியில் எழுந்து வந்து நின்றால் முன்னால் நின்ற வேப்பமரம், வேப்பமரத்தின் முன்

விளையாடிய நாய்கள் அனைத்தும் இறைவனாகத் தோன்றின. எனது தலைக்குள் எழும்பி நிறைந்த சக்தி / திரவம் உடலுக்குள் மெதுவாகப் பரவியது. தலைக்குள் நிறைந்த ஆற்றல் உடலுக்குள் பரவுவது போன்ற உணர்ச்சி! தலைக்குள் மட்டும் சக்தி தேங்கும்போது ஆணவம், உடலுக்குள்ளும் சக்தி பரவிவிட்டபோது ஆனந்தம், பணிவு, நல்லெண்ணம்! இந்நிலையில் யாருடனும் உறவாட, பேச விருப்பம் ஏற்பட்டது.

பயிற்சி தொடர்ந்ததும் தியானம் செய்யும் நேரம் அதிகரித்தது. தியானத்தில் ஏற்படும் பேரின்பம் அனுபவிக்க அனுபவிக்க தீராததாகவும் அதிகரிப்பதாகவும் இருந்தது. நாளடைவில் ஒரு கட்டம் வந்தது. இதுவரை ஆக்க வழியில் சென்ற வளர்ச்சி என்னை அழிக்கத் தொடங்கியது. இதனை நான் விரிவாகக் கூற வேண்டியிருக்கிறது. நான் கடவுள் என்பது மாறிச் சுற்றிலும் உள்ளவை கடவுள் என்ற நிலைக்கு வந்தேன். அந்நிலை மாறி எல்லாமே கடவுள் என்ற நிலைக்கு வந்துவிட்டேன். இப்பொழுது எல்லாப் பொருள்களுக்கும் இடையில் உள்ள வேற்றுமை அகன்றாக வேண்டும். நான் கடவுள், நான் உண்ணும் உணவு கடவுள், ஆகவே உணவு உண்ணும்போது என்னை நானே உண்பதைப் போன்ற உணர்வு ஏற்பட்டது. என்னை நானே உண்ண எப்படி மனம் வரும்? ஆகவே உணவு உண்பது எனக்கு அஞ்சத்தக்கதாக ஏற்பட்டது.

எல்லாமே ஒன்று என்ற நிலை ஏற்பட்டப் பிறகு மேல் கீழ், கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்ற பிரிவினை ஏற்படுத்துவதற்குப் பொருளே கிடையாதல்லவா? ஒரு சமயம் நண்பர் ஒருவருடன் வெகுநேரம் விவாதத்தில் ஈடுபட்டிருந்தது எனக்கு நன்றாக நினைவு இருக்கிறது. வானத்தில் மேலே கீழே என்பதற்கு அர்த்தம் கிடையாது. உலகத்தில் கிழக்கு மேற்கு என்று திசைப்பிரிவினை செய்வது பொருளற்ற செயல். அடி, அங்குலம், மைல் என்று பிரிப்பதற்குப் பொருளில்லை. நீளம், அகலம், உயரம் என்பது இல்லாதவை. முட்டாள்தனமாவை என்று தீவிரமாக அவருடன் விவாதித்தேன். என்னை அவர் பைத்தியம் என்றே அன்று நினைத்தார். நான் அவரை முட்டாள் என்று கருதியிருந்தேன். மேல், கீழ் என்னைப் பொருத்தவரை அற்றுவிட்ட காரணத்தால் மாடியிலிருந்து கீழிறங்கி வரும்போது திடீரென்று குதித்துவிடவேண்டும் என்ற உணர்ச்சி என்னை ஆட்கொண்டது. மேல்கீழ் இல்லாதபோது நான் மேலிருந்தாலும், கீழிருந்தாலும், குதித்தாலும் அதற்குப் பொருளில்லை அல்லவா? ஆனால் குதித்தால் கைகால் முறியும் என்று எனது உலகறிவு உணர்த்திக் கொண்டே இருந்ததால் என்னை மறந்த நிலையில் ஏதாவது பயங்கர நிகழ்ச்சி ஏற்பட்டுவிடும் என்று நான் பயந்து கொண்டே இருந்தேன். எனது பெயர் எனக்குத் தேவையில்லை என்று கருதத் தொடங்கினேன். பெயர் வைத்துக்

கொள்வது முட்டாள்தனம் என்று கருதத் தொடங்கினேன். நான் எனது உடலற்று எனது தந்தைக்குள் ஒடுங்கிவிடவும், தந்தை உடலற்று, இவ்வாறு எல்லாமே உடலற்று மூலப்பகுதியாக ஒடுங்கிவிட வேண்டும் என்றும் கருத ஆரம்பித்தேன். எதிரே வருபவரை, அணைத்துக் கொள்ள வேண்டும் என்ற அடங்காத ஆர்வம் எனக்கு ஏற்பட்டது. என்னை நானே சுவாசித்துக் கொண்டும், சாப்பிட்டுக் கொண்டும் இருந்தேன். ஆகவே, சாப்பிடுவதும், சுவாசிப்பதும் கூட பயங்கரமான காரியங்களாயின.

நாட்கள் கழிந்தன. எனது உடல்நலம் பாதிக்கத் தொடங்கியது. சமயத்துறையில் எவ்வளவுதான் வாழ்வை விட்டும், மண்ணைவிட்டும் விலகிச் சென்றாலும் அங்கே நிலைகொள்ள முடியவில்லை. வாழ்வும் மண்ணும் தமது ஆற்றலைக் கொண்டு என்னைப் பிரிந்து செல்லாமல் தலையிட்டன. அவற்றை விட்டுவிட்டு முற்றிலுமாகப் பிரிந்து விடமுடியவில்லை. அவை தமது பலத்தைக் காண்பிக்கத் தொடங்கின. உடல்நலம் பாதிக்கத் தொடங்கியது. தரையில் நடப்பதுகூட எனக்கு நான்தான் நடக்கிறேனா, நடப்பதுஎன்பது எப்படி? உண்மையாக இருக்கும் என்ற ஐயத்தைக் கிளப்பியது. நான் நடக்காமலா நகர்ந்து கொண்டிருக்கிறேன்? நான் நடக்காமல் வேறு யார் நடக்கிறார் என்றெல்லாம் சிந்தித்தேன். நானே கடவுளானால் எனக்கு எதற்குக் கடவுள் என்று கருதத் தொடங்கினேன். உலகமே கடவுளானால், உலகத்தை விட்டு வேறுகடவுள் ஏன்வேண்டும்? என்னை நானே தியானித்துக் கொள்வதா? இது எவ்வளவு பொருளற்றது. எனக்குக் கடவுள் வேண்டாம். தியானம் வேண்டாம். உலகில் மக்கள் வழிபடும் பல்வகைக் கடவுளைக் கண்டு கடவுளாகிய நான் ஏன் அஞ்சவேண்டும். அந்தக் கடவுள்கள் கடவுள்களே அல்ல. உலகமும், உயிர்களும் இயக்கமும்தான் இருக்கின்றன. கடவுள் இல்லை. பொருள்தான் மிச்சம். பொருள் இயக்கந்தான் மிச்சம். பொருளும் இயக்கமுமே கடவுள். தனியே கடவுள் என்பதற்கு அர்த்தம் கிடையாது. உலகம்தான் உண்மை. கடவுள் பொய். எல்லாப் பொருள்களும் ஒன்று என்றால் வேறுபாடு காணப்படுவதற்குக் காரணமே கிடையாது. பொருள்கள் ஒன்றுபட்டிருப்பது ஒருவகையில் உண்மையானாலும் வேறுவகையில் வேறுபட்டு இருப்பதும் உண்மைதான்! நானே கடவுள், உலகம். கடவுள் என்ற தத்துவம் இதனை ஏன் அடக்கிக் கொள்ள முடியவில்லை?

உடல்நலம் கெடக்கெட அச்சம் எனக்கு மிகுந்தது. இரயிலில் ஊர்வரும்போது இரயில் பெட்டியின் வாயிலருகில் நிற்கப் பயந்தேன். இரயிலில் எனக்கு முன்னர் அமர்ந்திருந்த குழந்தையாக நான் மாறிவிட்டது போல நான் உணர்ந்தேன். குழந்தையின் மனம் வெற்றிடமாகிவிட்டது போல உணர்ந்தேன். குழந்தைப் பருவத்திற்குப் பின்னர், நான் அறிந்தவை

அனைத்துமே பொய்யாகிவிட்டதால், குழந்தையின் வெற்றிட மனமே உண்மை மனம் என்று கருதினேன். படிப்பில் என் கருத்துக் குறைந்தது. இறுதியாக நான் படிக்கவே விரும்பவில்லை. படிப்பை இடையில் நிறுத்திவிட்டு ஊருக்கே வந்துவிட்டேன்.

பக்தி என்னை விட்டுப் பறக்கத் தொடங்கியது. நிதானம், எனக்கு அச்சம் தருவதாக ஆகிவிட்டது. எனக்கு நோய் வந்தது. பலமாதம் படுக்கையில் கிடந்தேன். மேலும் தியானத்தில் அத்வைதப் பயிற்சியில் ஈடுபட்டால், ஒருசில மாதங்களிலேயே உயிர் நீங்கிவிடும் என்ற நிலை வந்தது. பலமாதங்கள் ஓய்வு கொண்டேன். என் மனத்தில் தெளிவு ஏற்படத் தொடங்கியது. சமயம், பொய், உலகமும் உலக வாழ்வுமே உண்மை என்ற நம்பிக்கை ஏற்பட்டது. அத்வைதத்தின் எல்லைக் கோட்டைக் கடந்து அடுத்த அடியை வைக்க வேண்டுமானால் பொருள் முதல் தத்துவத்தில்தான் கால் வைத்தாக வேண்டும் என்ற தெளிவு பிறந்தது. அத்வைதத்தின் மூலம் வந்ததால்தான் பொருள் முதல்வாதம் உறுதியானது. உண்மையானது என்ற உறுதி ஏற்பட்டது. முன்னர் தனி வாழ்க்கையில் மகிழ்ந்திருந்தது போய் இனிச் சமுதாய வாழ்வில் பற்று ஏற்பட்டது. இழந்த வாழ்வை, உலகை, அறிவை, மீண்டும் பெற்றுவிட்டது போன்ற தெம்பு ஏற்பட்டது. என்னை நானே துன்பத்தால் சுடர்ஏற்றிக் கொண்டதைப் போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. துன்ப அனுபவத்தின் மூலம் நான் சுடர் பெற்றதாக உணர்ந்தேன்.

சமயத்தால் ஆட்கொள்ளப்பட்டுச் சமயத்திற்குள் நுழைந்து அதனை அனுபவித்து முற்றிலுமாக அனுபவித்து பின்னர் அதிலிருந்து வெளியேறிச் சமயத்தைக் துறந்த வரலாறு இது. எனது அனுபவத்தில் ஏதாவது சில குறைகளைச் சுட்டிக்காட்டி, நான் அனுபவித்தது சமய அனுபவமே அல்லவென்று கருதி எனது முடிவுகளுக்கு மாறான முடிவுகளை எனது அனுபவத்திலிருந்து பெற நண்பர்கள் சிலர் முயற்சி செய்யலாம். சமயத்தின் பல்வகை அனுபவம் எனக்கு இல்லை என்பதையும், எனது உடல் நலம் கெடாமல் இருந்திருக்குமானால், மேலும் சில மாதங்கள் எனது அனுபவம் தொடர்ந்திருக்கும் என்பதையும் நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் எனது உடல்நலம் குறைவதற்கே சமய அனுபவம் காரணமாக இருந்திருக்கிறது என்பதனையும் எத்தகைய சமயமாக இருந்தபோதிலும் எனது அனுபவம் சிறிய அளவில் ஒருமாதிரி என்பதையும் நண்பர்கள் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். தவிர, அனுபவத்துடன் ஒட்டிய சிந்தனைகளை நண்பர்கள் எவ்வாறு மறுத்துரைப்பார்கள். மறுத்துரைக்க முடியும் என்பது எனக்குப் புரியவில்லை.

பண்டரிபுரம் போய்வந்த பெரியவருடன் சில நாட்களுக்கு முன்னர் உரையாடிக் கொண்டிருந்தேன். முழுமையாகச் சமயத்தை

மேற்கொள்பவர்கள் இன்று யாருமே இல்லை. ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால் என்பது போலத்தான் சமயத்தலைவர்கள் முதல் பலருமே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். நமது நாட்டில் இன்று கோயில்கள் எல்லாம் வியாபாரம் நடைபெறும் இடங்களாகிவிட்டன. சமயச் சொற்பொழிவாளர்கள், சமய நூல்களைப் படித்து அவற்றின் கருத்துக்களைக் காசுக்காகத்தான் விற்கிறார்கள் உண்மையாகச் சமயத்தைப் பின்பற்றுபவர்க்கும் சமுதாயத்திற்கும் தொடர்பே இருக்க முடியாது. இவ்வாறு உண்மையாகப் பின்பற்றுபவரால் சமுதாயத்திற்கு எவ்வகைத் தீங்கும் நேரமுடியாது என்று எடுத்த எடுப்பிலேயே கூறிவிட்டுக் கோயில்கள் பெரியவர்கள் பற்றிய தமது அனுபவங்களை அவர் விவரித்தார். இவர் கருத்தை நான் இங்கு எடுத்துக் கூறுவதன் நோக்கம், சமயம் இன்று பின்பற்றத் தக்கதாக, பின்பற்றப் படுவதாக இல்லை என்பதை அனுபவத்தின்மூலம் பார்த்தவர்களே கூறுகிறார்கள் என்பதைச் சுட்டிக்காட்டத்தான். சமயத்தை அனுபவித்துப் பாராமல் அதனுடைய பெருமைகளைச் சிந்தித்து வானளாவப் புகழ்பவர்கள்தான் நமக்கிடையில் உள்ளனர். சமயம் என்பது ஞாயிற்றுக்கிழமைக்கோ, கோயில்களுக்கோ, சாமியார்களுக்கோ, சடங்குகளுக்கோ, மட்டும் சொந்தம். வாழ்வுக்குச் சொந்தமில்லை என்று இவர்கள் கருதுவதாகத் தெரிகிறது. வாழ்க்கையையே ஏதோ ஒரு சடங்காகப் பார்ப்பவர்களுக்குத்தான். இக்கருத்து ஏற்படமுடியும். தன் வாழ்வைத் தவிர உலகில் வேறு ஒன்றுமே இல்லை என்று இவர்கள் கருதவேண்டும்.

இவர்கள் சொல்லுக்கும், செயலுக்கும் தொடர்பற்றவர்களாக, சமுதாயத்திற்கும், தமக்கும் தொடர்பற்றவர்களாக இருந்தாலொழிய இவர்கள் இவ்வாறு கருத இடம்ஏற்படாது. இத்தகைய சூழ்நிலையில் சமயத்தை அனுபவித்துப் பார்க்க வேண்டும் என்று கருதி அதற்காகவே தன்னை ஒப்புக் கொடுத்தவருடைய அனுபவங்கள், பல புராணப் பேச்சாளர்களினுடைய வாய்வீச்சைக் காட்டிலும் மேலானவை என்றேதான் கருதுகிறேன். அனுபவத்தின்போது நான் கண்ட சில உண்மைகள் மீண்டும் இங்கே தெளிவுபடுத்துவது தேவை என்று கருதுகின்றேன். கடவுளைப் பார்க்க முடியும். அவருடன் உரையாட முடியும் என்பது உண்மை. எனது அனுபங்களின்போது நானே கடவுளாக உணர்ந்தேன். எனது சிந்தனைகள் அற்புதமான, தெய்வச் சிந்தனைகளாக இருந்தன. கடவுள் உண்மையா என்றால் உண்மைதான். ஆனால் இது எத்தகைய உண்மை என்பதுதான் கேள்வி. ஒருவன் பொய் கூறுகிறான் என்றால், பொய் என்ற அளவில் அது உண்மையே என்பதும், உண்மையில் அது பொய் என்பதும் உண்மைதானே? அதுபோலவேதான் கடவுள் உண்மையும் அல்லது கடவுள் பொய்யும்.

எனது அனுபவங்கள் முற்றுப் பெறும் தருவாயில்தான் நான் படித்த ஒரு புத்தகத்தின் கருத்து எனக்கு நன்றாக நினைவு இருக்கிறது. அமெரிக்காவில் புகழ்பெற்ற உளவியலாளராக இருந்த வில்லியம் ஜேம்ஸ் என்பவர் எழுதிய சமய அனுபவங்கள் (The Varieties of religious experience) என்ற நூலைத்தான் இங்கு குறிப்பிடுகிறேன். கடவுளைக் காணுதல் போன்ற நிகழ்ச்சித் தோற்றங்களின் உண்மையை அவர் உளவியல் முறையில் விவரிப்பதை நான் முழுமையாக ஏற்றுக் கொள்ள வேண்டியவனாக இருக்கிறேன். கடவுள் இருக்கிறார், அவரைப் பார்க்க முடியும், அவராகவே தான் ஆக முடியும். இவ்வாறு தனக்குத்தானே கூறிக்கொண்டு, நம்பும்பொழுது தன்னையறியாமலேயே இச்சிந்தனைகள் அடிமனத்தில் ஆழப்பதிந்து விடுகின்றன. இந்திய நாட்டில் இத்தகைய சிந்தனைகள், மனம் வளரத் தொடங்கிய நாள் முதல் பலவகை அலங்காரங்கள், அழகுகள், நிகழ்ச்சிகளுடன் மனத்தில் ஆழமாகத் திணிக்கப்படுகின்றன. அடிமனத்தில் திணிக்கப்பட்டுள்ள இச்சிந்தனைகள் நாளுக்குநாள் வேகம் மிகப்பெறுகின்றன. இச்சிந்தனைகள் தெளிவாக்கப் படுதலையும் உருப்பெறுதலையும் கோருகின்றன. இவற்றின் ஆற்றலுக்கு அடிபணிந்து நாம் சமயத்தில் ஈடுபட்டு உண்மைகாண முயற்சி செய்கின்றோம். மனத்தை ஒருமுகப்படுத்துதல் என்ற முறையில் பலவகை உலகச் சிந்தனைகள் நமது மேல் மனத்திலிருந்து தொடர்ந்து அகற்றிக் கொண்டே வருகின்றோம். இத்தகைய செயல் தொடர்ந்து நடைபெறுகின்றது. தியானம் இதற்கு நன்கு பயன்படுகிறது. பொருள்கள்பால் பற்றின்மை, கல்வி, உணர்ச்சி, முதலியவை இதற்குப் பயன்படுகின்றன.

இறுதியாக, அடிமனத்தை நேரிடையாகக் காணும்நாள் வருகின்றது. மேல்மனத்தின் தடை விலகிவிடுகிறது. பல ஆண்டுகள் தொடர்ந்து ஊக்கத்துடன் அடித்து உள்ளே செலுத்திய காட்சி கண்ணுக்கு முன்னர் தோன்றுகிறது. கடவுளை நாம் காணுகின்றோம். கடவுளை நாம் உணர்கின்றோம். நமது சிந்தனைகள் கடவுளின் சிந்தனைகளாகின்றன. காட்சியை உணர்வைப் பொறுத்தவரை, கடவுள், உண்மை. நம்மை நாமே கடவுளாகப் பார்த்துக் கொள்ளுகிறோம். நாமே உருவாக்கிக் கொண்ட பொய்யை மெய்யாகப் பார்த்துக் கொள்ளுகின்றோம். ஒருவகையில் கடவுள், உண்மை. மற்றொரு வகையில் கடவுள் பொய்யாகிறது.

எனது சமய அனுபவங்களை முரண்பாடுகளின் வளர்ச்சியால் ஏற்பட்ட தீர்வு என்ற முறையில் விளக்குவது மிகப்பொருத்தம் என்று கருதுகிறேன். சிறுவனாக இருந்த காலத்திலிருந்து குடும்பத்தில் பலவகையான துன்புறுத்தலுக்கும் இகழ்ச்சிகளுக்கும் நான் ஆளாகிவந்த காரணத்தாலும், எனது உறுப்புக்குறை காரணமாக விளையாட்டுத்

தோழர்களின் கடுமையான இகழ்ச்சிளுக்கு உள்ளான காரணத்தாலும், துன்பங்களைப்போக்குபவன் இறைவன் என்ற முறையில் இறைவனிடம் பெருமளவு பக்தி செலுத்தினேன். இந்நிலை பல ஆண்டுகள் தொடர்ந்து வந்தது. குடும்பத்தின் பல்வகைச் சூழல்களைக் காரணகாரிய ஆராய்ச்சி கொண்டு தீர்க்க முடியும் என்பது என் நம்பிக்கை எனது உறுப்புக் குறைவானது நான்இகழப் படுவதற்குப் பொருத்தமான காரணம் அன்று. இத்தகைய சிந்தனைகளும் தொடர்ந்து எனக்கு இருந்து வந்தன. அதாவது உலகச் சூழ்நிலைகள்தான் எனது துன்பங்களுக்குரிய காரணங்களாக இருந்து வந்தன என்பதை உணரும்போதே, எனது துன்பங்கள் நீங்குவதற்கும் உலகச் சூழ்நிலைகளின் மாற்றமே காரணமாகித் தீரவேண்டும் என்று நம்பி வந்தேன். கடவுளை நம்புவதால், கடவுள் அருளைப் பெறுவதால், துன்பங்கள், இகழ்ச்சிகள் நீங்கும் என்பதும்ஒரு நம்பிக்கை. இவ்வாறாக எனக்குள், நம்பிக்கையும், சிந்தனையும், அறிவும், பலக்குறைவும், பலமும் வேறுவகையில் கூறினால், சிந்தனையும், உலகமும் அதாவது, உலகத்தைப் பற்றிய பழங்காலம் முதற் தொடர்ந்து வந்த சிந்தனையும், நிகழ்கால உலகநிலைகளைப் பற்றிய சிந்தனையும் எனக்குள் தொடர்ந்து போராடி வந்தன. இவ்வகையான இரு முரண்பாடுகளுக்கிடையில் போராட்டம், பல ஆண்டுகள் எதற்கும் வெற்றி ஏற்படாமல் நடைபெற்றது. சிலசமயம் ஒன்றின் கை ஓங்கும். சிலசமயம் மற்றதன் கை ஓங்கும். ஆனாலும் போராட்டத்தில் முடிவு ஏற்படவில்லை.

இறுதியாகச் சமய அனுபவத்தில் நான் ஈடுபட்டபோது அற்புதமாக, அருமையாக இந்திய நாட்டின் மிக உயர்ந்ததாகக் கருதப்பட்ட சிந்தனையின் கை ஓங்கிநின்றது. அச்சிந்தனைக்கு வாழ்க்கை நிலையை ஒப்படைத்தேன். சிந்தனை அரசாட்சி செலுத்தியது. இடையிடையே வாழ்வுநிலையின் எதிர்ப்பும், கிளர்ச்சியும் முற்றிலும் அடங்கி விடவில்லை. வாழ்வுநிலையைப் புறக்கணித்துச் சிந்தனை தன்னையே முதலாகக் கொண்டு எழுந்து நின்றபொழுதெல்லாம் வாழ்க்கை பின்தங்கிச் சென்றது. சிந்தனை கடுமையாகச் சீறி கடுவேகமாகச் சென்றது. வாழ்க்கை இகழப்பட்டது. மறுக்கப்பட்டது. உணவு, நடை, உடை ஆகியவை புறக்கணிக்கப் பட்டன. சிந்தனை பயங்கரமாகச் சென்று இறுதியில் வாழ்க்கையை முற்றிலும் புறக்கணித்த சூழ்நிலையில் மேற்கொண்டு செல்ல முடியாமல் தயங்கித் தடுமறி வருந்தி நின்றது. மேற்கொண்டு அச்சிந்தனை வளரமுடியவில்லை. உடல், உலகம், தனது ஆற்றலை இனி வற்புறுத்தியாக வேண்டும். சிந்தனையால் சீரழிந்த இவை மேலும் தம்மை அழித்துவிட அனுமதிக்க முடியாது. அதாவது எனது அனுபவங்கள் தொடர்ந்திருக்குமானால் நானே கடவுள் என்ற சிந்தனை வெற்றி பெற்றிருக்கும். சிந்தனை எதன் தொடர்பில்லாமல் தான் வாழமுடியாதோ அந்த உடலை அழித்துத் தான்

வெற்றி பெற்று, தான் பெறும் வெற்றியாலேயே தான் இறந்திருக்கும். அதுபோலவே, வாழ்வானது, இனியும் தன்னைப்பறி கொடுத்துவிட முடியாதுஎன்ற நிலையில் தனது ஆற்றலை உணர்த்தத் தொடங்கியது. இறுதியில் வாழ்வு வெற்றி பெற்றது. சிந்தனையின் பைத்தியக்காரத்தன்மைக்குத் தெளிவு ஏற்பட்டது.

இவ்வனுப்வங்களைச் சிந்தனைக்கும் வாழ்வு நிலைக்கும் ஏற்பட்ட போராட்டமாக வர்ணிக்கும்போது, இப்போராட்டம், வெற்றுப் போராட்டம் அன்று என்பதையும் இதனால் இரண்டும் நன்மை பெற்றன என்பதையும் நாம் பார்க்க வேண்டும். சிந்தனை தெளிவு பெற்றது. வாழ்வு உறுதி பெற்றது. வாழ்வு நிலைக்கும் சிந்தனைக்கும் இடையிலான போராட்டம் நடைபெறுகிறது. உலகவரலாறு முழுவதும் இத்தகைய போராட்டமாகத்தான் உள்ளது. சிந்தனையற்ற வாழ்வுநிலையும், வாழ்வுநிலையைப் புறக்கணித்த சிந்தனையும் வாழ முடியாது. சூழ்நிலைகளுக்கு ஏற்ப இரண்டும் வளர்ச்சி பெறுகின்றன. ஒன்றைத் தாண்டி மற்றது முன்செல்லவே விரும்பும். இத்தகைய போட்டியால்தான் இரண்டாலும் நன்மை விளைகின்றது. சிலசமயம் இப்போட்டி மிகக் கடுமையாகிவிடுகிறது. சிந்தனை தனித்துவெல்ல நிற்கும்போது அவலம் தோன்றுகிறது. வாழ்க்கை மட்டுமே வெல்ல நிற்கும்போது, வாழ்க்கை கேவலமாகி விடுகின்றது. கேலியாகி விடுகின்றது. இரண்டும் இசைந்து நின்றால் வளர்ச்சி ஏற்படுகிறது.

சமயம் என்பது சிலவகையான வாழ்வு நிலைகளின் விளைவாக ஒருவிதத்தில் தோன்றியது. அத்தகைய வாழ்வு நிலைகள் மாறிய பிறகும் சமயம் வாழ்ந்து விடப்பார்க்கிறது. சமயத்தின் உருவத்திற்குள் அடங்கியுள்ள பல்வகைச் சிந்தனைகளும் வாழ்க்கை நிலைகள் மாறுவதற்கேற்ப மாறிவந்து தீரவேண்டும். மாறுவது என்பது என்றுமே சிறிய அளவிலாவது போராட்டமில்லாமல் மாறிவிட இயலாது. இந்தப் போராட்டம் சமுதாய அளவிலும், தனிப்பட்டவர் அளவிலும் நடைபெறத்தான் வேண்டும். இத்தகைய போராட்டம் என் அளவில் நடைபெற்றது பற்றி இங்கு குறிப்பிட்டுள்ளேன். என் அளவில் ஏற்பட்ட முடிவையும் இங்கு கூறியுள்ளேன். இத்தகைய போராட்டத்தை தீவிரப்படுத்திவிட வேண்டும் என்பது என் ஆவல். சமயத்தைப் பின்பற்றுபவர்கள் உண்மையாகவே பின்பற்ற எல்லா வகையான முயற்சிகளையும் செய்ய வேண்டும். அல்லது வாழ்க்கையே உண்மை என்று கருதி அதற்காக வாழ வேண்டும். உண்மையாகவே சமயத்தைப் பின்பற்ற முயற்சி செய்தால்தான் சமயத்தை அனுபவித்துப் பார்த்து வெளியேற முடியும். ஆற்றில் ஒருகால், சேற்றில் ஒருகால் என்பது என்றும் யாருக்குமே கூடாது. சமயவாதிகளுக்கும் நான் இதை ஓர் அறைகூவலாகவே முன்வைக்க விரும்புகிறேன். ‘சமயத்தை

நீங்கள் முழுமையாக வாழ்ந்து பார்த்தீர்களா? வாழ்ந்து பார்க்கவில்லையானால் வாழ்ந்து பார்க்க உண்மையான முயற்சியை மேற்கொள்ளப் போகிறீர்களா? இல்லையா? சமயத்திற்கு நாங்களே காவலர்கள் என்று வாய்ப்பந்தல் இடுவதை நிறுத்திவைத்துவிட்டு உண்மையிலேயே காவலர்களாக இருக்க முயற்சிசெய்ய வேண்டுமா, கூடாதா? உண்மையாகச் சமயத்தைப் பின்பற்ற விரும்பாமல் சமயத்தைப் பின்பற்ற முடியாமல் புறக்கணிப்பவர்களை நீங்கள் இகழ்வுரைகள் பல கூறக்காரணம் என்ன? இந்த இரட்டை வாழ்க்கையை எத்தனை நாட்களுக்குக் கடைப்பிடிக்கப் போகிறீர்கள்? உங்களால் சமயமும் உருப்படுவதில்லை. உலகமும் உருப்படுவது இல்லை? உங்கள் வாழ்க்கை உருப்படாத வாழ்க்கை. ஆகவே சமயத்தை வாழ்ந்து காட்டி நிரூபிக்க வேண்டியது உங்கள் கடமை. இதை ஓர் அறைகூவலாக நீங்கள் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்'.

## பார்வை நூல்கள்


1. காந்த தத்துவம் - வேதாத்திரி மகரிஷி
   வேதாத்திரி பப்ளிகேசன், ஈரோடு - 1990
2. தீர்க்கமான மனம் - ஜே.கிருஷ்ணமூர்த்தி
   கண்ணதாசன் பதிப்பகம், சென்னை 1993
3. ஆத்ம தரிசனம் - எம்.எஸ்.உதயமூர்த்தி
   கங்கை புத்தக நிலையம், சென்னை.
4. மனோவசியம் - பி.சி.கணேசன்
   நர்மதா பதிப்பகம், சென்னை 17.
5. புல் தானாகவே வளர்கிறது - ரஜ்னிஷ்
   கண்ணதாசன் பதிப்பகம், சென்னை 1995
6. ஸ்ரீ அரவிந்த யோகி - கு.பா.ரா
   அல்லயன்ஸ், சென்னை.
7. HINDUISM - R.C.Zaehner
   Oxford University, London - 1962.
8. AN IDEALIST VIEW OF LIFE - Dr.Radhakrishnan
   Oxford, London - 1929.
9. ஒரு குடிசையிலிருந்து - (தமிழில்) இராவணன்
   ஆதித்தமிழர், மதுரை 1994
10. பகவன் கீதை உண்மைப் பொருள் - அ.கி.நாயுடு
    முப்பால் நிலையம், கோவை 1968.
11. காக்கி உடையும் காவிக் கொடியும்
    (தமிழில்) நா.தர்மராஜ், ஓரியண்டல் லாங்மன், சென்னை-1993
12. சீக்கிய சமய இயக்கம் - (தமிழில்) ந.முத்துமோகன்
    மதுரை - 10. 1995
13. புத்துலகம் படைக்கவே - எக்ஸ்.டி.செல்வராசு
    பவுல் இறையியல் வெளியீடு, திருச்சி 1991

14. விடுதலைச் சுவடுகள் - பெரி.சிங்.ஜானி, இராயன், சுதாகர்
அனல் வெளியீடு, திருச்சி-1. 1995

15. விடுதலையை நோக்கி - பாஸ்டியன் விலங்கா
தமிழ்நாடு இறையியல் கல்லூரி, மதுரை.

16. CHRIST THE LIBERATOR - John Desrocher
Centre for Social Action, Bangalore 1977.

17. A PRIEST ENCOUNTER WITH REVOLUTION
Joshep Vadakkan - Christyan Society, Bangalore - 1974.

18. சமயம் பற்றி - ஜார்ஜ் தாம்சன்
நேத்ரா, சென்னை - 35. 1988

19. வேதங்கள் - ஓர் ஆய்வு - சனல் இடமருகு
அலைகள், சென்னை 1994

20. மார்க்சியமும் பகவத்கீதையும் - சர்தேசாய், திலீப்போஸ்
என்சிபிஎச், சென்னை 1983

21. வகுப்புவாதமும் மதச்சார்பின்மைக்கான போராட்டமும் - ஈஎம்எஸ்,என்.ராம், கே.எம்.பணிக்கர், வி.ஸ்ரீதர் சவுத் ஏசியன், சென்னை 1992

22. ஐரோப்பாவில் தத்துவ இயல்

23. பௌத்த தத்துவ இயல்

24. இஸ்லாமிய தத்துவ இயல்

25. இந்து தத்துவ இயல்

26. விஞ்ஞான லோகாயதவாதம்
22-26 மேல் குறிப்பிட்ட 5 நூல்கள் - இராகுல சாங்கிருத்தியாயன்
என்சிபிஎச், சென்னை-1985.

27. GANDHI'S/RELIGION/AND POLITICS
Dr.Radhakrishnan - Oxford, London.

28. THE STORY OF PHILOSOPHY - Will Durant.

29. கீழை மேலை நாடுகளின் மெய்ப்பொருள் வரலாறு
2ஆம் தொகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம் - 1970

30. வேர்களைத் தேடி - பிரிட்டோ, பீட்டர், சிங்
அனல் வெளியீடு, திருச்சி - 1. 1994.

## ஞானியின் பிற நூல்கள்

1. இந்திய வாழ்க்கையும், மார்க்சியமும்
2. மணல் மேட்டில் ஓர் அழகிய வீடு
(ஜே.கே.பற்றிய திறனாய்வுக் குறிப்புக்கள்)
★ 3. கல்லிகை (கவிதைகள்)
★ 4. தொலைவிலிருந்து (கவிதைகள்)
5. மார்க்சியமும், தமிழ் இலக்கியமும்
6. படைப்பியல் நோக்கில் தமிழ் இலக்கியம்
★ 7. தமிழகத்தில் பண்பாட்டு நெருக்கடிகள்
★ 8. எண்பதுகளில் தமிழ் நாவல்கள்
★ 9. ஸ்டாலின் பிரச்சனை (தொகுப்பாசிரியர் - ஞானி)
★ 10. பொன்னீலனின்
புதிய தரிசனங்கள் - கலையும் அரசியலும்
(தொகுப்பாசிரியர் - ஞானி)

குறிப்பு:

★ குறியிட்ட நூல்கள் கிடைக்கும் இடம்:
விஜயா பதிப்பகம்,
கோவை - 1.



கடவுள் மனிதனைப் படைத்தார் என்பது, சமயம். மனிதன் கடவுளைப் படைத்தான் என்பது, வரலாறு. கடவுள் என்பது, ஒரு கருத்தாக்கம். கடவுள்/மதத்தின் வேர்கள். வரலாற்றிலும் மனிதவாழ்விலும் ஆழமாகப் பதிந்துள்ளன. வெட்டவெட்ட, தழைக்கின்றன இந்த வேர்கள். அந்நியமாதலும் அரசும் இருக்கும் வரை, மதம் அழியாது என்றார் மார்க்ஸ். அதுவரை கடவுளுக்கு சாவு இல்லை.

நீட்சே, டாக்டர் இராதாகிருட்டினன், இராகுல சாங்கிருத்தியாயன், ஜே.கே., ஓசோ, வேதாத்திரி, முதலிய அறிஞர்களின் அனுபவங்கள், மற்றும் ஆய்வுகள் வழியே கடவுளின் வேர்களை ஞானி தேடுகிறார். இவர்களைக் கடந்தும் செல்லுகிறார். கிறித்துவத்தில் கிளைகள் விரித்த விடுதலை இறையியல், இந்து மதத்தில் ஏன் தோன்றவில்லை என்று கேள்வி எழுப்புகிறார். இந்து மதத்தை எதிர்மறையாக அணுகினால், இந்துத்துவமே வலிமை பெறும் என்கிறார். பகுத்தறிவுப் பார்வையின் போதாமையைச் சுட்டுகிறார். பின்-நவீனத்துவ அணுகல் முறையிலும் மதத்தை ஆராய்கிறார். மார்க்சியத்தை வளப்படுத்துகிறார். தொகுத்துச் சொன்னால், மதத்தின் வழியே மனிதனின் வேர்களைத் தேடுவதாகிய இந்த நூல், தமிழில் ஓர் அசலான ஆய்வு நூல்.

-கோவை வாணன்.